சுபகிருது, தைமீ 7உ

# கல்கி

ஜனவரி, 20உ 1963

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 22

தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

இதழ் 25

# ஞான ஜயந்தி

ஸ்வாமி விவேகானந்தர் இம்மண்ணுலகில் தோன்றி நூறுண்டுகள் நிறைவுறும் புனிதநாளை நாடு நகரமெல்லாம் கொண்டாடுகிறது; பாரதத்தில் மட்டுமின்றி உலகெங்கிலும் அன்று மகானுக்கு அஞ்சலி செலுத்தப்படுகிறது.

புராதன வேதாந்த மதம் சிதிலமடைந்து, கிறிஸ்துவ மதமும் மேநாட்டு வாழ்முறைகளும் இங்கு வேர் விடத் தொடங்கிய சமயத்தில் அவர் தோன்றி வேதாந்த சமயத்தின் வித்தினை மீண்டும் ஊன்றியதற்காக இந்திய நாடு அவரை நிறைந்த நன்றியுடன் வணங்குகிறது. உலகம் முழுவதற்கும் பொதுவானது நமது வேதாந்த மதம். பாரதத்தின் அந்தப் பரதத்துவ ஞானத்தைப் பாருக்கெல்லாம் வழங்கியதற்காக உலகமே அவரிடம் நன்றிக்கடன் பட்டுள்ளது. குடத்து விளக்காக இருந்த விவேகானந்தரைக் குன்றின்மீதேற்றி, உலகம் முழுவதும் அவரது பெருமையையும், பாரதத்தின் பெருமையையும் அறியச் செய்ததில் தமிழ் நாட்டுக்கு மிகவும் முக்கியமான பங்கு உண்டு. ஸ்வாமிஜி அமெரிக்கப் பயணம் மேற்கொள்வதற்கு மிகவும் சகாயமளித்தது தமிழகம்தான். இதை எண்ணி நாம் தனிப்படப் பெருமிதம் கொள்ளலாம்.

சென்ற நூற்றாண்டில், கல்விக்குப் பெயர்பெற்ற வங்காளம் இந்து மதத்தை நீத்து விடத் தயாராகி வந்தது. வங்காளத்தில் இந்து மதம் வீழ்ந்திருந்தால் அதனைப் பின்பற்றித் தேசத்தின் இதர பகுதிகளிலும் நமது பண்டையப் பண்பு அடி நாசமாகியிருக்கும். அந்தத் தருணத்தில்தான் ராமகிருஷ்ண முனிவர் தோன்றினார். மின்சாரத் தேக்கம் போல அவரிடம் புராதன பாரத ஞானம் உறைந்து விளங்கிற்று. இந்த ஞான மின்சாரத்தைத் தேக்கத்திலிருந்து எடுத்து உலகெங்கும் பரப்பும் பணிக்கே விவேகானந்த ஸ்வாமியின் புண்ணிய ஜனனம் நிகழ்ந்தது. இந்து மதமும் நிலைபெற்றது. விவேகானந்தப் பெருந்தகையையும் ராமகிருஷ்ண பகவானையும், சிவசக்தியாகவும், நரநாராயணராகவும் நினைந்து வழிபடுபவர்கள் உண்டு. மகாகவி பாரதியார்,

'ஆதி சூரவன் அச் சங்கரன் ஞானந் தங்குமிந்நாட்டினைப் பின்னரும்
நண்ணினனெனத் தேகரும் அவ் விவேகானந்தப் பெருஞ் சோதி'

என்று அவரை ஆதிசங்கரரின் அவதாரமாகப் போற்றுகிறார். இவ்வாறு அவதார புருஷராக மதிக்கப்பெற்ற விவேகானந்தரோ வெனில், உருப்படைத்த பரமபுருஷன் ஓர் அவதாரமாக வருகிறான் என்ற கருத்துக்கும் மேலாக, ஜீவராசிகள் அனைத்துமே உருவும் பெயருமற்ற பரம்பொருள் என்ற உன்னத வேதாந்தத்தை அநுபவித்துப் போதித்தார்.

இப்படி வேதாந்த வேந்தனாக விளங்கி நமக்கு எண்ணத்தாலும் எட்டாத உயர் நிலைகளை அநுபவித்தவர் ஸ்வாமிகள். எனினும் நடைமுறை உலகில் வாழும் பாமரர்களுக்கும் அளப்பரும் கருணை காட்டியவர் அவர். இந்திய மக்களுக்கு ஆன்மீகத்தை அளிப்பதற்குமுன் அன்னமளியுங்கள் என்று அறைகூவியவர் அவர். அதே போல, அன்புத் தத்துவத்தை நாளும் விண்டு கூறியபோதிலும், அந்த அன்பு ஆண்மைக்கு விரோதமானதல்ல என்று கூறித் தேசத்தை வீறு கொண்டெழச் செய்த சிம்மம் அவர்.

கலைஞராக, கவியாக, இசை வல்லுநராக, பன்மொழிப் புலவராக, ஆண்டியாக, ஆண்மையின் உறைவிடமாக, அடியாராக, அறிவுப் பெட்டகமாக, அருட் செல்வராக—எல்லாமாக இருந்து உலகு உய்ய உபாயம் வகுத்த உத்தமருக்கு நம் அஞ்சலிகளைச் சமர்ப்பிக்கிறோம்; அந்தத் தீர ஞானி தோன்றாத்துணையாக இருந்து நமக்கு அறிவும் உரமும் அளித்து அன்பு வழிப்படுத்த வேண்டும் என மன, மொழி, மெய்களால் பிரார்த்திக்கிறோம்.

# அவசர நிலையா, அநுகூல நிலையா?

முடிவில்லாத யுத்த அபாயத்தைக் காட்டி நாட்டில் அவசர நிலையை நிரந்தரமாக்குவது நீதியாகாது; இவ்வாறு செய்தால் ஜனநாயகம் அழிந்து போகும்.

சீனர்கள் போரை நிறுத்திவிட்ட பின் இந்தியத் தரப்பிலும் யுத்த நடவடிக்கை நின்று விட்டது. 'நீங்கள் ஆக்கிரமித்த பகுதி எல்லாவற்றையும் திருப்பிக் கொடுத்தாலொழிய நாங்கள் பேச்சு வார்த்தைக்கு இணங்க மாட்டோம்' என்று இந்தியா சீனாவுக்குப் பதில் சொல்லி வருகிறது. நம் நிபந்தனைக்குச் சீனா சம்மதிக்கவில்லை என்பது தெளிவான பின்னும் நாம் யுத்தம் தொடரவில்லை.

இரு புறத்திலும் சண்டை நின்று விட்டது. யுத்தக் கைதிகளைத் திருப்பியனுப்புகிறார்கள். திருப்பியனுப்பும் தளவாடங்களையும் பெற்றுக் கொண்டு வருகிறோம். ஆக, சண்டை அறவே நின்று போனாற் போன்ற நிலை ஏற்பட்டுள்ளது. என்றாலும் சண்டையை முன்னிட்டுக் கொண்டு வந்த அவசரச் சட்டம் மட்டும் அப்படியே இருக்கிறது. காரணம் ஏககட்சி ஆட்சிக்கு அது அநுகூலமாக இருப்பதுதான்.

நாட்டின் பாதுகாப்பு, ஜனநாயகம் இரண்டையுமே இழந்து விடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். பிரசவ காலத்தில் தாய், சேய் இருவரது சௌக்கியத்தையும் பேண வேண்டுமென்பது போல, பாதுகாப்பு ஜனநாயகம் இரண்டையும் பேண வேண்டும். இரு உயிர்களும் காப்பாற்றப்பட வேண்டும். காங்கிரஸ் சர்க்காருக்கோ ஜனநாயகத்தைப் பற்றி அதிகம் கவலையில்லை. போர்க்களம் தூங்குகிறபடியால் தங்கள் சுறுசுறுப்பைப் பிரஜைகளின் உரிமைகளைக் குலைப்பதில் ஆட்சியாளர்கள் திருப்பி யிருக்கிறார்கள். ஜனநாயகத்தில் ஆழ்ந்த பற்று இல்லாதவர்களுடைய நிர்வாகத்தில் உள்ள நாடுகளின் நிலை இதுதான். நெருக்கடி உண்டாகி அவசர நிலை பிரகடனமானவுடன் கூச்சம் இல்லாமல் ஏகாதிபத்தியம் தலையெடுக்கிறது.

வெளி எதிரி ஒருவனை எதிர்ப்பதே அவசர நிலைக்குக் காரணமாகக் காட்டப்படுவதால், இந்தச் சந்தர்ப்பத்தில் மக்களின் சுதந்திர உரிமைகளை எடுத்துக் காட்டுவது தேச பக்தியின்மை என்பதாகத் திரித்துக் கூறப்படுகிறது. இந்தக் குற்றச்சாட்டுக்குப் பயந்துதான் எதிர்க் கட்சித் தலைவர்களும் ஜனநாயகத்துக்கு ஏற்பட்டிருக்கும் அபாயத்தை எடுத்துச் சொல்லத் தயங்கி வருகிறார்கள். ஜனநாயகத்தை 'வேண்டாத மாமியாராக்கி' வீட்டை விட்டு அனுப்ப வழியேற்பட்டு வருகிறது. சோஷலிஸம் சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கு அதிக அதிகாரம் தந்தது. அவசர நிலையோ காங்கிரஸ் கட்சிக்கு, அதில் உள்ள சில்லறைகள் உட்பட எல்லாருக்கும் அதிகாரம் செய்ய வாய்ப்பு அளித்து விட்டது.



நாட்டிலுள்ள சிந்தனையாளர்களெல்லாம் ஆழ்ந்து ஆராய வேண்டிய தருணம் இது. இரு புறங்களிலும் அசல் போர் இன்றி நிரந்தரப் பனிப் போர் மட்டுமே இருக்கும்போது, நாட்டுப் பாதுகாப்பு செவ்வனே நடைபெற மக்கள் எந்த அளவுக்கு உரிமைகளை விட்டுக் கொடுக்க வேண்டும் என்பதை ஜன நாயகத்திலும் சுதந்திரத்திலும் நம்பிக்கையுள்ளவர்கள் நிர்ணயம் செய்ய வேண்டும். அந்த அளவுக்குமேல் நாட்டு மக்கள் சுதந்திரம் பறிபோக அநுமதிக்கலாகாது. சகஜமான அரசாங்கக் காரியக் கிரமங்களை ஓரளவுக்குத்தான் மாற்றலாமே ஒழிய, பரிபூரணமாக இந்தியப் பாதுகாப்புச் சட்டத்துக்கே சர்வாதீனம் அளித்து அதன் கீழே நிர்வாகத்தைக் கொண்டு வருவது தகாது.

சீனா ஆக்கிரமித்த பகுதிகளை நாம் உண்மையாகவே திருப்பிப் பெற முயல வேண்டும். சீனாவுடன் பேச இணங்காததாலேயே நாம் அவர்களை முறியடித்து வருவதாக நாட்டில் ஒரு தப்பான அபிப்பிராயம் உண்டாக்கப் பட்டிருக்கிறது. நம்மைத் தற்காத்துக் கொள்வதுடன் எதிரியைத் தாக்கவும் பலப்படுத்திக் கொள்வதே இன்று இந்தியா செய்ய வேண்டியதாகும்.

# என்ன சேதி?

## ருஷ்யாவின் உதவி

ருஷ்யா தருவதாகக் கூறிய 'மிக்' விமானங்கள் கடைசியாகக் கப்பல்களில் வருவதாகச் செய்திகள் வந்திருக்கின்றன. விமானம் என்பது ஆகாயத்தில் பறக்கக் கூடியதுஎன்று நாம் நினைத்திருந்தோமே, ஆனால் ருஷ்ய விமானங்கள் கப்பலில் வருகின்றனவே என்று யாரும் கவலைப்பட வேண்டாம். பறக்கக்கூடிய விமானங்களைத்தான் அனுப்புவார்கள்.

சீனாவுடன் குடும்பச் சண்டையே தவிர வேறில்லை என்று ருஷ்யப் பிரதமர் சீனாவுக்கும் ருஷ்யாவுக்குமிடையே இப்போது ஏற்பட்டுள்ள மன வேறுபாட்டை விளக்கியிருக்கிறார். ஒரு குடும்பத்தில் அண்ணன் தம்பிகளிடை சண்டை ஏற்பட்டால் அது அதிக நாள் நீடிப்பதில்லை. நல்லது கெட்டது ஏற்பட்டால் உடனே கூடிவிடுவார்கள். 'நல்லது' ஏற்பட்டால் ஒன்று சேரத் தவறினாலும் கெடுதல் ஏற்படும்போது நிச்சயமாக ஒன்று சேருவார்கள். ருஷ்யா, தன்னுடைய தர்மசங்கடத்தை இந்தியாவுக்கு எவ்வளவு நாசூக்காக எடுத்துச் சொல்ல முடியுமோ அவ்வளவு நாசூக்காக 'மிக்' விமானத்தைக் காலம் தாழ்த்தி அனுப்புவதன் மூலமும் 'குடும்பச் சண்டை' என்று சொல்வதன் மூலமும் விளக்கித்தான் வருகிறது.

## தங்கக் கட்டுப்பாடு

இந்திய நாட்டில் உள்ள மக்களின் தங்க நகை மோகத்தைக் குறைக்க, தங்கத்தின் தரத்தையே குறைத்துச் சாதாரண இரும்புக்குச் சமமாக ஆக்க இந்திய சர்க்கார் முயன்று வருகிறார்கள். பதினாலு காரட் தங்கம், அதாவது மிக மட்டமான தங்கக் கலப்பு உலோகத்தில் நகைகள் செய்தால் போதும் என்று உத்தரவு பிறப்பித்திருக்கிறார்கள்.

நமது நாட்டில் ஏழை மக்கள் ஆபத்துக் காலத்தில் உதவக் கூடியவை தங்க நகைகள் என்று கருதிவந்திருக்கிறார்கள்.




தங்கத்தை அடகு வைத்துக் குடும்பத்தில் நடக்கும் நல்லவை பொல்லாதவைகளைச் சமாளித்துவந்திருக்கிறார்கள் மானமாக.

வெளி நாடுகளிலிருந்து திருட்டுத்தனமாக வரும் தங்கத்தை வராதபடி தடுக்க வழி காணாமல், ஏழை மக்களைத் துன்புறுத்திப் பீதி விளைவிக்கும் வழியைப் பின்பற்றுகிறார்கள். மக்களிடம் இருக்கும் தங்க நகைகளும் மற்றப் பண்டங்களும் நாட்டின் நிரந்தரச் செல்வம். அவற்றைச் சர்க்கார் எடுத்துக்கொண்டு விடுவார்கள் என்கிற பீதியை உண்டாக்கும் முறைகள் மடத்தனமாகும்.

## விஞ்ஞான விழா

விஞ்ஞான வளர்ச்சியை நோக்கமாகக் கொண்டு, அமெரிக்கத் தகவல் நிலையத்தின் ஒத்துழைப்புடன் சென்னைப் பல்கலைக் கழகம் ஒரு விஞ்ஞானப் பட அரங்கத்தைத் தமிழகத் தலைநகரில் நடத்துகிறது. அரங்கை ஒட்டித் தலைசிறந்த அமெரிக்க விஞ்ஞானிகள் பலர் சென்னைக்கு நேரில் வந்து, இந்நாட்டு விஞ்ஞானிகளுடன் ஆலோசனை நடத்துவர். ஜனவரி 20 முதல் 24ம் தேதி முடிய நடை பெறப் போகும் இந்த அமெரிக்க விஞ்ஞானத் திரைப்பட அரங்கினைச் சென்னை பல்கலைக் கழகத் துணை வேந்தர் டாக்டர் ஏ. லக்ஷ்மணசுவாமி முதலியார் தொடங்கி வைக்கிறார்.

பட அரங்கு நடைபெறும் நான்கு நாட்களிலும் பல்கலைக் கழகப் பரீட்சை மன்றத்தில் ''விஞ்ஞானம் மூலம் முன்னேற்றம்'' என்னும் கண்காட்சியும் நடைபெறும். கட்டணம் ஏதுமின்றியே அனுமதிச் சீட்டு பெற்றுக் கண்டு களிக்கலாம். பாரத மக்களிடையே விஞ்ஞான ஆர்வம் பெருக நற்றுணை புரியும் அமெரிக்கத் தகவல் நிலையத்தினரைப் பாராட்டுகிறோம்.

## லாலா ஸ்ரீராம் மறைவு

ஐசுவரியத்தில் மட்டுமின்றி அன்பிலும் பெரும் செல்வராக விளங்கிய லாலா ஸ்ரீராம் அவர்களின் மறைவு தொழில் துறையின் மகத்தான நஷ்டமாகும். இன்று நாட்டில் நற்பெயர் எடுத்துள்ள பல தொழில் நிறுவனங்களின் அதிபராகிய லாலா ஸ்ரீராம் அவர்கள் தொழில்களோடு தொழிலாளர்களையும் சேர்த்துப் பேணி வளர்த்தவர். ஈகையில் சிறந்து விளங்கிய அவர் நாட்டின் கல்வி முன்னேற்றத்தில் பெருத்த ஈடுபாடு கொண்டு பல தொழில் நுட்பக் கல்லூரிகளை ஸ்தாபித்தவர். இந்திய வர்த்தக சபையின் தோற்றுவாய்க்குக் காரணமான முக்கியஸ்தர்களில் ஒருவரான லாலா ஸ்ரீராம், அந்தச் சபையின் தலைவராகவும் சிறப்புப் பணி ஆற்றியிருக்கிறார். லாலா ஸ்ரீராம் அவர்களின் தொழில் அறிவையும், அன்பு இதயத்தையும் அறிந்தவர்கள் நாட்டின் தொழில் அபிவிருத்திக்கு நீண்ட நெடும் காலமாகச் சேவை செய்துள்ள அந்தப் பெரியாரை ஒரு போதும் மறக்க மாட்டார்கள்.













## ஆனந்தத்துக்கு ஆண்டு நூறு

அமர வாழ்வு எய்த உகந்தது எது, உகாதது எது என்று பகுத்துப் பார்க்கும் விவேகம் ஏற்பட்டுவிட்டால் அதுவே அழியாத ஆனந்தமாகும். இந்த ஆனந்தத்தின் உருவகமான ஸ்வாமி விவேகானந்தரின் நூற்றாண்டை இன்று கொண்டாடும்போது அவரது சரிதத்துடன் தொடர்பு கொண்ட படங்களை வெளியிட்டு நேயர்களுக்கு ஆனந்தமளிக்கிறோம்.

மேலே காண்பதுதான் நூறாண்டுகளுக்கு முன்பு கல்கத்தாவில் ஸ்வாமி விவேகானந்தர் பிறந்த இல்லம்.

அவரது ஞானத்தாயாகிய பரமஹம்ஸரையும் ஊனுடலுக்குத் தாயாகிய புவனேசுவரி தேவியையும், மக்களுக்கு அபயம் அளித்த ஸ்வாமிகளின் திருக் கரத்தின் ரேகைகளையும் கையெழுத்தையும் இந்தப் பக்கத்தில் காண்கிறீர்கள்.

**எதிர்ப்பக்கத்தில்:** இந்தியாவெங்கும் சுற்றி அலைந்த பரிவிராஜக ஆண்டியாகவும், மேநாடுகளில் ஞான அரசனைக் கம்பீரம் ததும்பத் தோன்றிய சில கோலங்களிலும், தியான யோக நிலையிலும் விவேகானந்தரைத் தரிசிக்கிறீர்கள். டெட்ராய்ட்டிலிருந்து தமது சிகாகோ சிஷ்யை ஒருத்திக்கு அவர் எழுதிய கடிதத்தின் புகைப்படத்தையும் காணலாம். மேலே யிருப்பதுதான் ஸ்வாமிஜிக்கு உலகப் பிரசித்தி அளித்த உலக சமய மகாநாடு நடைபெற்ற கட்டடம்—சிகாகோ நகரில் உள்ளது. அங்கு இதர பிரதிநிதிகளுடன் அவர் வீற்றிருப்பதையும் காணலாம். அடியில் இருப்பது அவரது புனித உடலத்தின் அஸ்திகள் மீது எழுப்பிய பேலூர் ஆலயம்.



# போகிற போக்கில்....

**சிட்டுக் குருவி**

நேபா முனைத் தோல்விகளுக்கு நமது பிரதமர் இரு காரணங்கள் கூறுகிறார். கடல் மட்டத்திலிருந்து துருப்புக்களை 14,000 அடி உயரத்துக்குத் 'திடீர்' எனக் கொண்டு போனதால் அவர்களால் சரிவரச் சண்டை போட முடியவில்லை என்பது முதற் காரணம். இரண்டாவது காரணம், மாவ் சே துங் தம் போர் முறைப்படி பெருவாரியான துருப்புக்களைக் கொண்டு வந்தார் என்பது.

இவ்விரு காரணங்களையும் நாம் சற்று முன் யோசனையோடு நடந்திருந்தால் சமாளித்திருக்கலாம். இந்தத் திட்டத்தைப் பலர் முன்கூட்டியே கூறியதும் உண்டு என்னும்போது நமது வருத்தம் அதிகரிக்கிறது.

1960ம் ஆண்டிலேயே ஹிமாலயப் பிரதேச சேனை ஒன்று ஏற்படுத்தவேண்டும் என்ற கோரிக்கை எழுந்தது. இந்தச் சேனையில் மலை ஜாதியினரையும் மற்றவர்களையும் சேர்க்க வேண்டும் எனப் பலர் கூறினார்கள். இப்படிச் செய்திருந்தால் நேருஜி சொல்லுவது போல் 'திடீரென' 14,000 அடி உயரத்துக்குப் போய் ஜவான்கள் இன்னலுற்றிருக்க நேர்ந்திராது.

இரண்டாவது காரணமும் இப்படியேதான். சீனர்கள் ஒவ்வொரு சண்டையிலுமே 100 பேர்களை அனுப்பும் இடத்தில் 1000 பேர்களை அனுப்புவதை வழக்கமாக வைத்திருக்கிறார்கள். கொரியாவிலும் இப்படித்தான் நடந்ததாக அங்கு போரை நிர்வகித்த அமெரிக்கத் தளபதிகளான மக் ஆர்தரும், அவருக்குப் பின்னால் வந்த ஜெனரல் ரிட்ஜ்வேயும் கூறியிருக்கிறார்கள். பத்தே ஆண்டுகளுக்கு முன் நடந்த அந்தச் சண்டையை யாரும் எளிதில் மறப்பதற்கில்லை. மாவ் சே துங்கின் போர்முறையே இப்படித்தான். முப்பது ஆண்டுகளுக்கு முன்னால் அவரது படைகள் சியாங்கின் துருப்புக்களோடு மோதும் போதும் பின்னர் ஜப்பானியரோடு போர் நிகழ்த்திய போதும் ஒன்றுக்குப் பத்தாகத் துருப்புக்கள் சென்றதாக வரலாறு இருக்கிறது. சடுகுடு விளையாட்டில் ஆட்களைப் பிடித்து 'அமுக்குவது' போல் அவர்கள் அமுக்குவார்களாம். இந்த மாதிரி செய்வதில் ஆட்சேதம் அதிகமாகுமே தவிர காரியம் நடந்து விடும். ஆள் பலுவைக் குறைக்க முயலும் சீனர்களுக்கு இது ஏற்ற ராணுவ தந்திரம்தானே! நேபா

## தேவியின் திருமுன்னர்

குருமகராஜ் பரமஹம்ஸ ராமகிருஷ்ணரை நரேந்திரர் ஆசிரயிக்கத் தொடங்கியிருந்த காலம். நரேந்திரரின் வீட்டில் இன்னலுக்கு மேல் இன்னலாக நேர்ந்து கொண்டிருந்தது. வறுமைப் பிணி சொல்லி முடியாது.

''என் குடும்பத்தின் வறுமை தீர வேண்டுமென்று உங்கள் அம்பிகையிடம் எனக்காகப் பிரார்த்திக்கலாகாதா?'' என்று குருநாதரை நச்சரித்து வந்தார் நரேந்திரர். அதனைத் தட்டிக் கழித்து வந்த தவமுனிவர் ஒரு நாள் மெல்ல நகைத்தார். ''நீயே அவளிடம் கேளேன். உன் வேண்டுகோளை அவள் நிச்சயம் கேட்பாள்'' என்று சொல்லி பவதாரிணியின் சந்நிதிக்குச் சீடரை அனுப்பி வைத்தார். நரேந்திரர் சந்நிதியிலிருந்து திரும்பினார். ''என்ன வேண்டிக் கொண்டாய்?'' என்றார் பரமஹம்ஸர். ''பக்தியும் ஞானமும் தந்தருள வேண்டுமென்று அன்னையைக் கேட்டுக் கொண்டேன்'' என்றார் நரேந்திரர். ''ஆனால், நீ விரும்பியது வறுமை நீக்கமல்லவா?'' என்று ராமகிருஷ்ணர் அவருக்கு நினைவுபடுத்தி அவரை மீண்டும் தேவியிடம் அனுப்பினார். இரண்டாம் முறையும் தம் உத்தேசப் பிரார்த்தனையை அம்பிகையின் திருமுன்னர் மறந்தே விட்டார் நரேந்திரர். அவளிடம் அன்பையே கோரிவிட்டுக் குருவிடம் ஏகினார். மூன்றும் முறையாகத் தெய்வத் தாயிடம் சீடனை அனுப்பினார் ஆசான். இப்போது நரேந்திரருக்கு வீட்டின் தரித்திர நிலை நன்கு நினைவிருந்தது. எனினும் தேவியின் திருமுகத்தையும் திருவடியையும் கண்ட அவருக்கு அவளிடம் இந்த அற்பமான பிச்சை கேட்க நா எழவில்லை. 'அவளுக்கு நாம் சொல்லித்தான் தெரிய வேண்டுமா? தன்னையே தரவல்ல ஜகதீசவரியிடம் கேவலம் உலக ஐசுவரியத்தையா கேட்பது?' என்று நாணினார் நரேந்திரர். குருநாதரிடம் பரமசாந்தராகத் திரும்பினார். ''என்ன, வறுமை தீர வேண்டிக் கொண்டாயா?'' என்றார் அருளாளர், ஏதுமறியாதவர் போல. ''இல்லை. அவ்வாறு நான் வேண்டிக் கொள்ளவில்லை. நீங்களும் எனக்காக வேண்டிக் கொள்ள வேண்டாம்'' என்று கணீரெனக் கூறினார் நரேந்திரர். இந்த நரேந்திரர்தாம் பின்னர் ஞானேந்திரராகிய ஸ்வாமி விவேகானந்தராகப் பரிணமித்தவர்.




பம்பாயில் சென்ற டிசம்பர் முப்பதாம் தேதியன்று ஸ்ரீ கே. எம். முன்ஷி அவர்களின் எழுபத்தியாறுவது பிறந்த தினம் விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. இந்திய முறைப் படி அவரது ஜன்ம நக்ஷத்திரமாகிய திரு ஆதிரையன்று சென்னையில் முன்ஷியின் பிறந்த தினம் வெகு சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. டாக்டர் ஸி. பி. ராமஸ்வாமி அய்யர் அவர்கள் தலைமைவகித்த இவ்விழாவில் முன்ஷியின் இந்துமத நாகரீக சேவை குறித்த ஆங்கில நூல் ஒன்றை ராஜாஜி வெளியிட்டார். வேலைப்பாடமைந்த வெள்ளிப் பேழையைத் தலைவ ரவர்கள் ஸ்ரீ முன்ஷிக்கு வழங்கினார். இப்பேழையின் அழகை முதன் மந்திரி திரு காமராஜு டன் ராஜாஜி ரசிப்பதையும், விழாவுக்குத் திரளாக வந்திருந்த மக்களையும் இங்கு காணலாம்.

---

முனையிலும் இப்படித்தான் நடந்திருக் கிறது. இதில் புதிது எதுவும் இல்லை. நாம் இதை எதிர்பார்க்காததுதான் புதிது.

லடாக் முனையில் சீனப் பிடாரிகள் ஹிந்தி, தமிழ் முதலிய பிறமொழி பேசு வதிலும் வியப்பில்லை. 1939ல் 'ஆசியா வுக்குள்' என்றொரு நூல் வெளி வந் தது. இதை எழுதிய ஜான் கன்த்தர், கம்யூனிஸ சேனையோடு பல நாட்கள் இருந்து பழகியவர். அவர்களின் போர் முறைகளை விவரிக்கும் இந்த ஆசிரியர், ஜப்பானியரோடு சண்டைக்குப் போன சீனன் ஜப்பானிய மொழியைச் சிறிது கற்றுக் கொள்ள வேண்டுமென விதிக்கப் பட்டதாகக் கூறுகிறார். "எங்களோடு சேருங்கள்" என்று அவர்கள் போர் முனையிலிருந்து ஜப்பானிய மொழியில் கத்துவார்களாம்! மாவ்சே துங் பழைய தந்திரங்களை இன்னும் விடவில்லை!

• • •

சட்டத் துறை மந்திரியே அட்டர்னி ஜெனரலாக ஆகலாம் என்றால் தபால் மந்திரியே தபால் டைரக்டர் ஜெனர லாகவும், சுகாதார மந்திரியே சர்ஜன் ஜெனரலாகவும், பாதுகாப்பு மந்திரியே சேனாதிபதியாகவும், ரயில்வே மந்திரியே எஞ்சின் டிரைவராகவும் ஆகலாமல் லவா? இப்படிஆனால் ஆண்டவனைத்தவிர நம்மை யார்தான் காப்பாற்ற முடியும்?

• • •

கேரள முதலமைச்சர் திரு சங்கர் ஒரு பரபரப்பான செய்தியைக் கூறு கிறார். கம்யூனிஸ்ட் மந்திரி சபை அங்கு நடக்கும் போது டெல்லி சர்க்கார் அந்த மந்திரி சபை விவகாரத்தில் தலையிட் டால் சீனாவே இந்தியாமீது படையெடுக் கும் என்று கம்யூனிஸ்ட் மந்திரிகள் மிரட்டியதாகக் கூறுகிறார். கேரள மாநிலப் பாதுகாப்புக் கமிட்டியில் கம் யூனிஸ்டு அங்கத்தினர்களைச் சேர்க்காத தற்கு இதுவும் இது போன்ற இதர காரணங்களும் உண்டு என்று திரு சங்கர் கூறுகிறார். பாதுகாப்புக் கமிட்டியில் கம்யூனிஸ்டைச் சேர்த்த 'பரந்த மனப் பான்மை'யின் ஏமாளித்தனத்தையும் தான் நாம் சென்னையில் கண்டு விட்டோமே!

ரூ. 2,000 பரிசுகளாக

# புதிதாகப் பிறந்த குழந்தைகளுக்கென புதிய

# மானேர்ஸ் அதிர்ஷ்டக் குழந்தை விழா

நற்செய்தி! மானேர்ஸ் அதிர்ஷ்டக் குழந்தை விழா, வரும் ஜனவரி மாதம் 1963—ம் ஆண்டிலிருந்து இரு மாதங்களுக்கு ஒரு முறையாக—வருடத்திற்கு ஆறு முறை நடைபெறும். ஒவ்வொரு விழாவின்போதும் ரூ. 2,000 பரிசுகளாக வழங்கப்படும்.

உங்கள் குழந்தை விழாவில் சேரும் விதம்: உங்கள் குழந்தையினுடைய பெயர், பிறந்த தேதி, நேரம், உங்கள் முகவரி ஆகியவற்றை எங்களுக்கு அனுப்புங்கள். இத்துடன் மானேர்ஸ் கிரைப் மிக்ஸ்சர் அட்டைப் பெட்டியின் மேற்புற மூடியொன்றினையும் இணைத்து அனுப்பவேண்டும்.

தேர்வாளர் குழுவினால் தேர்ந்தெடுக்கப்படும் தேதி, நேரக் குறிப்பிற்கு மிக நெருங்கினாற்போல் பிறந்துள்ள குழந்தைகளே வெற்றி பெறுவார்கள். இந்த அதிர்ஷ்டத் தொடரின் முதல் விழாவில் பங்குகொள்ளும் குழந்தைகள் இந்த ஆண்டு (1963) ஜனவரி, பெப்ரவரி மாதங்களில் பிறந்தவர்களாக இருக்கவேண்டும். கடைசித் தேதி 5-3-1963. நுழைவுக் கூப்பன்களையும், மற்ற விவரங்களையும் உங்கள் கடைக்காரரிடமிருந்து பெற்றுக்கொள்ளுங்கள்.

முதற் பரிசு ரூ. 1,250 (மாதம் ரூ. 22.60 வீதம் 5 ஆண்டுகளுக்கு)•.

2-வது பரிசு ரூ. 500 ரொக்கமாக 3-வது பரிசு ரூ. 250 ரொக்கமாக. நுழைவுக் கூப்பன்கள் அனுப்பவேண்டிய முகவரி: மானேர்ஸ் லக்கி பேபி பெஸ்டிவல், தபால் பை, எண். 10116, பம்பாய்—1.

• டெபர்டு ஆனியுடி பாலிசி




அடுத்தடுத்த மாதங்களில் பிறந்த குழந்தைகளுக்கென நடத்தப்படும் மானேர்ஸ் கிரைப் மிக்ஸ்சர் விழா விளம்பர விவரங்களின் அறிவிப்புகளைக் கவனித்து வாருங்கள்.



**மானேர்ஸ் கிரைப் மிக்ஸ்சர்**
குழந்தைகளைச்
சிரித்த முகத்துடன் வைத்திருக்கிறது.

GEOFFREY MANNERS & CO. LTD.

ASP/GM/(R)/3/11 TAM

# பாரதமே, மறவாதே!



பாரத நாடே! உன்னுடைய பெண்மையின் இலட்சியம் சீதாதேவியும், சாவித்திரியும், தமயந்தியும் என்பதை மறவாதே. நீ தொழும் தெய்வமாகிய உமாபதி யோகியரில் சிறந்த யோகி, தியாகியரில் சிறந்த சங்கரன் என்பதை மறவாதே. இந்தியனே, உன் மணமும், பணமும் வாழ்வும் ஐம்புலன்களால் எய்தக் கூடிய இன்பத்துக்காக ஏற்பட்டதல்ல; உன் ஒருவனுடைய சுய இன்பத்துக்காக ஏற்பட்டதல்ல என்பதை மறவாதே. அம்பிகையின் நைவேத்தியபீடத்தில்அவளுக்குநிவேதனமாவதற்கே ஒவ்வோர் இந்தியனும் படைக்கப்பட்டிருக்கிறான் என்பதை மறவாதே. ஜகன்மாதாவுடைய இயல்பின் பிம்பமே இந்தியாவின் சமூக அமைப்பு என்பதை மறவாதே. இழிந்த குலத்தோரும், அறிவற்றவரும், வறியர்களும், செருப்புத் தைப்போரும், தோட்டிகளும் உன்னுடன் இரத்த சம்பந்தமுள்ள சோதரர் என்பதை மறவாதே.

இந்தியனே, நீ வீரனுவாய், தீரனுவாய், துணிவு பெறுவாய்! நீ ஓர் இந்தியன் என்பதில் பெருமிதம் கொள். 'நான் ஓர் இந்தியன், எல்லா இந்தியர்களும் என் உடன் பிறந்தோர்' என்று பெருமையோடு பறையறைவாய். அங்கவீனராயினும், அநாதையாயினும் எல்லோரும் உன் சோதரர் என்று கொள். 'அந்தணனாயினும், அரிஜனனாயினும் இந்தியர் யாவரும் என் சோதரர்கள்' என்று முழங்கு. நீ ஆடையில்லாத ஆண்டியாயினும் தாழ்வடையாதே. 'எல்லா இந்தியரும் என் உடன்பிறந்தோர்; எல்லா இந்திய மக்களும் என் உயிர்; இந்தியாவின் தேவ தேவிகளே நான் வழிபடும் தெய்வங்கள்; இந்திய மக்கட் குலமே என் குழந்தைப் பருவத்துத் தொட்டில் — அதுவே என் வாலிபப் பருவத்தில் மணம் தந்த மலர் வனம் — அதுவே முதுமையில் நான் அடையப் போகும் காசியும் பரமபதமுமாகும்' என்று உரக்கக் கோஷமிடு. 'பாரத மண்ணே எனக்கு விண்ணுலகு; பாரதத்தின் சிறப்பே என் சிறப்பு' என்று முழங்கு.

''உலகின் தாயே, எனக்கு ஆண்மையைத் தா! பராசக்தியே, என் பலவீனத்தை ஒழித்துச் சக்தி அருள். என் இயலாமையைப் போக்கி என்னை ஆண்மகனுக்கு'' என்று அல்லும் பகலும் பிரார்த்தனை புரிந்து வா.

— ஸ்வாமி விவேகாநந்தர்



# பர்கலி




10 சிகரெட்டுகள்
30 ந.பை.

## நல்ல சுவை
## மணமுள்ள புகை

✡ ஒவ்வொரு பர்கலி பாக்கெட்டிலும் காணப்படும்
நட்சத்திரம் பிரசித்தி பெற்ற டபிள்யூ.டி. & எச்.ஒ. வில்ஸ் தரத்தின் உத்திரவாதமாகும்

BKC-13 TM

# மாதர் மன்றம்



வெகு நாட்களுக்குப் பிறகு மங்களம்மாள் வீட்டில் மாதர் மன்ற அங்கத்தினர்கள் கூடினார்கள்.

''என்ன சுபத்ரா! எங்கே கண்ணிலேயே காணவில்லை?'' என்றாள் மங்களம்மாள்.

''எங்கே மாமி வர முடியறது? இந்த டிசம்பர் ஜனவரி மாதம் வந்தாலே எதற்கும் நேரம் போதாமல் ஒரு பரபரப்பு ஏற்பட்டு விடுகிறது!'' என்றாள் சுபத்ரா.

''அதிலும் இந்தக் குளிரில் காலையில் எழுந்திருக்கும் போதே மணி ஏழரையாகி விடுகிறது!'' என்றாள் கலோசனா.

''இந்தக் குளிர் காலத்திலேதான் விடியற் காலை எழுந்திருக்க வேண்டும் என்று பெரியவா சொல்லியிருக்கா!'' என்றாள் மங்களம் மாமி.

''நீங்க சொல்ற பெரியவா காலத்திலே ஊரிலே மூன்று நான்கு சங்கீத சங்கங்களும், ராத்திரி பன்னிரண்டு மணி, ஒரு மணி வரை சங்கீதக் கச்சேரிகளும் நடந்து கொண்டிருந்ததாமா? அவர்கள் எல்லாம் காலா காலத்திலே படுக்கப் போவா, பொழுது விடியும் முன்னே எழுந்திருந்திடுவா! நாம்தான்படுக்கப் போகும் போதே மறு நாள் கணக்கு வந்துடறதே!'' என்று பொரிந்தாள் கலோசனா.

''அப்படியானால் இந்த வருஷம் சங்கீத சீஸனிலே ஒரு கச்சேரி விடலை என்று சொல்!'' என்றாள் மங்கையர்க்கரசி அம்மாள்.

''அதெப்படி எல்லாக் கச்சேரியும் கேட்க முடியும்? சிலவற்றுக்கு நேரில் போனேன். சிலவற்றை ரேடியோவில் கேட்டேன்!'' என்றாள் கலோசனா.

''நான்கூட ரேடியோவிலேதான் கேட்டேன்'' என்று அலமேலு மாமி ஆரம்பித்து, ''ஒரு நாள் என்ன ஆச்சு தெரியுமோ?'' என்று கேட்டாள்.

''என்ன மாமி, என்ன ஆச்சு?'' என்று எல்லோருமாகச் சேர்ந்து கேட்டார்கள்.

''ஒரு நாள் ராத்திரி சாப்பிட்டு விட்டு ரேடியோ வைத்தோம். நாதஸ்வரக் கச்சேரி சுகமாகக் கேட்டுக் கொண்டிருந்தது. கச்சேரி கேட்பதற்கு வெளிச்சம் எதற்கு என்று 'லைட்'டை அணைத்துவிட்டுப் படுத்தவாக்கிலே கேட்டுக் கொண்டிருந்தோம். அப்புறம் என்ன ஆச்சு தெரியுமோ? பாண்ட் சத்தம் மாதிரி வந்தது! நாதஸ்வரம் நின்று விட்டது போல் இருக்கிறது. ரேடியோவை நிறுத்துவோம் என்று எண்ணிக்கொண்டு எழுந்திருந்து பார்த்தால் பொல பொல வென்று பொழுது விடிஞ்சிருக்கு! ரேடியோவில் மறுநாள் புரோகிராம் தொடங்கியிருக்கு!'' என்று அலமேலு மாமி தனக்கு ஏற்பட்ட அனுபவத்தைக் கூறினாள்.

''இந்த வருஷம் கலாக்ஷேத்ரா மாணவிகள் கண்ணப்பர் குறவஞ்சி என்று ஒரு புது நாட்டிய நாடகத்தைப் போட்டார்கள்! ரொம்ப நன்றாக இருந்தது!'' என்று கூறினாள் சுபத்ரா.

கலோசனா, ''தமிழிசைச் சங்கத்தில் ஒரு நாள் காலை கபிலை நாடகம் என்று நாட்டிய நாடகம் வழுவூர் ராமையா பிள்ளை குழுவினர் போட்டார்கள். அதுவும் நன்றாக இருந்தது. திருகோகர்ணம் ஊர் பற்றிய புராணக் கதை. காமதேனு பூமியில் சாபத்தின் காரணமாகப் பசுவாகப் பிறந்து, காதில் கங்கை நீரைக் கொண்டு வந்து ஈசனை அபிஷேகம் செய்து முக்திபெற்ற கதை. பாடல்கள் நன்றாக இருந்தன!'' என்று போட்டி போட்டுக் கொண்டு கூறினாள்.

''என்ன அம்மா, நீங்கள் ஒரு கச்சேரிக்கும்போக வில்லையா?'' என்று மங்கையர்க்கரசி அம்மாளைப் பார்த்துக் கேட்டாள் மங்களம்மாள்.

''எங்கே இந்த வீட்டு வேலை முடியற மட்டும் வேறெதிலேனும் மனசு போனால் தானே? தை முடிவதற்குள் கிருகப் பிரவேசம் பண்ணியாகணும்!'' என்று கூறினாள் மங்கையர்க்கரசி.

''என்னம்மா, உங்கள் வீட்டுக்கு என்ன பெயர் வைக்கப் போகிறீங்க?'' என்று கேட்டாள் கலோசனா.

''அது இன்னும் முடிவு பண்ணவில்லை'' என்றாள் மங்கையர்க்கரசி.

''நான் சொல்கிறேன் அம்மா! உங்கள் வீட்டுக்கு ''மங்கை'' என்று பெயர் வையுங்கள்!'' என்றாள் சுபத்ரா.

''வீட்டுக்கு உங்கள் பெயர் வைக்கிறது தான் அழகு! அதுதான் பாஷன்!'' என்றாள் கலோசனா.

மங்களம்மாள், ''ஜானகியம்மாள் தன் வீட்டுக்கு 'மிதிலா' என்று பெயர் வைத்திருக்கிறாள். சீதை பிறந்தது மிதிலையில் அல்லவா! அதை யொட்டி அப்படிப் பெயர் வைத்தாள்!'' என்றாள்.

''பெங்களூரிலே ஒரு மந்திரி வீட்டுப் பெயர் என்ன தெரியுமா? சொன்னால் நம்ப மாட்டீர்கள். 'லேடீஸ் ஸிளப்'பாக்கும்!'' என்றாள் சுபத்ரா. எல்லோரும் கலகல வென்று சிரித்தார்கள்.

---

உலகத்துக்கெல்லாம் ஆண்டவன்தான் தந்தை என்பதைப் பூஜையின் போது ஒப்புக் கொண்டு நடைமுறையில் எல்லா மக்களையும் நம் சோதரர்களாகப் பாவிக்காதிருப்பதால் பயன் என்ன?

—ஸ்வாமி விவேகானந்தர்

---

''இப்படி எல்லாருக்கும் சிரிப்பு மூட்டுவதைப் பார்த்துத்தான் அந்த வீட்டின் பெயரை 'சாந்திக் கிருகம்' என்று மாற்றி விட்டார்கள்'' என்றாள் சுலோசனா!

''ஓயாமல் 'சண்டைக்குத் தயாராகுங்கள்' போருக்குத் துணியுங்கள்!' என்று பிரசாரம் செய்யும் மந்திரி வீட்டுக்குச் 'சாந்தி கிருகம்' என்று பெயர்! ஆகா! என்ன பொருத்தம்!'' என்றாள் மங்களம்மாள்.

''அப்படித்தான், பிச்சை எடுத்துப் பிழைப்பவனுக்குத் தனகோடி என்று பெயர் வாய்க்கவில்லையா?'' என்றாள் மங்கையர்க்கரசி அம்மாள்.

''நீங்கள் சொன்னீர்களே, 'வாய்க்கிறது' என்று. அது நீங்கள் சொன்னவருக்கே பொருந்தும். குழந்தையாக இருக்கும்போது ஒருவரின் அதிர்ஷ்டத்தைப் பற்றி என்ன தெரியும்! லட்சாதிபதியாக வாழ்வான் என்று எண்ணித்தான் தனகோடி என்று பெயர் வைக்கிறோம். அவன் பிட்சாதிபதியாகப் போனால் நாம் என்ன செய்ய முடியும்! வீட்டுக்குப் பெயர்வைக்கும்போது சற்று யோசித்து வைக்கலாமே!'' என்றாள் மங்களம்மாள்.

''யோசித்தால் தூக்கம் வரும்!'' என்றாள் அலமேலு மாமி! எல்லாரும் 'கொல்' என்று சிரித்தார்கள்.

''எல்லா யோசனையும் தூக்கம் ஊட்டுகிற யோசனையா என்ன? சில சமயம் ஏதாகிலும் நினைத்தபடியே படுத்துக் கொண்டோமானால் அதே யோசனையில் ஆழ்ந்து, வந்த தூக்கம் கலைந்து போகிறது. அப்படித்தான் அன்றைக்கு, மந்திரிபாட்டீல் கிருஷ்ணா கோதாவரி நதிகளைத் தம்முடைய புதல்விகள் என்று சொன்னார்! இது பொருந்துமா என்றுஏதோ யோசனை போச்சு! தூக்கமே பிடிக்கல்லே!'' என்றாள் மங்கையர்க்கரசி அம்மாள்.

''ஏன்?'' என்றாள் சுபத்ரா.

''ஏன் என்று என்ன கேள்வி? நம்ம ஊரிலே நதிகளைத் தாயாகத்தான் மதிப்பது வழக்கம். நதிகளின் நீர் பாய்ந்து வயல்கள் வளம் கொழித்து, மக்கள் வாழ்வதால் மக்களைப் பேணும் தாயாகத்தான் நதிகளைச் சொல்வார்கள். கம்பர்கூட, அயோத்தியில் பாயும் சரயு மக்களின் தாயாகப் பேணி வளர்த்தாள் என்று கூறியிருக்கிறார். ஆகவே, மகாராஷ்டிர மக்கள் பெற்ற கிருஷ்ணா கோதாவரியை ஆந்திர மக்களுக்குக் கலியாணம் செய்து கொடுத்ததாக மந்திரி பாட்டீல் சொன்னது கொஞ்சம் எனக்குக் கூடச் சிந்தனையைக் கிளறத்தான் செய்தது'' என்றாள் மங்களம்மாள்.

''சிலப்பதிகாரத்திலே என்ன சொல்லியிருக்கு, தெரியுமா? காவேரி சோழ மன்னனை மணக்க வரும் கன்னி என்று சொல்லியிருக்கிறது. இன்று மக்கள்தான் ராஜாக்கள். அதனால் பாட்டீல் சொன்னதிலும் தவறில்லை என்று தோன்றுகிறது'' என்றாள் சுபத்ரா.

''என்னைக் கேட்டால் மந்திரி பாட்டீல் ஆந்திர மக்களிடம், 'கிருஷ்ணா கோதாவரியைப் பழைய காலத்துக் கணவர்களைப் போல் வீட்டுக்குள் அடைத்துவைத்துக் கொள்ளாமல் சற்றுஅண்டை அயலில் போய்விட்டு வரச் சுதந்திரம் அளியுங்கள்' எனச் சிபாரிசு செய்திருந்தாரானால் நன்றாக இருந்திருக்கும். கிருஷ்ணா நதித் தண்ணீர் சென்னைக்கு வந்தால் சென்னை நகர மக்கள் குடிதண்ணீர்ப் பிரச்னை தீர்ந்து விடும் அல்லவா?'' என்றாள் சுபத்ரா.

''தண்ணீர் என்றவுடன்தான் ஞாபகம் வருகிறது. குழாயில் மூன்று மணிக்கெல்லாம் தண்ணீர் வரும்; பிடித்து வைத்துக் கொள்ள வேண்டும்!'' என்று சொல்லிக் கொண்டே அலமேலு அம்மாள் புறப்பட்டாள். மற்றவர்களும் பின்தொடர்ந்தார்கள். **—இந்துமதி**

## குண்டுகளின் மத்தியில்....

அமெரிக்காவின் மேற்கு ராஜ்யங்களில் விவேகானந்தர் சுற்றுப் பிரயாணம் செய்து கொண்டிருந்த சமயம். அங்கு ஒரு கிராமத்தில் மாட்டுப் பண்ணை நடத்தி வந்த சில கல்லூரி மாணவர்கள் அவருடைய பிரசங்கத்தைக் கேட்டார்கள். பிரம்மானுபவத்தை எய்தவன் எந்த ஆபத்திலும் சமநிலை குலைய மாட்டான் என்று ஸ்வாமிஜி கூறியதைப் பரீட்சித்துப் பார்க்க விரும்பினார்கள் அவர்கள். அவரைத் தங்கள் கிராமத்தில் உரை ஆற்ற அழைத்தார்கள். மாட்டின் கஞ்சித் தொட்டியைத் தலைகீழாகப் போட்டு அதையே அவரது பிரசங்க மேடையாக்கியிருந்தனர். விவேகானந்தரும் அதன் மீதேறி உரையை நிகழ்த்தலானார்.

ஆகா, காதுகள் செவிடுபடும்படி அது என்ன ஓசை! ஸ்வாமிகளின் தோளையும், முகத்தையும் சுற்றி உராய்ந்தபடி துப்பாக்கி ரவைகள் அல்லவா பறக்கின்றன! அவரது சமநிலையைப் பரிசோதிக்க அந்த முரட்டு மாணவர்கள்தான் அத்தனை துப்பாக்கிகளைச் சுட்டிருக்கிறார்கள்! ஆனால் விவேகானந்தரோ இதனால் சற்றேனும் அதிர்ச்சியடைந்திருக்க வேண்டுமே! 'பிரம்மானுபவத்தை எய்தவன் எந்த ஆபத்திலும் சமநிலை குலைய மாட்டான்' என்ற வாசகத்தின் நிரூபணமாக அவர் தம்பாட்டில் நிதானமாகப் பிரசங்கத்தைத் தொடர்ந்து கொண்டேயிருந்தார். மாணவர்கள் அந்தத் தீரரைப் பணிந்தனர்.

# நந்தவனம் உங்கள் கருத்து

திரு சோமு அவர்கள் உண்டாக்கிய நந்தவனம் சாதாரண நந்தவனமல்ல. நறுமணம் கமழும் கணக்கற்ற மலர்கள் நிறைந்த நந்தவனம். அதைக் கல்கி வாசகர்களின் சொந்தமாக்கியதுமட்டுமல்லாமல் திருநெல்வேலி லட்சுமி விலாஸ் சாலைக் கடை அல்வாவின் ருசியையும் உணரச் செய்து கல்கி வாசகர்களின் சபாஷை பெற்றுவிட்டார் திரு சோமு.

ஸ்ரீவில்லிபுத்தூர்
7-1-63

**பி. இராசையா ஞானம்**

ஓவியக் கலைஞர் சிவகாமிநாதன் மடலிலே சித்திரங்கள் படித்தான்; அவனை உருவாக்கிய ஆசிரியர் அவர்களோ பெருநற்கிய தமிழ் ஓவியம் ஒன்றினை எங்கள் உள்ளக் கோயில்களில் பதித்து விட்டார். நெல்வேலிச் சீமை பழக்க முறைகளை எடுத்து ஆசிரியர் விவரித்துள்ளது போற்றத் தக்க முறையிலுள்ளது.

புதுதில்லி
3-1-63

**நா. ராஜாமணி**

திரு சோமு அவர்களின் நந்தவனம் ஓர் அரிய படைப்பு. நந்தவனத்தில் நடைபோட்ட எல்லாரும் இன்றும் நம் மனத்தில் உலவிக் கொண்டிருக்கின்றனரே! ஆசிரியரின் அழகு நடையையும், உயர்ந்த கருத்துக்களையும் பாராட்டுகிறேன். எங்களுக்கு மேலும் மேலும் நல்ல படைப்புக்களை வழங்கும் 'கல்கி'யையும் மனமாரப் பாராட்டுகிறேன்.

தஞ்சை
4-1-63

**பல்லவன்**

சமூகத்தில் இன்று முக்கிய பிரச்னையாகி விட்ட ஒரு ஆழ்ந்த [illegible] நயமாகப் புலப்படாமல் விளக்கியிருக்கிறார் திரு சோமு.

நாவலின் அடிப்படைக் கருத்து இந்நாட்டில் இனி வளர வேண்டிய ஒரு புதிய [illegible] சிந்தனையை வளர்க்கும் [illegible] கூறியிருக்கிறது. இக்கருத்து நாட்டு மக்களின் அகக் கண்களைத் திறக்கட்டும். சமுதாயத்தில் உள்ள குறைகளை இந்நாவலின் மூலம் விளக்கியுள்ள திறம் போற்றத் தக்கது.

கோயமுத்தூர்
4-1-63

**கரு. பெருமாள்**

நந்தவனத்தின் பெருமை சிறந்த மலர்களை உண்டாக்க செழுமையாய் பயிரிடுவதே ஆகும். ஆசிரியர் 'சோமு' அவர்கள் உயர்ந்த மலர்களைப் பயிரிட்டுச் செய்து அதன் நறுமணத் [illegible] மணம் [illegible] செய்து விட்டார். [illegible] விட்டாரே.

மாலதியும் சிவகாமிநாதனும் பல்லாண்டு வாழ்க! இவர்களை யெல்லாம் நன்கு சித்திரித்த ஓவியர் வினுவையும், பிரசுரித்து எங்களை மகிழ்வித்த கல்கி பத்திரிகையையும் வாழ்த்துகிறேன் நன்றி.

புதுக்கோட்டை
3-1-63

**பத்மாமணி**

'நந்தவனம்' என்ற சொல்லை உச்சரிக்கும் பொழுதே பூரிக்கும் இறைவனின் திருவடிகளை அர்ச்சிப்பதற்காகவே மலர்ந்து மணம் பரப்பும் மலர்களின் நினைவு நம்மை மெய் சிலிர்க்க வைக்கிறது. சிக்கல்கள் நிறைந்த நவீன சமுதாய வாழ்க்கையின் புறக் கவர்ச்சி அம்சத்தை வலியுறுத்தும் தொடர்கதைகளே தற்காலத்திய பத்திரிகைகளுக்கு ஏற்றனவாக ஆகிவிட்டனவோ என அஞ்சக்கூடிய சூழ்நிலையில், பழமையைப் போற்றிப் புதுமையை விரும்பி வரவேற்கும் சிறந்த ஆசிரியர்களில் ஒருவரான திரு சோமு அவர்களின் எழுத்து ஆற்றல், 'நந்தவனத்தின்' கதா பாத்திரங்களாக மிளிர்ந்து இலக்கிய அன்னையை அலங்கரிக்கும் மலர்களாகவே பரிணமிக்கின்றன. ஆங்காங்கே வாழ்க்கைத் தத்துவங்களையும் குறிக்கோள்களையும் ஆழ்ந்து சிந்திக்க வாய்ப்பளிக்கும் ஒரு நூதனப் படைப்பு நந்தவனம். 'கல்கி' பத்திரிகை தமிழர்களுக்குச் செய்து வரும் தொண்டின் உயர்வைப் போற்றுகிறேன்.

சென்னை
3-1-63

**மங்களம் பாலசுப்பிரமணியம்**

சென்ற ஓராண்டு காலமாக எங்களை மகிழ்ச்சியில் ஆழ்த்தி வந்த ஐம்பத்தி நான்கு நந்தவனப் பக்கமும் பறிக்கப்பட்டு விட்டன. ஆனால் அந்த வாடா மலர்கள் சரமாக்கப்பட்டு எங்கள் கைகளில் என்றும் திகழும்.

"நந்தவனம்" சிறந்த கதை அமைப்புக் கொண்டு தெளிந்த நீரோடை ஒரு வருவது போல், செழிப்புற்றது. எல்லாப் பாத்திரங்களும் முக்கியமாக, செண்பகநாயகி, செல்வி, சிவநாதன், சித்திரானந்தர், கடற்கரையாண்டி ஆகிய பாத்திரங்கள் என்றும் எங்கள் நினைவை விட்டு அகலா.

பட்டணம்
4-1-63

**ஜெகதீசன்**

தமிழன் ஒருவனுடைய வாழ்வைப் பின்னித் தெற்றுச் சீமை என்று புகழப்படும் திருநெல்வேலியின் பழைய அழகைக் காட்டு சொரிந்த திரு சோமு அவர்களின் திறமையை எவ்வளவு புகழ்ந்தாலும் தகும்.

சென்னை
6-1-63

**ரா. கோவிந்தராஜன்**

நந்தவனம் புத்தக உருவில் தயாராகி விட்டது. 512 பக்கங்கள்: விலை ரூ. 8: வெளியீட்டோர் [illegible] பதிப்பகம், தியாகராய நகர், சென்னை - 17.

# மேலே ஒருவன்

வாசவன்

சீருகலான அறையின் இருளுக்குள், இரு தயத் துடிப்பின் ஒவ்வோர் அசைவிலும் மலை மலையாகக் குவிந்து விட்ட புழுக்கத்தில் தலை தூக்காமல் கிடந்தார் குருசாமி.

"என்னங்க!" உருவம் புரியவில்லை. குரல் புரிகிறது. இருபத்தைந்து வருஷ வாழ்க்கை யில் அவரைத் தொட்டுத் தொடர்கிற குரல் அல்லவா அது?

"என்ன கோமதி?"

"சிங்கப்பூர் செல்லையா வந்திருக்கான்."

இது எதிர்பார்த்த கொடுமைதான். இப் பொழுதுதானா? ஒரு வருஷத்துக்கு அதிக மாகவே இப்படியொரு பூதம் கிளம்பும் என்று எந்த ஒரு கணத்திலும் மறந்தவரல்ல அவர். கணந்தோறும் திரண்டு திரண்டு பெரிதாகக் குவிந்து விட்ட பயம் இப்பொழுது தடுக்க முடி யாத வாலை போல் அவர் நெஞ்சுக்குள் பாய்ந்து விட்டது. "என்ன சொன்னே கோமதி? நான் வீட்டிலே இருக்கேன்னு சொல்லி விட்டாயா?" என்று தவிப்பால் நிறைந்தது அவர் குரல்.

"எதுவும் சொல்லவில்லே. என்ன சொல்ல வேணும்?"

"நான் இல்லேன்னு சொல்லி விடு."

"பொய்யா சொல்லச் சொல்கிறீங்க?" கால நூற்றாண்டு வாழ்க்கையில் கண்டிராத புருஷரின் புதிய மாறுதல், அந்த மாறுதலைக் கண்டு அவள் மனத்தில் ஏற்பட்ட கசப்பு, வெறுப்பு எல்லாமே கோமதியின் குரலில் பொதிந்து, பொரியாய்ச் சிதறுகின்றன.

"நான் வீட்டில் இல்லேன்னு சொல்லிவிடு, கோமதி!"

கோமதி பெருமூச்சு விடுகிறாள். பொய் சொல்லச் சொன்ன அந்தக் கணத்திலேயே சிறிய மனிதராகி விட்ட அந்தப் பெரிய மனி தரை எதிர்த்து எதுவும் சொல்லமுடியாமல், மௌனமாகவே காட்டுகிற எதிர்ப்புத்தானோ அந்தப் பெருமூச்சு? கால் மிஞ்சி ஒலிக்கிறது. கோமதி போகிறாள்.

கொஞ்ச நேரத்தில் அவள் குரல் வாசலில் கேட்கிறது. செல்லையாவின் குரலும் ஒலிக் கிறது. பிறகு குரல்கள் கேட்கவில்லை.

நெல் மூட்டையில் சாய்ந்து கொண் டிருந்த குருசாமிக்கு வியர்வை ஆறாகப் பெருகு கிறது. உடம்பே கொள்ளவில்லை. ஓர் அந் தரங்க சூழ்ச்சியோடு அவர் செய்த சிறுமை, 'குருசாமி கோயிலில் வைத்துக் கும்பிடவேண் டிய மனிதர்' என்று ஊர் ஒருமுகமாகச் சொன்ன குரலை ஏமாற்றி விட்டதற்குப் பிறகு வெளிப்படையாக வெடித்துச் சிதறிப் பெருகு கிறதோ, இப்படி வியர்வையாக.

குருசாமிக்கும் அந்த ஊருக்கும் உறவேற் பட்டு முப்பது வருஷங்களுக்கு மேலேயே இருக்கலாம்; இந்த உறவுக்கு அடிப்படை யான காரணங்கள் பகட்டானவை அல்ல. பிறருடைய சுகங்களிலும், துக்கங்களிலும் நீராகக் கரைந்து போகிற குருசாமிக்கு அந்த ஊரில் மனிதர்கள் மட்டுமல்ல, காக்கை, குருவிகளும், மரம் மட்டைகளும்கூட உற வினர்கள்தாம். ஊரில் ஒரு குழந்தை இறந் தால் எப்படி அழுவாரோ அதே போல் ஒரு காக்கை, குருவி இறந்துபோனாலும் பொங்கிப் பொங்கி அழுவார். தனக்காகவும், தன் னுடையவர்களுக்காகவும் மட்டுமே அழத் தெரிந்த இந்த உலகத்தில் உலகத்தையே தன்னுடையதாக்கிக் கொண்டு அழும் இந்த விசித்திர மனிதரை, 'பெரியவர்' என்று ஊர் பெருமையாக அழைத்தது.

குருசாமி எழுத்தறிவிக்கும் இறைபணியை மேற்கொண்டவர். ஊர்ப் பொதுச் சாவடி யில் பள்ளி. அங்கே படித்தவர்களெல்லாம் ஏழைகளின் பிள்ளைகள். சம்பளமாகப் பணம் கொடுப்பவர், தானியம் தருபவர், வெறும் நன்றியை மட்டுமே தெரிவிப்பவர் என்று எல்லாம் உண்டு. எதுவாக இருந்தாலும் அவர் மனம் ஒரே மாதிரியாகத்தான் ஏற்றுக் கொள்ளும். அதைத் தவிர அந்த ஊருக்கு



அவர் பிராஞ்ச் போஸ்ட்மாஸ்டர். தபால் அலுவலகம் அவர் வீட்டுத் திண்ணையில்தான். கைப்பிடிக்கு அடங்காத ஊதியம்தான். அதுவும் இல்லாவிட்டால் குடும்பத்தின் சாயம் எப் பொழுதோ வெளுத்து விட்டிருக்கும்.

எது வந்தால் என்ன? எல்லாம் 'உன்னைப் பிடி, என்னைப் பிடி'தான்! கோமதி வியாதிக் காரி. கருமொழி வைத்தியரின் சூரணத் தையோ, குளிகையையோ அவள் சாப்பிடாத நாள் ஒன்று உண்டா? குழந்தைகள் என்ற பெயரில் ஏழெட்டு யமன்கள். மூத்தது மோகை. இருபது வயசை விழுங்கிவிட்டிருந்த வேலுவுக்கு, குடும்பக் கஷ்டத்தில் கொஞ்

சம் விழுங்கி வைப்போம் என்ற அக்கறை மருந்துக்காவது உண்டா? ரோட்டுக் கிளப்புக் கடைகளில் அரட்டை அடித்துக் கொண்டிருப்பதற்கும், எட்டு மைல் தொலைவில் உள்ள தேவகோட்டைக்கு வரும் சினிமாப் படங்களை முதல் தினத்தன்று, முதல் காட்சியைப் பார்ப்பதற்குமே தான் பிறந்திருப்பதாக அவனுக்கு எண்ணம். அடுத்தவள் காமாட்சி. கலியாணத்துக்கு நாலைந்து வருஷங்களாகக் கால் கடுக்க நின்று கொண்டிருப்பவள். இரண்டொரு வருஷ வித்தியாசத்தில் அவதாரம் எடுத்த மற்றவைகளெல்லாம் விவரம் புரியாதவை. ஒன்று போனால் ஒன்றுக்கு ஏதாவது வியாதி.

பற்றாத வருமானம், நோய், ஏமாற்றம், நம்பிக்கையற்ற எதிர்காலம் ஆகிய எல்லாவற்றோடும் மல்லுக்கு நின்று கொண்டிருந்த குருசாமி தான் தோற்றுப் போனதாக என்றுமே எண்ணியது இல்லை. எப்போதும் சிரிப்புத்தான். பிறருடைய உதவிக்குக் கையேந்தி நிற்காமல் தன் இரண்டு கைகளையும் நீட்டிப் பிறரின் கண்ணீரைத் துடைக்கும் குருசாமி, கொழும்பில் கடை வைத்து, மேலத் தெருவில் மெத்தை வீடு கட்டி வாழும் பரமசிவம் பிள்ளையைவிடச் செல்வாக்குப் பெற்றிருந்தார்.

வெறும் பெயர் எதற்கு ஆகும்? கோமதி பெருமூச்சு விட்டாள். அதற்குமேல் அவள் வாய் திறந்தவள் இல்லை. காமாட்சி கலியாண வயதுக்கு மீறி நின்று கொண்டிருந்தாள். யார் யாரோ வந்தார்கள். பெண் கேட்டார்கள். நகை ஜாபிதாவை விசாரித்தார்கள்.

''நமக்கு நகை நட்டு விஷயமெல்லாம் ஒத்து வராது. எங்கள் காமாட்சி அழகா புன்னகைசெய்வாள். அந்த நகை உங்களுக்கு விருப்பமா?'' என்று கேட்பார் குருசாமி.

''ஊருக்குப் போய் எழுதுகிறோம்'' என்றி சொல்லி விட்டுப் போவார்கள். பிறகு அவர்கள் எழுதுவதே இல்லை. ஒருவேளை அவர்கள் இன்னும் ஊருக்குப் போய்ச் சேரவில்லையோ?

மதுரையிலிருந்து ஒரு பையன் வந்தான். சொத்துச் சுகம் உள்ளவன் இல்லை. மில் ஒன்றில் வேலை. சொற்ப வருமானம்தான். ஆனால் சோற்றுக்குப் பஞ்சம் இல்லை. மனித குணங்கள் எல்லாமே போலியாகி விட்ட இந்தக் காலத்தில், ஆசாபாசங்கள், அவற்றில் ஒரு நேர்மை பெற்று விளங்கிய அந்தப் பிள்ளையாண்டானைக் குருசாமிக்கு ரொம்பப் பிடித்து விட்டது.

''நகை யெல்லாம் எதுக்குங்க? நான் நகையையா கலியாணம் செய்து கொள்ளப் போகிறேன்'' என்று அவன் சொன்னது கோமதிக்கு ரொம்பப் பிடித்தது.

பதினைந்து நாட்களில் கலியாணம் என்று நிச்சயமாயிற்று.

அந்தச் சமயத்தில் குருசாமியிடம் கால் காசுகூட இல்லை. அவருடைய சொந்தக் கிராமத்தில் சொற்ப அளவில் ஒரு பொட்டல் காடு கிடந்தது. அதை வாரத்துக்கு உழுத வேதமுத்து, ''நீங்க நம்ப காமாட்சி தங்கச்சிக் கலியாணத்தை முடிவு



பண்ணிக்கிட்டுவாங்க. பொட்டல் காட்டை என் பேருக்கு எழுதிக் கொடுங்க. பணத்தைக் கொடுக்கிறேன். பணம் உங்க பெட்டியிலே இருக்கிறதாகவே நினைச்சுக்கிட்டுக் காரியத்தைச்செய்யுங்க'' என்றுவாக்களித்திருந்தான்.

வேதமுத்து சொன்னபடி, பணம் தன் பெட்டியிலே இருப்பதாக நினைத்துக்கொண்டுதான் பதினைந்து நாட்கள் கெடுவில் இருமணத்துக்குச் சம்மதம் அளித்தார் குருசாமி.

வேதமுத்துவைப் போய்ச் சந்தித்தபோதுதான், தன் பெட்டியில் பணத்தை வைத்துக்கொள்ளாமல், இருப்பதாக எண்ணுவது எவ்வளவு பெரிய தவறு என்பதை உணர்ந்தார்.

''ஒரு வாரத்துக்கு முன்னாலேதான் இன்னொரு காட்டை விலை பேசி வாங்கினேன். நீங்க ஒரு கடலாசி போட்டிருந்தால் அதை வாங்காமே இருந்திருப்பேன். இப்போ கையிலேயே காலணா இல்லே. சித்திரைக்குப் பத்திரம் எழுதி முடித்துக் கொள்கிறேன்'' என்று கையை அகல விரித்து விட்டான் வேதமுத்து.

வேறு சில இடங்களில் முயன்று பார்த்தார். எங்கும் சமயத்துக்குப் பெயரும் மாதிரியில் இல்லே. நம்பிக்கையோடு போனவர், ஏமாற்றத்தோடு ஊருக்குத் திரும்பினார்.

கலியாணத்துக்கு இடையில் இருப்பவை பத்து நாட்கள்தாம். குறைந்த பட்சம் நானூறு, ஐந்நூறாவது வேண்டும். என்ன செய்வது? ஊரில் கைநீட்டிப் பழக்கம் இல்லே. பழகிக் கொள்வதற்கும் இந்தச் சந்தர்ப்பத்தில் தயாராக இருந்தார். ஆனால் ஊரில் கொடுக்கக் கூடிய ஒரே புள்ளி பரமசிவம் பிள்ளைதான். அவர் பதினைந்து நாட்களுக்கு முன்னால்தான் கொழும்புக்குப் புறப்பட்டுப் போனார். மற்றவர்கள் எல்லாம் தொழுதுண்டு பின் செல்லாத உழுதுண்டு வாழ்பவர்கள். இந்த ஆவணி, புரட்டாசி கண்ணைப் பிடுங்குகிற பஞ்ச காலம் ஆயிற்றே! குதிர் குதிராய்க் கொட்டி வைக்கிறவர்கள் குருணி நெல்லுக்கு ஆலாய்ப் பறக்கிற சந்தர்ப்பம் அல்லவா இது?

பையன் மதுரையிலிருந்து கலியாணப் பத்திரிகைகூட அச்சடித்து அனுப்பி விட்டான். இனி கலியாணத்தை ஒத்தி வைப்பதற்கும் இல்லே.

வழி என்ன?

அன்று நாகம்மைக்கு ஐந்நூறு ரூபாய் மணியார்டர் வந்திருந்தது. அவள் மகன் செல்லையா அனுப்பியிருந்தான். சின்ன வயசில் தறுதலையாய் அலைந்து, நன்றாய் உதைபட்டு ஊரை விட்டு ஓடிப் போனவன் அவன். பிறகு பத்து வருஷங்கள்வரை அவன் என்ன ஆனான், எங்கே போனான் என்ற சமாசாரங்களே தெரியாமல் இருந்தன. நாகம்மைக்கு அவன் ஒரே பிள்ளை. இருட்டுப் பிள்ளையானாலும் பெற்ற பிள்ளை அல்லவா? மருகினாள். அழுதாள். புலம்பினாள். குருசாமியிடம் வந்து குமுறினாள்.

''கவலைப்படாதே அம்மா! கடவுள் கண்ணைத் திறப்பார். உனக்கு நல்ல சேதி கிடைக்கும்'' என்று ஆறுதல் ஊட்டுவார் குருசாமி.

ஒரு மாதத்துக்கு முன்னால் நம்பிக் கொண்டிருந்த கடவுள் கண்ணைத் திறந்து விட்டார். செல்லையாவிடமிருந்து நாகம்மைக்குக் கடிதம் வந்தது. அவசரம் அவசரமாய் எடுத்துக்கொண்டு ஓடி, அவளிடம் கடிதத்தைப் படித்துக் காட்டினார் குருசாமி.

செல்லையா இப்பொழுது சிங்கப்பூரில், ஒரு மலாய்க்காரியைக் கலியாணம் செய்துகொண்டு குழந்தை குட்டிகளோடு இருக்கிறானாம். மாமனார் உதவியோடு தோட்டம் ஒன்று நடத்துகிறானாம். நல்ல வருமானமாம். இன்னும் சில தினங்களில் செலவுக்குப் பணம் அனுப்புவதாக எழுதிவிட்டு இப்படி முடித்திருந்தான்: ''அம்மா! உங்களைப் பார்க்க வேண்டும் என்று எனக்கு எவ்வளவோ ஆசை. ஆனால் அந்த ஊருக்கு நான் வருவதா? ஏதோ தெரியாத்தனத்தால் கொழும்புக்காரர் வீட்டில் மாட்டைத் திருடியதற்காக என்னைக் கண்ட கண்ட பேர்கள் எல்லாம் நாயை அடிப்பது போல் அடித்து ஊரை விட்டுத் துரத்தினார்களே! இனி அவர்கள் முகத்தில் நான் விழிக்கப் போவதில்லை. அதனால் உங்களை இனி பார்க்கும் பாக்கியத்தையும் இழந்து விட்டேன். என்னை மன்னியுங்கள்.''

''செல்லையா உயிரோடே இருக்கானே, ஐயா! அது ஒண்ணே போதும்!'' என்று மலர்ச்சியோடு கலங்கிய நாகம்மை, மறுநாள் அத்தனை கிராமதேவதைகளுக்கும் பொங்க விட்டாள். குருசாமியைக் கொண்டு மகனுக்கு ஒரு கடிதமும் எழுதிப் போட்டாள்.

செல்லையா சில தினங்களில் தாயின் செலவுக்கு அனுப்புவதாக எழுதியபடி இதோ பணத்தை அனுப்பி யிருக்கிறான்.

குருசாமியின் கையிலிருந்த மணியார்டர் பாரம் ஒரு யோசனை கூறியது. 'சந்தர்ப்பத்துக்கு என்னை உபயோகப்படுத்திக் கொள்ளேன்!' என்று.

## கோமாதாவின் புத்திரர்

மேநாடுகளிலெல்லாம் வேதாந்தக் கொடியை நாட்டிவிட்டு வாரநகர் மடத்துக்குத் திரும்பிய ஸ்வாமி விவேகானந்தரைக் காண பசுபரிபாலன சபையொன்றைச் சேர்ந்த ஒருவர் ஒரு நாள் வந்திருந்தார். மத்தியப் பிரதேசத்தில் பயங்கரமான பஞ்சம் ஏற்பட்டு ஆயிரக்கணக்கான மக்கள் மடிந்து கொண்டிருந்த சமயம் அது. எனவே ஸ்வாமிஜி அவரிடம் இந்தப் பஞ்சத்தில் பாதிக்கப்பட்டோருக்குப் பசுபரிபாலன சபை ஏதேனும் உதவி செய்துள்ளதா என வினவினார். ''கர்மவினையால் அந்த மக்கள் அவதிப்படுகிறார்கள். நாங்கள் ஏன் அவர்களுக்கு உதவ வேண்டும்?'' என்று கேட்டார் சபைப் பிரமுகர். ''அப்படியானால் பசுக்களைக் கசாப்புக் கடைகளில் வெட்டுவதும் அவற்றின் கர்ம வினையால் என்று ஏன் எண்ணக் கூடாது?'' என்று திருப்பிக் கேட்டார் ஸ்வாமிஜி. ''அதெப்படி, பசுவை கோமாதா என்றல்லவா சாஸ்திரங்கள் சொல்கின்றன! அன்னையை நாம் ரட்சிப்பது கடமை அல்லவா? மக்களை அப்படிச் சாஸ்திரங்கள் சொல்லவில்லையே!'' என்றார் கோரக்ஷகர். அவருடைய அறியாமையைக் கண்ட விவேகானந்தர், ''வாஸ்தவம்தான்; மாடு போன்ற ஒரு விலங்கினமின்றி வேறெந்த மாதா உங்களை நிகர்த்த புத்திசாலிகளைப் பெற்றெடுத்திருப்பாள்?'' என்றார்.

## சிங்கமும், மாடும்

விவேகானந்த சுவாமிகள் இங்கிலாந்திலிருக்கும் போது ஒரு நாள் மிஸ் முல்லர் என்ற சிஷ்யையுடனும், ஆங்கிலேய நண்பர் ஒருவருடனும் வயல் வரப்புக்களில் உலவிக் கொண்டிருந்தார். அப்போது வெறி கொண்ட ஒரு பெரும் காளை அவர்களை நோக்கி ஆவேசமாக ஓடி வந்தது. கதிகலங்கிப் போன ஆங்கிலேய நண்பர் அருகில் இருந்த ஒரு குன்றின் மீதேறித் தப்பித்துக் கொண்டார். பெண்மணியோ நிலை புரியாமல் ஓடிக் களைத்து அப்படியே தரையில் சாய்ந்தாள். மாடு அவளை மிதித்து விடுவது போல் மிகமிக நெருங்கி விட்டது. 'அவளைக் காப்பதற்கு என்ன உபாயம்?' ஸ்வாமிகளுக்குப் புரியவில்லை. சடேரென்று மாட்டுக்கும் அவளுக்கும் இடையில் தாமே பாய்ந்து நின்று கொண்டார். தன்னை முட்டித் தள்ளுவதன் மூலம் அந்த ரிஷபத்துக்கு வெறி அடங்கினால்தான் உண்டு; வேறெந்த விதத்திலும் சிஷ்யையைக் காப்பாற்ற முடியாது என்ற தியாக உணர்வில், மனம் கலங்காது அப்படியே கைகட்டியபடி காளையை நோக்கி நின்றார். என்ன அதிசயம்! நாலு கால் பாய்ச்சலில் தலையைக் கீழ்நோக்காகத் தொங்கவிட்டபடி வந்த மாடு அவருக்குச் சில அடிகள் தள்ளி, எவ்வாறோ தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு நின்றது. தலையைத் தூக்கி அவரை ஒரு முறை பார்த்தது. வேதாந்த சிம்மத்திடம் அது என்ன கண்டதோ ? சாந்தம் கொண்ட கண்களோடு அமைதியாகத் திரும்பி விட்டது.

''மாடு வெறி கொண்டு நெருங்கி வரும்போது என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?'' என்று பிற்பாடு மிஸ் முல்லர் ஸ்வாமிகளைக் கேட்டாள். அவர் சிரித்துக் கொண்டே, ''ஒன்றுமில்லை; ஒரு சின்னக் கணக்கு போட்டுக் கொண்டிருந்தேன். 'இவ்வளவு பெரிய காளை என்னைத் தூக்கி எறிந்தால் எவ்வளவு தொலைவில் என் உடல் போய் விழும்?' என்று உத்தேசமாகக் கணித்துக் கொண்டிருந்தேன்'' என்றார்.

வேறு வழியில்லை. காமாட்சியின் கலியாணம் நடைபெறவேண்டுமானால், குருசாமி ஓர் அயோக்கியத்தனம் செய்துதானாக வேண்டும். அதனால் நாகம்மைக் கிழவியை அவர் ஏமாற்றப் போவதில்லை. வேதமுத்து சித்திரை மாதம் பணம் தருவதாகச் சொன்னானே, அதைவாங்கி அவளுக்குக்கொடுத்துவிடலாம்.

அன்று மாலையே, ''செல்லையாவுக்கிட்டே இருந்து கடவாசி ஏதாச்சும் வந்ததுங்களா?'' என்று கேட்டுக் கொண்டு வந்த நாகம்மையிடம், ''இல்லையே!'' என்று ஒரு பொய்யைச் சொன்னார் குருசாமி.

அது அவர் வாழ்க்கையில் சொன்ன முதல் பொய். மணியார்டர் பாரத்தில் பொய் ரேகை பதிப்பிக்கும் அயோக்கியத்தனம் இரவோடு இரவாய் நடந்தது. பொய்யும் அயோக்கியத்தனமும் குறித்த நாளில் காமாட்சிக்கு ஒரு கணவனைத் தேடிக் கொடுத்து விட்டது.

குருசாமியைக் கண்டுபிடித்து விடக் கூடிய பயங்கரம் ஏதும் இல்லை. பணம் பட்டுவாடா ஆகிவிட்டதற்கு ரேகைசாட்சியம் இருக்கிறது. செல்லையா ரேகை சாஸ்திர நிபுணன் அல்ல. பாரத்தில் பதித்திருப்பது தன் தாயின் கை விரல் ரேகை அல்ல என்று அவனும் கண்டு பிடிக்க முடியாது. நம்பி விடுவான். இனி ஊருக்கே வருவதில்லை என்று வேறு கடிதம் எழுதியிருக்கிறான். எனவே அவன் வந்து உண்மையை அறிந்து விடுவான் என்று பயப்படவும் வேண்டியதில்லை. சித்திரை மாதம் வரையில் ஓர் ஏற்பாடு. அவ்வளவுதான்!

ஆனாலும் அவரால் நிம்மதியாக இருக்க முடியவில்லை. தனக்குள் இருந்த ஒரு நல்ல நாணயமான மனிதரைச் சாகடித்து விட்ட சோகம் அவரைச் சிறுகச் சிறுகத் தின்று கொண்டிருந்தது. 'மனிதர்களை ஏமாற்றலாம். மேலே ஒருவன் பார்த்துக் கொண்டிருக்கிறான். அவனை ஏமாற்ற முடியாதே!' என்ற பயம் அவர் மனத்தை அரித்தது.

மகனிடமிருந்து வந்த முதல் கடிதத்துக்குப் பிறகு தெம்போடு உலவிய நாகம்மை, பிறகு அவனிடமிருந்து ஏதும் வராததால், கண்ணீரும் கம்பலையுமாய் உலவி வந்தாள். உண்மை அதுவல்ல. வாரம் தவறாமல் செல்லையாவின் கடிதங்கள் வந்து கொண்டுதான் இருந்தன. அவற்றை யாருக்கும் தெரியாமல் கிழித்தெறிந்து விட்டார் குருசாமி. அவரிடம் தன் நெஞ்சைக் கொட்டி மகனுக்குக் கடிதம் எழுதச் சொல்வாள் நாகம்மை. அவள் எதிரே கடிதத்தை எழுதுபவர், அவள் தலை மறைந்ததும் கிழித்தெறிந்து விடுவார்.

ஓர் அயோக்கியத்தனத்தை மறைக்க எத்தனை அயோக்கியத்தனங்கள்?

சித்திரை எப்பொழுது வரும் என்று துடித்துக் கொண்டிருந்த குருசாமி, வேதமுத்துவிடம் ஓடினார். வாரம் என்ற பெயரில் ஒரு மூட்டை கடலையைக் கொடுத்து விட்டு முப்பது மூட்டை கடலையைக் கொள்ளை அடித்துக் கொள்ளும் அவன், இப்பொழுதும் கொஞ்சம் அகலமாகவே கைவிரித்து, 'தை வரையில் பொறுத்துக் கொள்ளுங்கள். இந்தக் கெடுவிலே கட்டாயம் பணம் தந்து விடுகிறேன்' என்று சொல்லி விட்டான்.

நாகம்மைக்கு அவர் பட்டிருக்கும் இருட்டுக் கடனை அடைப்பது எப்படி? புரியவில்லை. பட்டினியாய் இருந்தாலும் நெஞ்சு நிமிர்ந்து நடக்கக் கூடியவர் அவர். அந்த நெஞ்சு நிறைய நல்ல எண்ணங்களையும், இரக்கத்தையும் வைத்துக் கொண்டு எதிர்ப்பட்டவர்களுக்கெல்லாம் அவற்றை வழங்கிக் கொண்டிருந்தவர். இப்பொழுது நெஞ்சை வளைத்துக் கொண்டு நடந்தார். அந்த நெஞ்சில் குப்பைகளையும், அழுக்கையும் வைத்துப் பிறர் எதிரில் பழையவர் போல நடித்து வந்தார்.

'இந்தத் தடவை வேதமுத்து ஏமாற்றி விடமாட்டான். தை மாதம் நிச்சயம் நாகம்மையின் பணத்தைச் சேர்ப்பித்து விடலாம்.'

அவர் தையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். வந்தது தை அல்ல; செல்லையா! அவன் திடீரென்று இன்று மத்தியானம் ஊருக்குப்

புறப்பட்டு வந்திருக்கிறான். வரப் போவதாகக் கூட அவன் கடிதம் வரவில்லையே!

அவர் அவனிடம் எப்படி முகத்தைக் காட்டுவார்? என்ன பதில் சொல்வார்? எதுவும் சொல்ல முடியாத நிலையில்தான் அவர் குற்றவாளியைப் போல் இந்த அறையில் ஒளிந்து கொண்டிருக்கிறார். ஆனாலும் சிறிது நேரத்துக்கு முன்னால் அவரைத் தேடிக் கொண்டு வந்து விட்டுப் போயிருக்கிறான் அவன்.

''இன்னும் ஐயா வரலீங்களா?'' கேட்டவன் செல்லையா அல்லவா?

ஒரு மணி நேரத்தில் இரண்டாவது தடவையாகத் தேடிக் கொண்டு வந்து விட்டான். அதற்குக் கோமதி என்ன பதில் சொல்லப் போகிறாள்? குருசாமி தம் காதைத் தீட்டிக் கொள்கிறார்.

''இன்னும் அவங்க வரல்லே!''

''அப்பாடா!''

''எப்போ வருவாங்க?''

''தெரியலே.''

''அவங்களை நான் அவசியம் பார்த்தாக வேணும். சந்தர்ப்பப்பட்டா சாப்பிட்டுவிட்டு வந்து பார்க்கிறேன்!''

அவசியம் பார்த்தாக வேண்டுமாம்! என்ன அப்படிப்பட்ட அவசியம்? 'நான் அனுப்பின பணத்தை எங்க அம்மாகிட்டே கொடுக்காமல் யாரிடம் கொடுத்தே? நீதானே பணத்தை வாயிலே போட்டுக்கிட்டே?' என்று கேட்க வேண்டிய அவசியத்தைத் தவிர வேறு என்ன அவசியம் அவனுக்கு இருக்க முடியும்?

கேட்பதோடு நிற்க மாட்டான். புகார் கொடுப்பான். அடுத்துக் குருசாமியைப் பிடித்துக் கொண்டு போய்ச் சிறையில் தள்ளுவார்கள். விசாரணைக்குப் பிறகு அவருக்குக் கடுங்காவல் தண்டனை கிடைக்கும்.

இத்தனையும் நடக்க முடியாத காரியத்தை அவர் செய்யப் போகிறார். அவருக்கு வரவிருக்கிற ஆபத்துக்களையெல்லாம் தம் உயிரைக் கொண்டே துடைத்து விடப் போகிறார். மானம் மரியாதையாக வாழ்ந்த ஊரில் போலீஸ்காரர்களுக்கு மத்தியில் ஒரு குற்றவாளியாகச் செல்வதைவிட, உயிரைப் போக்கிக் கொள்வது எவ்வளவோ மேல்.

''என்னங்க?'' அழைக்கிறாள் கோமதி.

''ஊம்.''

''செல்லையா உங்களை இரண்டாவது தடவையாக வந்து தேடி விட்டுப் போறான்.''

'எதையும் கேட்டு விடாதே' என்று எச்சரிக்கும் விதத்தில், ''தெரியும்'' என்று அதட்டலாய் விழுகிறது குருசாமியின் குரல்.

''சாப்பாட்டுக்கு நேரமாகிறதே!''

''ஆகட்டும்.''

கோமதி போகிறாள் ஒரு பெருமூச்சுடன்.

எப்பொழுதுமே அவர் சாப்பிட்ட பிறகே அவள் சாப்பிடுவாள். இப்பொழுது அவர் சாப்பிடாததால் அவளும் பட்டினி. பட்டினி கிடந்தாலும் கிடப்பாள். அவரிடத்தில் வாய் திறந்து கேட்பாளா?

நள்ளிரவு இருக்கலாம்.

நெல் மூட்டையில் கவிழ்ந்து கொண்டிருந்த குருசாமி, எழுந்தார். அறைக் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தார்.

கூடத்தில் பிள்ளைகள் எல்லாம் தலைமாடு கால்மாடாகக் கிடந்தன. கோமதி சுவர்ப் பக்கமாக முகத்தைத் திருப்பிக் கொண்டு படுத்திருந்தாள். வேணுப் பயல் அலட்சியமாகக் கையையும் காலையும் பரப்பிக் குறட்டை விட்டுக் கொண்டிருந்தான். இன்று தேவகோட்டையில் புதுப்படம் எதுவும் வரவில்லை போலிருக்கிறது! வந்திருந்தால் பயலை இங்கே பார்க்க முடியுமோ? இப்படிப் பொறுப்பற்று ஊர் சுற்றும் பயலா இனிக் குடும்பத்தைச் சுமக்கப் போகிறான்?

'படைத்தவன் ஒருவன் இருக்கப் பாரத்தைப் பற்றி யோசிப்பானேன்? விதியை மனிதன் எழுதுவதில்லை. விதிதான் மனிதனை எழுதுகிறது!'

குருசாமிக்கு வயிற்றைப் பசித்தது. மத்தியானம்கூடச் சாப்பிடவில்லை.

'உயிரையே விடப் போகும்பொழுது இந்தப் பசியைக்கூட விடமுடியவில்லையே! உயிரையே போக்கிக் கொள்ள வேண்டும் என்ற பசிக்கு, எதிர்ப் பசி அல்லவா இது?'

ஒரு குவளை தண்ணீர் குடித்தால் என்ன?

ஓசைப்படாமல் பானையின் மூடியைத் திறந்து ஒரு குவளைக்கு இரண்டு குவளையாகத் தண்ணீர் குடித்தார். அவருக்குச் சிரிப்பு வந்தது. தம் வீட்டிலேயே இப்படியொரு திருட்டுத்தனமா?

'திருட்டுத்தனம் இல்லே. அதுதான் இயற்கை. நான் சாகப் போகிறவன் அல்லவா? சத்தத்தை உண்டாக்குவதன் மூலம் மற்றவர்கள் விழித்துக் கொள்ளக் கூடாது' என்று நினைக்கிறேன். 'மனிதன் ஆரவாரத்தில் பிறக்கிறான். ஓசைப்படாமல் சாகிறான். அதனால் ஓசைக்கு நான் பயப்படுகிறேன்.'

கூடத்தை விட்டு வெளியேறும் போது எல்லாருடைய முகங்களிலும் அவருடைய நீர் விழிகள் அலைமோதின. கடைக்குட்டி ரத்தினம் பயலுக்கு, அப்பாவைக் குனிய வைத்துக் குதிரைச் சவாரி செய்வதில் கொள்ளை ஆசை.

'அவனுடைய குதிரை இன்று அவனை ஏமாற்றப் போகிறது. உடைமைக்காரனுக்குத் தெரியாமலே அந்தக் குதிரை மரணச் சந்தையில் விலையாகப் போகிறது!'

இது என்ன! கண்ணீரா? எதற்குக் கண்ணீர்? 'பிரிகிறோமே' என்றா?

'பிரியவில்லை. பிரிக்கப்படுகிறேன். இதைத் தவிர எனக்கு வேறு வழியில்லை. உலகத்தைப் போல் பெற்ற பெண்ணின் கலியாணத்துக்கு நான் பணத்தைச் செலவழிக்கவில்லை. உயிரைச் செலவழிக்கிறேன்.'

கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தார். தெருவில் இறங்கி நடந்தார்.

'வீட்டுக் கதவைத் திறந்து போட்டு விட்டு வருகிறோமே! திருடர் பயம் இல்லை. ஆரோக்கியசாமி உடையாரின் நாய், மனிதர்களைப் போலக் கதவைத் திறந்து விடுமே!'

உதடுகளைப் பிரித்தது ஊமைச் சிரிப்பு.

'நான் போகப் போகிறேன். வீட்டுக் கதவைத் திறந்து கொண்டு நாய் நுழைந்தால் என்ன? நரி நுழைந்தால் என்ன? உயிரையே விட்டு விடத் தயங்காத எனக்கு, உடைமையில்தான் எவ்வளவு கவலை?'

பெருமூச்சுடன் நடந்தார்.

மேல வீதிப் பக்கம் போகக் கூடாது. நாகம்மையின் வீடு அங்கே இருக்கிறது. செல்லையாப் பயல் திண்ணையில் படுத்துக் கொண்டிருந்தால் அப்புறம் நமக்கு வேறு வினையே வேண்டாம்.

கிழ வீதிப் பக்கமாக அவர் திரும்பிய போது மேலவீதியிலிருந்து அழுகை ஓலம் கேட்டது.

'யார் செத்திருப்பார்கள்? நேற்று வரை அந்த வீதியில் யாருக்கும் உடல் நலக் குறை வில்லையே! ஊம்.... யார் செத்தால் என்ன? நானே சாகப் போகிறவன் தானே?'

இத்தனை நாட்களாக அவர் பிறந்த துக் கத்திலிருந்து இப்படி ஒதுங்கிப் போனவர் அல்ல. இப்பொழுது தமக்கு நேர்ந்து விட் டிருந்த துக்கத்திலிருந்து விடுபட்டுப் போகக் கூடிய இறக்கைகள் அவரிடம் இல்லை!

கிழ வீதியைத் தாண்டி ஊருக்கு ஒதுக்குப் புறமாக உள்ள வண்ணார் ஓடையை நோக்கி நடந்தார். பனி போல் மழைப் பூக்கள் சித றிக் கொண்டிருந்தன. வாடைக் காற்று ஊசி யாய் உடலில் இறங்கிற்று.

வண்ணார் ஓடைக்கு வந்து ஈரத்தால் வழுக்கிய புளிய மரத்தில் சிரமப்பட்டு ஏறி னார் குருசாமி. தூரோடு ஒட்டிய ஒரு கிளை யில் எட்டு முழத் துண்டை எடுத்துக் கட்டி னார். இனித் துண்டின் இன்னொரு தலைப்பை எடுத்துக் கழுத்தில் கட்டிக் கொண்டு கிளையை விட்டுக் குதிக்க வேண்டியதுதான். இந்தப் பாக்கி இருக்கிற நேரம்தான் அவ ருக்கும் இந்த உலகத்துக்கு துளியாய்க் குறுகி ஒடுங்கி விட்ட உறவு.

அவர் கால்பட்டுப் பட்ட கிளை ஒன்று சட சட வென்று முறிந்து கீழே விழுந்தது.

''யார் மரத்து மேலே?'' என்று கீழே இருந்து ஒரு குரல் சாட்டை வீசுகிறது.

'யாரா யிருந்தால் என்ன? வழியோடு போகிறவர்களுக்கு இந்த வம்பு ஏன்?'

''என்ன பதில் இல்லே?'' என்று குர லோடு சேர்ந்து, ஒரு டார்ச்சின் வெளிச்சம் அவர் முகத்தைத் தொட்டது.

டார்ச் அடிப்பவன் செல்லையா அல்லவா?

சாவதற்கும் விடாமல் இங்கே தொடர்ந்து வந்து விட்டானா?

''நீங்களா!.. முதலிலே கீழே இறங்குங்க அய்யா!''

''என்னை விட்டுவிடு செல்லையா! உன் அம்மாவுக்கு நீ அனுப்பிய பணத்தை நான் தான் எடுத்துக்கிட்டேன். அந்தப் பாவத்தை உயிரைக் கொண்டு துடைக்கிறதுக்காக வந் திருக்கேன். தயவு செய்து என்னை விட்டுவிடு'' என்று அலறினார் குருசாமி.

''நீங்க பாவம் செய்யலே அய்யா! எனக் குப் புண்ணியத்தைத் தேடி வச்சீங்க. எங்க அம்மாவைப் பற்றி உங்களுக்குத் தெரியும். என்னண்டை உசிரை வச்சிருந்தாங்க. அவங்க விடத்திலேயிருந்து கடிதம் வராமல் போனதி னுலே சிங்கப்பூரிலேயிருந்து பதறி ஓடி வந் தேன். என்னைக் கண்டதும் 'வந்துட்டியாடா செல்லையா!'ன்னு அலறி மயக்கமானவங்க தான். பிறகு அவங்க எழுந்திருக்கவே இல்லே. கொஞ்ச நேரத்துக்கு முன்னுலே இழுத்துக் கிட்டிருந்த அவங்க உசிரு என்னை ஏமாத்தி விட்டுப் போயிட்டுது. அன்னிக்கு நான் அனுப்பி யிருந்த பணத்தை நீங்க அம்மா கிட்டே கொடுத்திருந்தால், 'என் பிள்ளை அனுப் பின பணமா?'ன்னு சந்தோஷத்திலே அலறி விழுந்து மண்டையைப் போட்டிருப்பாங்க. அன்றைக்கே நீங்க பணத்தைக் கொடுத்து, அவங்க செத்துப் போயிருந்தா, இன்னிக்கு நான் பெத்த முகத்தைப் பார்த்திருக்க முடி யுங்களா? இப்படியொரு நல்ல காரியத்தைச் செய்த உங்களுக்கு நன்றி தெரிவிக்க உங்கள் வீட்டுக்கு இரண்டு தடவை வந்தேன். உங் களைப் பார்க்க முடியவில்லே. செத்தவங்க தலைமாட்டிலே தருப்பைப் புல்லே வைக்கிறது வழக்கமாச்சுங்களே! தருப்பை பறிக்க இந்த ஓடைக்கு வந்தேன்; நல்ல வேளையாகப் பட்ட மரக் கிளை ஒடிஞ்சு கீழே விழுந்த சத்தம் கேட் டது. இல்லையானால் ஊருக்கு மத்தியிலே கோபுரமா உயர்ந்து நின்ற ஒரு மானியை நான் சாகடிச்ச குத்தத்துக்கு ஆளாகி இருப் பேன்.. கீழே இறங்குங்க அய்யா!''

ஒரு காலத்தில் தறுதலையாய் அலைந்த செல்லையாவா, ரொம்பப் படித்தவர்கள் பேசக் கூடிய பேச்சை யெல்லாம் பேசுகிறான்? அன்றே அவர் பணத்தைக் கொடுத்திருந்தால் அவன் தாய் சந்தோஷ மிகுதியால் மண்டை யைப் போட்டிருப்பாளாம். அதனால் இன்று அவனுக்கு அவன் முக தரிசனம் கிடைக்காமல் போயிருக்குமாம்! எதற்கும் எதற்குமோ முடிச்சுப் போட்டு, தன் மனிதத் தன்மையை ஆரவாரமின்றி வெளிக் காட்டி நிற்கிறான்!

மேலே குருவன் ஒரு வருஷமாகக் குருசாமி யைப் பார்த்துக் கொண்டிருந்தான். கீழே இருந்த இந்தச் செல்லையாவால் ஒரு நிமிஷம் கூட அந்த நிலையில் அவரைப் பார்த்துக் கொண்டிருக்க முடியவில்லை. கடவுள் பற்று அறுத்தவன். மனிதன் பாசத்தால் குழைப வன் அல்லவா?

''இன்னும் மரத்து மேலேயே இருக்கிங்களே அய்யா!''

இறங்கினார் குருசாமி.

செல்லையாவின் கையில் இருந்த டார்ச் வெளிச்சம், மழைச் சாரல்களை ஊடுருவிப் பிளந்தது. மனிதத் தன்மையைத் தொடர்ந்து மானம் வழி நடந்தது.




எழிலை
எடுத்துக்
காட்டும் ...


சந்திரனே சாட்சி
கதை: கௌசிகன் – சித்திரம்: வினு
5
வழக்கு ரொம்பப் பரபரப்பூட்டும் படியா இருந்திருக்குமே?
பின்னே இருக்காதுங்களா! ரகுநாதனைப் பத்தி ஊரே நல்ல அபிப்பிராயம் வைத்திருந்தது. அப்படிப்பட்ட ஆள் கொலை செய்தான்னு! கோர்ட்டிலே எள்ளுப் போட்டாக் கீழே விழாத கூட்டம்.
மிஸ்டர் தனபால், துரைசாமியை மிரட்டிப் பணம் கேட்கப் போகிறான் ரகு என்பது உமக்கு முன்பே தெரியுமா?
தெரியும். லட்சப் பேர் வழியான அவர் பண உதவி செய்ய மறுத்தார். ஆகவே இந்த வழியைக் கையாளப் போறேன் எனக்கு உதவும்படி கேட்டான் ரகு.
ரகுவின் இந்த ஏற்பாடு உமக்கு அதிர்ச்சியைத் தரவில்லையா?
என் பால்ய நண்பன் ரகு. அவனது இந்தச் செய்கை எனக்கு முதலில் திகைப்பாகவே இருந்தது. ஆனால்...
தயங்காமல் சொல்லுங்கள், மிஸ்டர் தனபால்.
பத்திரிகைத் தொழிலில் பட்ட நஷ்டம், என் நண்பனின் கடன் தொல்லையைப் பற்றிப் பலவிதமாகக் கேள்விப்பட்டேன். எனக்கு விருப்பமில்லாவிட்டாலும் கூட...
உத்தேசித்து உதவ ஒப்புக் கொண்டீர்கள், இல்லையா? ஆனால் இந்தச் சந்திப்பு உமது வீட்டில் ஏற்படுவானேன்?
துரைசாமி என் குடும்ப நண்பர். என்னிடம் மதிப்பு வைத்துள்ளவர். விருந்துண்ண வரும்படி அழைத்தேன். ஆனால் அங்கு ரகுவைச் சந்திப்போமென அவர் எண்ணவில்லை.


அவர்களுக்கிடையே நடந்த சம்பாஷணையைத் தனபால் விளக்கினான்.
'பிளாக் மெயில் - அதாவது கட்டாயப் படுத்திப் பணம் பறிக்கப் பத்திரிகையில் துரைசாமியைப் பற்றி அவதூறாக எழுதி அவருக்கு அவமானத்தை உண்டாக்கப் போவதாக ராஜநாதனால் மிரட்டப் பட்டார் துரைசாமி' - என்கிறீர்கள் - அப்படித் தானே?
"ஆமாம்..."
தனபால், அடப்பாவி! இத்தனை அபாண்டமாகப் பொய் சொல்ல எப்போதடா கற்றுக் கொண்டாய்!
ஆர்டர், ஆர்டர்! மிஸ்டர் ராஜநாதன், இப்படியெல்லாம் நீதி மன்றத்தில் கூச்சலிடக் கூடாது. அமைதியாயிருங்கள்.
குற்றவாளியும் கொலை செய்யப்பட்டவரும் உங்கள் வீட்டிலிருந்து பிரிந்தபோது ஏதோ முடிவோடு சென்றார்கள்!
அன்று இரவு மறுபடி தன்னை வந்து காணும்படி சொல்லிச் சென்றார் துரைசாமி.
இவர்கள் சம்பாஷணையைச் சிவகாமி கேட்கும்படி ஏற்பாடு செய்தீர்களே அதன் காரணமென்ன?
இன்றைய நிலையில் வருந்துகிறேன். ஆனால்... அன்றையச் சூழ்நிலை.....
அன்றையச் சூழ்நிலையை விவரிப்பதில் தவறில்லையே மிஸ்டர் தனபால்?
ராஜுவைப் போலவே சிவகாமியும் என் நட்புக்குப் பாத்திரமானவள். ராஜுவை மனதார நேசித்தாள் சிவகாமி. ராஜுவைப் பற்றிக் கேள்விப்பட்ட பல விஷயங்கள் சிவகாமியின் தூய அன்புக்கு அவன் பாத்திரமானவனல்ல என்பதை உணர்த்திப் பந்தின. ஆனால்...
நிறுத்தாதீர்கள் மிஸ்டர் தனபால்! முழுவதையும் சொல்லிக் கொண்டு போகலாம். ஜூரர்கள் கவனமாகக் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள்.
ராஜு ஒரு வஞ்சகன் என்பதைச் சிவகாமி நம்ப மறுத்தாள். அவன் போக்கை நேரிடையாகவே காட்டி விடலாம் என்றே அவளை என் வீட்டிற்கு அன்று வரும்படி செய்தேன்




சென்னை நகருக்கு விஜயம் செய்த ராஷ்டிரபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் ஜனவரி 4த் தேதி கலைக் களஞ்சியத்தின் ஒன்பதாவது, கடைசிப் பகுதியை ராஜாஜி ஹாலில் வெளியிட்டுப் பேசினார். 1. விழாவுக்கு வந்திருந்தவர்களோடு டாக்டர் ராதாகிருஷ்ணன். 2. தமிழ் அகாடமியின் தலைவர் திரு அவிநாசிலிங்கம் ராஷ்டிரபதிக்குக் கலைக்களஞ்சியத்தின் ஒன்பதாவது புத்தகத்தை வழங்குகிறார். 3. உதாரகுணத்துக்கும் சட்டத்துக்கும் எடுத்துக்காட்டாக விளங்கிய ஸர் பி. எஸ். சிவஸ்வாமி அய்யர் அவர்களின் நூற்றாண்டு பிறந்ததின விழாவிலும் ராஷ்டிரபதி கலந்து கொண்டு, சிவஸ்வாமி அய்யர் நூற்றாண்டு விழா ஞாபகார்த்தக் கட்டடத்துக்கு அஸ்திவாரக் கல் இட்டார். 4. சேலத்தில் சாரதா கல்லூரிக்கும் ராஷ்டிரபதி அடிக்கல் நாட்டினார். இவ்விழாவில் அவருக்கு ஸ்ரீமதி சீதாலட்சுமி ராமசாமி பூச்செண்டு கொடுக்கிறார். ஜனவரி 5த் தேதி கொடை வள்ளல் பச்சையப்ப முதலியாரின் சிலையைப் பச்சையப்பன் கல்லூரியில் திறந்து வைத்தார். 5. ராஷ்டிரபதிக்குத் திரு பி. சீதாராமன் மாலையணிவிக்கிறார். 6. ராஷ்டிரபதியோடு விழாவில் கலந்து கொண்டவர்கள்.



# வேதாந்தியின் வீரமுழக்கம்

'வேதாந்தம் என்பது மக்களின் உழைப்பைக் குலைப்பதல்ல; அதுவே அவர்களுக்கு உத்வேகமளிப்பது' என்று கூறி அன்று ஸ்வாமி விவேகானந்தர் எழுப்பிய அறைகூவல் இன்றும் நம் மக்களைத் தட்டி எழுப்பும் மகா மந்திரமாக ஜொலிக்கிறது. அந்தச் சுடர் வாசகங்களில் இப்போது நாட்டு நிலைக்கு மிகவும் பொருந்தும் சிலவற்றைத் திரட்டி இங்கு அளிக்கிறோம் :

நாடு இளைஞர்களை வேண்டி நிற்கிறது. இளைஞர்காள், வீரராவீர்கள்! பாறை போல உறுதியாக நில்லுங்கள்! எப்பொழுதும் மெய்தான் வெல்லுகிறது. இன்று இந்தியா வேண்டுவது அதன் மக்களின் இரத்தக் குழாய்களில் புது வலிமை புகுத்தும் ஒரு மின்சார சக்தியேயாகும். துணிவு பெற்று எழுங்கள்! துணிவு கொண்டு நில்லுங்கள்! மனிதன் ஒரு முறைதான் சாகிறான். என் சீடர்களுக்குக் கோழைத்தனம் உதவாது. வீறு கொண்டு எழும்போதும் ஆழ்ந்த மன அமைதியைக் குலையாது காத்து வாருங்கள்!

ஃ ஃ ஃ

நம் தேசத்துக்கு இன்று வேண்டியன இரும்பு நிகர் தசைகளும், உருக்கு நிகர் நரம்புகளும், இந்தத் தசையாலும் நரம்பாலும் உண்டான உடலுக்குள் உறைய இடியைக் கொண்டு செய்த உள்ளமுமே. எதனாலும் எதிர்க்க வொண்ணாத உள்ளம், உலகின் விந்தைகளைப் போலவே மறைகளின் உட்பொருளையும் ஊடுருவும் உள்ளம், ஆழ்கடலின் அடியில் சென்றிடினும் யமதர்மனை எதிரே கண்டபோதிலும் தளர்ச்சியுறாது கருதியதை முடிக்கும் திண்மை பெற்ற உள்ளம் — இதுவே இன்று நாட்டின் தேவை.

ஃ ஃ ஃ

நமது இளைஞர்கள் பலசாலிகளாக வேண்டியது அத்தியாவசியமாகும். உடல் பலத்தை முதலில் பெற்றால் பின்பு ஞானமும் எளிதில் வரும். உடல் பலமில்லாததால்தான் பல தத்துவங்களைப் பற்றிக் கிளி போலப் பேசினாலும் அவற்றை அநுஷ்டிக்க முடிவதில்லை. (இந்நிலையில்) கீதை படிப்பதால் கிடைக்கும் பயனைவிடக் கால் பந்தாட்டத்தால் அதிகப் பயன் கிடைக்கும். இளைஞர்காள்! உங்கள் தசைகளை வலிவுறுத்திக் கொள்வதால் கீதையை நீங்கள் முன்னிலும் நன்கு புரிந்து கொள்ள முடியும். உங்கள் இரத்தத்தில் சக்தி கூடுவதால் கீதாசாரியனின் மேன்மையையும், பேராற்றலையும் முன்னிலும் நன்கு புரிந்து கொள்வீர்கள். உங்கள் உடல் உறுதி பெற்று அகத்தில் ஆண்மை உணர்ச்சி கிளர்ந்தெழும் போது உபநிஷதப் பொருளையும், ஆத்மாவின் பெருமையையும் முன்னிலும் நன்கு புரிந்து கொள்வீர்கள்.

ஃ ஃ ஃ

இப்போது நீங்கள் இலட்சியமாகக் கொள்ள வேண்டியது அநுமானைத்தான். ராமபிரானின் ஆக்ஞைக்காக அவர் வாழ்வையோ சாவையோ கருதாமல் கடலைத் தாவியதை மனத்தில் கொள்ளுங்கள். எதிர் வார்த்தையின்றிக் குருவுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதும் பிரம்மச்சரியத்தைக் கண்டிப்புடன் அநுஷ்டிப்பதும்தான் வெற்றியின் ரகசியம். அநுமன் அடங்கிப் பணி செய்வதற்கு எப்படிச் சின்னமோ அதே போல உலகத்தையெல்லாம் அஞ்சச் செய்யும் வீரத்துக்கும் சின்னமாவார். அவரே உங்கள் இலட்சியம்.

ஃ ஃ ஃ

இடிகள் இடித்தாலும் மின்னல்கள் மின்னினாலும் அவற்றையும் பொருட்படுத்தாது சாதக பட்சி மேகத்திலிருந்து இழியும் நீர்த் துளியைத்தான் பருகுமே ஒழிய வேறு நீர் நிலைகளைத் தேடிச் செல்லாது. அதே போல உன் இலட்சியத்துக்கு எவ்வளவு இடுக்கண் நேர்ந்தாலும் அதை விட்டுவிட்டுப் பிற இலட்சியங்களைத் தேடிச் செல்லாதே.

ஃ ஃ ஃ

உங்களில் ஒவ்வொருவரும் மகா பலசாலியாக வேண்டும். இதை ஒரு கட்டாயமான கட்டளையாகச் சொல்கிறேன். கீழ்ப்படிதலோடும், எப்போதும் செயலுக்கு ஆயத்தமாகவும், நீங்கள் செய்யவிருக்கும் பணியில் ஈடுபாட்டுடனும் இருப்பீராகில் உங்களை யாரும் வெல்ல முடியாது.

ஃ ஃ ஃ

தூய்மை, பொறுமை, விடா முயற்சி — இம் மூன்றும், இவற்றுக்கு மேலாக அன்பும் வெற்றிக்கு இன்றியமையாதவை. பரபரப்பு கூடாது.

தன்னம்பிக்கை மிகவும் அவசியம். தன்னம்பிக்கை யுள்ளோரே பெருமையும் வலிமையும் எய்தியுள்ளனர் என்பது எந்நாட்டுச் சரித்திரமும் என்றைக்கும் போதிக்கும் உண்மையாகும்.

ஃ ஃ ஃ

இந்தியா வீழ்ந்தால் உலக ஞானமனைத்தும் வீழும்; ஒழுக்க முறைமைகள் ஒழியும்; மத உணர்வு அழியும்; இலட்சியங்களை நாடும் உணர்வு மடியும். காமமும் போகமுமே ஆண் தெய்வமும் பெண் தெய்வமும் ஆகும். அந்தத் தெய்வங்களுக்குப் பணம் பூசாரியாகும். வஞ்சனையும் பலாத்காரமும் போட்டியும் இந்தப் பூஜையின் சடங்குகளாகும். இந்த ஆராதனையில் ஆத்மாவே பலியாகும். இம் மாதிரி ஒருகாலும் நிகழலாகாது.

எழுச்சி கொள்மின்!
விழிப்புக்கொள்மின்!
குறிக்கோளை அடையும்வரை தளராது செல்மின்!





# காணும் கண்கள்

✦எஸ். பெருமாள்✦

'அந்த அணைப்பு பொய்யின் லே போலி யில்லை, புனிதமானது!'

நேற்று புஷ்பம் வரத் தவறி விட்டாள்.

வந்திருந்தால்....?

அவள் வராதிருந்தது மிக மிக நல்லது. ஏனென்றால், வர முடியாத வருத்தத்தில் அவள் உள்ளம் துடிப்பதைவிட, வந்திருந்து அந்தக்காட்சியைக் கண்டிருந்தால் எத்தனைவேதனை யுற்றிருப்பாள்....?

நேற்று இங்கு நடந்ததைப் பற்றி ஏதும் அறிய நியாய மில்லையாதலால், அவன் வர முடியாததற்கு மிகமிக நொந்து போனான். பதினைந்து நாட்களாக வேறு எங்கும் வெளியில் போக முடியாத மனக் கஷ்டத்தில், யாருடனும் பழக விரும்பாத விபரீதப் போக்கினால் தினம் மாலை இங்கு வந்து திரும்பும்போது அவனுக்கு ஆழ்ந்த துக்கமும், அதை மூடி மறைக்கும் ஆனந்த நிறைவும் இருக்கத்தான் செய்கிறது. ஆனால் நேற்று அவளால் வர முடியவில்லை. ஏதோ சந்தர்ப்பம். ஆகவே மானசீகமாக இவ்விடத்துக்கு வந்து திரும்பிய திருப்தியாய் அவள் வீட்டுக்குள் அடைபட்டுக் கிடந்தாள். தினம் இங்கு அவள் எதற்காக வருகிறாள்? யாருடன் பேச வருகிறாள்? யாருடன் உரையாடுகிறாள்? யாரைக் கண்ட நிறைவுடன் எழுந்து செல்கிறாள்?

உலகத்தின் கண்களுக்குப் புலனாகாத உருவெளித் தோற்றத்தில் எதையோ கண்டு உள்ளம் லயிப்பவளைப் போல், புஷ்பம், அன்றாடம் அங்கு வருகிறாள். கையில் நாலணா ரோஜாப் புஷ்பத்துடன் வருகிறாள்.

என்றும் போல் இன்றும் அவள் அதோ வந்து கொண்டிருக்கிறாள்.

அப்பரந்த வெளியையே அடைத்துக் காம்பௌண்டு சுவராய் எழும்பி, அதற்குப் பெரிய அளவிலே இரு கதவுகளும் போடப்பட்டிருக்கிறதே. அந்தக் கதவினருகில் அவள் வந்து நிற்கிறாள். மேலே வில் போன்று எழுந்துள்ள வளைவின் மையத்தில் கறுப்பு நிற மரச் சிலுவைக்குச் சரியாகக் கீழே வந்து நிற்கும்போது தன் நெஞ்சிலும் புனிதக் குறி செய்து கொள்கிறாள். அவள் வந்து நிற்பதைக் கண்ட காவல்காரச் சூசை அவசரமாகக் கதவருகே ஓடி வருகிறான்.

''ஸ்தோத்திரம்'' என்று கும்பிட்ட புஷ்பத்துக்கு, ''வாம்மா உள்ளே'' என்ற பதிலைக் கொடுத்து விட்டு அவள் பின்னால் நகர்ந்து நிற்கிறான்.

பதினைந்து வருடங்களாகப் பழக்கப்பட்ட பார்வை பாதையமைக்கவே அவள் தன் வழியே செல்கிறாள். அந்தப் பெரிய இடத்தின் ஒவ்வொரு அங்குல மண்ணும் அவளுக்குப் பழக்கம். இலந்தைச் செடியின் முட்கள் தைக்காமல் லாகவமாய் எவ்வளவு உயரத்திலிருக்கும் பழத்தையும் உலுக்கி எல்லோருக்கும் வழங்குவதும் கொடுக்காப்புள்ளி மரத்தை ஒட்டியுள்ள கட்டைச் சுவரில் ஒரு காலை வைத்து ஊன்றிக் கொண்டு தொரட்டிக் குச்சியால் உதிர்த்துத் தட்டுவதும், செவ்வந்திப் பூவைத் தினமும் பறித்து அங்குள்ள ஒவ்வொன்றின் மீதும் வைத்து விட்டு வருவதும், நினைவுக்கு வருகின்றன.

நடக்க நடக்க அவள் கண் முன்னே இளம் பருவத்து விளையாட்டுக்கள் பின்னிக்கொண்டு

> மக்களே ஒருவரோடொருவர் இசைந்து ஒரு பாலத்தை அமைத்திடு. அந்தப் பாலத்தின் மீது நடந்து சென்று கோடானு கோடி மக்கள் பிறவிக் கடலைத் தாண்டட்டும். நல்லனவற்றை நாடும் எல்லாப் பிரிவினரையும் ஒன்று சேர். இந்த மக்கட் குலப் படையில் கொடி எது என்பது முக்கியமல்ல. அது பச்சையா, நீலமா சிவப்பா என்றெல்லாம் பாராதே. எல்லா வண்ணங்களையும் ஒன்றாகக் குழைப்பதால் கிடைக்கும் வெண்மையான அன்பெனும் பரஞ்சோதிதான் உன் இலட்சியம்.
>
> — ஸ்வாமி விவேகானந்தர்

வருகின்றன. தலையைச் சுற்றி முக்காடிட்டிருந்த புடவைத் துணி காற்றில் படபடக்கிறது. ஒரு கையால் புடவையின் நுனியை இழுத்துப் பிடித்துக் கொண்டு வலது கையில் ரோஜாப் பூவை ஏந்தி அவள் நேரே நடந்து செல்கிறாள்.

வெளிக் கதவினருகே இருக்கும் தன் குடிசையில் நிற்கும் சூசை, அவளையே பரிதாபமாகப் பார்த்துக் கொண்டு நிற்கிறான். 'ஐயோ பாவம்' என்ற இரக்கம் நெஞ்சுகள் பெருகி நினைவை நனைக்கிறது. உறவில் பிறவாத பேத்தியாய், உள்ளத்தில் ஓரிடத்தைத் தானே பிடித்துக் கொண்டுவிட்ட மரிய புஷ்பத்துக்காகச் சூசையின் இதயம் கண்ணீர் வடிக்கத்தான் செய்கிறது.

அதோ.... புஷ்பத்தின் கால்கள் தளர்கின்றன. கண்ணீர் பெருகுகின்றது. பூப் பொட்டலத்தைப் பிரித்துக் கையில் கிண்ணம் போல் ஏந்திக் கீழே வைத்து விட்டு மண்டியிட்டு அமர்கிறாள். அவள் பார்வையிலே சோகம். கைவிரல்களின் அசைவிலே அநியாயமான நடுக்கம். நெஞ்சம் தாங்காத கனம்.

அவள் பார்வை நிமிர்கிறது. எதிரே தெரிவது....

காற்றாலும் கனலாலும், மழையாலும் மனிதனாலும் கலைக்க முடியாத ஒன்று. தரையிலிருந்து சிறிது சிறிதாக உயர்ந்து, நடுப்பாகம் பருத்து விம்மி, மறுபுறம் சரிந்து மீண்டும் தரையோடு தரையாய் ஒட்டியுள்ள சிறு மண்மேடு. அதன் தலைமாட்டில் புனிதச் சிலுவை. இவற்றை யாரும் எளிதில் கலைக்க முடியாதபடி கெட்டிப்படுத்தியவை சூசையின் கரங்கள்.

சூசை......?

ஆம்! அவன் கல்லறையின் காவலாளி!

சூசையைப் பற்றிய எண்ணம் வந்தவுடன் புஷ்பத்துக்குப் பழைய சம்பவம் ஒன்றும் நினைவில் மின்னுகிறது.

''நான் செத்துப் போய் இந்தக் கல்லறைக்கு வந்தா, தாத்தா, நீங்க நல்ல கெட்டி மண் போட்டு என்னை மூடுங்க.....'' இது புஷ்பத்தின் சிறுபிள்ளைத்தனமான பேச்சு.

''என்ன பேச்சு இது மரி....நீ வர்ற வரைக்கும் நான் மட்டும் இருப்பேனா...என்னையும் அதுக்குள்ளே இந்த மண்ணிலே புதைக்கிறதுக்குக் கர்த்தர் அருள் கிடைக்கடாதா?''

பாவம் புஷ்பம்.... தன்னை அம்மண்ணுக்குள் புதைக்கும்போது கெட்டி மண் போட்டுச் சிதையாமல் செய்துவிடச் சொன்னவள், இன்று அவளுடைய....

மண்டியிட்டிருந்த புஷ்பம் சில நிமிட நேரங்கள் கண்களை மூடிக் கொண்டிருந்துவிட்டுப் பின் கண்களைத் திறந்தவள், புனிதக் குறி செய்கிறாள். பிறகு பொட்டலத்திலிருந்த ரோஜாவை ஒவ்வொன்றாக எடுத்துச் சிலுவையினடியில் வைத்துவிட்டு மீதியை மண்மேட்டின் மையத்தில் வரிசையாக வைக்கிறாள். மேட்டின் மேல் செந்நிறத்தில் ஒரு சிலுவை காட்சியளிக்கிறது. இது இன்றைக்குப் புதியதில்லை; இரண்டு வாரமாகத் தொடர்கிறது.

பக்கத்திலுள்ள கல்லில் உட்காருகிறாள் புஷ்பம். வழக்கம்தான். கண்களைத் திறக்கும்போது மண்மேடும், மூடியிருக்கும் போது அதற்கடியில் அழியாத நித்திரையில் ஆழ்ந்திருக்கும் அன்புத் திருவுருவமும் அவளுக்குக் காட்சியளிக்கின்றன.

ரோஸ் மேரி!

பெயருக்கேற்றாற் போல் ரோஜா நிற மேனியில் கொத்துப் பூவை யொத்த வட்ட வடிவ முகத்தில் வண்ண முகத்தில் துள்ளித் துள்ளி அலைபாயும் அகன்ற கருநீலக் கண்கள். அப்பப்பா... அந்தக் கண்களுக்குத்தான் எத்தனை ஒளித் தெறிப்பு! வியப்பும் வேடிக்கையும் மாறி மாறித் தோன்றுகின்ற அந்த விழிகளை அகற்றியும் குறுக்கியும் அவள் பார்க்கும் பார்வை....

இனி யாருக்கு வரும் அந்த அழகு?

அழகின் துடிப்பை அகில உலகம் கண்டு வியக்குமுன்னரே அது மடிந்து மண்ணுக்குள் மறைந்து விட்டது. அது பிறந்ததெல்லாம் புஷ்பத்தை அழ வைக்கத்தான் போலும். மூன்று வயதே நிரம்பிய ரோஸியின் அழகு இனி அவள் தாய்க்கு அழுகை மூட்டும் பொருள். அதன் அறிவை, அழகை, அமானுஷ்யத்தன்மையை இனி என்றாவது காண முடியுமா? எங்காவது காண முடியுமா?

காண முடியாவிட்டால் காணுகின்றாற் போல் ஒரு நிறைவு புஷ்பத்துக்கு. அதனால் தான் தினமும் அவள் கல்லறையின் அருகே வந்து நின்று கண்ணீர் வடிக்கிறாள். கணவன் இறந்த பின்னர், அவனது மறைவைப் பற்றிய துயர் தெரியாமல் அவனது ஞாபகச் சின்னமாக இருந்த ஒரே விளக்கும் அணைந்து விட்டது. திமிர் இருளில் தடுமாறிய புஷ்பம் ஒளியைத் தேடிப் போகவில்லை. அந்த இருளிலே ஓர் இதமான இன்பம் கண்ட அவள், பள்ளிக்கூடத்துக்கும் போகாமல், வீட்டை விட்டும் வெளியே வராமல் பகலெல்லாம் அடைந்து கிடப்பாள். மாலைப் பொழுதிலே நாலணாவுக்கு ரோஜா — ரோஸிக்கு மிகவும் பிடித்தமானது அதுதானே, — வாங்கிக் கொண்டு வந்து உட்கார்ந்தாளானால், ''இருட்டிவிட்டதம்மா, எழுந்திரு'' என்று கையில் ஏற்றிய மெழுகு வத்தியுடன் வரும்

கல்லறைத் தாத்தா சொல்லும் வரையில் போகமாட்டாள்.

இதழ் உதிர்ந்த ரோஜா மலர் இனி ஒன்று சேர்ந்து உருவம் கொடுக்குமா? தன்னைப் பிரிந்ததால் துயரப்படும் தாயின் விழிநீரைத் துடைக்கத் தன் பிஞ்சுக் கரங்களை அசைத்து அசைத்து அருகே வருவாளா? துள்ளி வரும் மான் குட்டி துயில் மடுத்துக் கிடக்கும்போது துவளும் கொடி போன்ற தன் தாயைத் தூக்கி நிறுத்த வருவாளா?

''ரோஸி....!''

கண்ணின் இமைகள் மெல்ல மெல்லப் பிரிவதற்குள் அவற்றின் அடிப்புறத்தே தேங்கிக் கிடந்த கண்ணீர் முத்துச் சரம் தொடுத்துக் கன்னங்களில் உருளத் தொடங்குகிறது. துன்பத்தில் துடிக்கும் அதரங்களில், ''ரோஸி....'' என்ற அழைப்பு விட்டுவிட்டு ஒலிக்கிறது.

புஷ்பம் தாய். அவள் வருகிறாள்.

எதிரே நிற்கும் இளம் உருவம் தன் பிஞ்சுக் கரத்தாலே அவளது கண்ணீரைத் துடைக்கிறது. சில்லிட்ட கன்னத்திலே குஞ்சுக் கைகளின் வெதுவெதுப்பு பட்டவுடன் அவள் தேகம் சிலிர்க்கிறது.

''ரோ ....'' என்ற வாஞ்சை ததும்பும் வார்த்தை வாயினின்றும் வெடிக்கின்ற அதே படபடப்பில் மூடிக் கிடந்த இமைகள் விரிகின்றன.

பாவம், புஷ்பம்....! எதிரே மண் முகட்டைத்தான் காணுகிறாள். அதன் மேல் வைத்தது போலவே அழகான செந்நிறச் சிலுவை.

ரோஸி வரவா போகிறாள்?

இல்லை, ஆனாலும் புஷ்பத்துக்கு ஏதோ ஓர் எண்ணம். அவள் வருவாள், இனமும் வருகிறாள் என்ற நம்பிக்கை. அதனால்தானே பள்ளிக்கூடத்துக்குக் கூடச் செல்லாமல், இரண்டு வாரம் லீவு வாங்கிக் கொண்டு வீடே சதம் என்று அடைந்து கிடந்துவிட்டு மாலையில் ரோஸியைக் காண வருகிறாள்.

மீண்டும் கண்களை மூடிக் கொண்டு கல்லின் மேல் சாய்ந்து விடுகிறாள் புஷ்பம். பார்வைத் திரைக்குப் பின்னால் படரும் வாழ்வுத் திரையில் அறுந்து போன நிழற் படங்களைச் சங்கிலியாக இணைத்துப் பிணைத்து அவள் மகிழ்கிறாள்; மறுகணம் மனம் நொந்து போகிறாள். ரோஸி மூன்றாண்டுக் காலத்தில் தாய்க்கு அளித்த இன்பம், இன்னும் இருந்திருந்தால் தந்திருக்கும் தனியான மகிழ்வு யாவையும் நினைவில் எண்ணிக் கல்லாய்ச் சமைந்திருக்கிறாள் புஷ்பம்.

மரத்துக்குப் பின்பக்கமிருந்து சிறு குழந்தையின் விசும்பல் ஒலி கேட்கிறது. திடுக்கிட்டுத் திரும்பிப் பார்க்கிறாள் புஷ்பம்.

மூன்று வயது மதிக்கத் தக்க சிறுமி. முகம் தெரியவில்லை. முழந்தாளிட்டுக் கைகளைக் கூப்பிக் கொண்டிருக்கிறாள். தோற்றத்தில் ரோஸியை ஒத்திருக்கும் அந்தச் சிறுமியின் செய்கையை ஏதோ ஒரு வெறியுடன் பார்க்கிறாள் புஷ்பம்.

சற்று நேரம் மௌனமாகப் பிரார்த்தனையை முடித்தபின்னர், நெற்றியில் புனிதக் குறி செய்கிறாள் சிறுமி. எழுந்து நின்று கையிலிருந்த பொட்டலத்தைப் பிரித்து எதிரே உள்ள மண் மேட்டின் மேல் வரிசையாகச் சிலுவை போல் அடுக்குகிறாள், புஷ்பம் அடுக்கியிருப்பதைப் போல.

பிறகு மீண்டும் மரத்தடியில் உட்கார்ந்து கால்களைக் கட்டிக் கொண்டு கண்ணீர் விடுகிறாள் சிறுமி. ரோஜாவைப் போலவே இளஞ்சிவப்பாய் உள்ள அக் கன்னத்தில் உருண்டு வழியும் கண்ணீர் நின்றபாடில்லை.

புஷ்பத்துக்கு என்னவோ போல் இருந்தது: 'அவள்.... அந்தச் சிறுமி.... ரோஸியைப் போல்...' அந்தத் தாய் மனத்தால் அதற்கு மேல் பொறுமையாக இருக்க முடியவில்லை.

''ரோ ....'' என்று வாய்விட்டு அலறி விடுகிறாள்.

திடுமெனக் குரல் வரவே, திடுக்கிட்டுத் திரும்பிய அச்சிறுமி, புடவைத் தலைப்பில் முகத்தைப் புதைத்துக் கொண்டு குலுங்கும் புஷ்பத்தினருகில் வருகிறாள். அவள் வந்ததை அறியாத புஷ்பம், ''என் செல்வமே....; ரோ .....'' என்று வாய்க்குள் முணுமுணுக்கிறாள்.

புஷ்பத்தின் பக்கத்தில் ஒட்டி நின்று கொண்டு ஒரு கையால் அவள் தலையை வருடிய சிறுமி, மற்றொரு தளிர்க் கரத்தால் முகத்தை நிமிர்த்த முயல்கிறாள். குளுமையூட்டும் குழந்தையின் ஸ்பரிசம் பட்டும்படாததைப் போல் உணர்வின்றித் தலை கவிழ்ந்தபடியே குலுங்குகிறாள் புஷ்பம்.

''ஆன்ட்டி...'' தேன்துளிகளைச் சொட்டுச் சொட்டாக அவள் காதுகளில் ஊற்றுவதைப் போன்ற உணர்வு எழுந்தவுடன் புஷ்பம் தலை நிமிர்கிறாள். மாலை மாலையாக வடியும் கண்ணீரைத் தன் கரங்களினால் துடைக்க முயன்ற சிறுமி இன்னும் நெருங்கி நிற்கிறாள்.

''ஏன் ஆன்ட்டி.... அழறீங்க...?''

புஷ்பம் பதில் சொல்லாமல் அந்தக் குழந்தையை வெறித்துப் பார்க்கிறாள். துன்பம் துடைக்க வந்த தெய்வம் போல், அன்னை மரியின் அருள் வடிவம் போல், அக்குழந்தை எதிரே நின்று கொண்டிருக்கிறாள். அவளைப் பார்க்கும் போதெல்லாம் இறந்து விட்ட ரோஸியின் நினைவே படமெடுத்ததால் மீண்டும் 'ஓ'வென அழுது அவளை அணைத்துக் கொள்கிறாள். புஷ்பத்தின் வெறிப் பிடியில் அகப்பட்ட பூச்செண்டு அவளது முகத்தையே உற்று நோக்கிய பின், ''உங்க அம்மாவும் செத்துப் போயிட்டாங்களா ஆன்ட்டி...?''

> நீ பட்டினி கிடந்தாயினும் உன்னிடமுள்ள கடைசிப் பருக்கையையும் தானமளித்துவிடு. தர்மம் செய்வதால் மரணம் நேரிடினும் அது சாதாரண மரணமாகாது; மோக்ஷமேயாகும். அப்படிக் கிட்டும் முடிவினால் நீ பூரணப் பொருளாவாய், தெய்வமாவாய்.
>
> —ஸ்வாமி விவேகானந்தர்

ஏழைகளும், அபாக்கியசாலிகளும் இருப்பது நம் முக்திக்காகவே. அவர்களின் உருவத்திலும் இன்னும் பித்தனாகவும், பிணிவாய்ப் பட்டவனாகவும், பாவியாகவும் இருக்கும் பகவானுக்கு நாம் பணி செய்து முக்தி பெறவேதான் இவர்கள் யாவரும் இருக்கிறார்கள்.

—ஸ்வாமி விவேகானந்தர்

என்று கேட்கிறாள். இதற்குள்ளாகவே குரலில் கரகரப்புத் தட்டி அழுகை அணையை உடைத்துக் கொண்டு பெருகுகிறது.

"உங்க அம்மாவும்....." என்று அவள் கேட்டதிலிருந்து அதற்கு முன்னர் ஏதோ தேக்கி நின்ற ஒன்றை உணர்ந்து கொண்ட புஷ்பம் சரேலெனப் பின்னால் திரும்பிப் பார்க்கிறாள்.

ஆறடி நீளமும், இரண்டடி அகலமும் உள்ள பெரிய மண்மேடு. நேற்று — அவள் வராத போது — புதிதாக ஏற்படுத்தப்பட்டிருக்க வேண்டும். அதன் மேல் அழகாகச் சிருஷ்டிக்கப்பட்ட செந்நிறச் சிலுவை....

இதோ எதிரில் அதைச் சிருஷ்டித்த சிறுமி!

"எங்க அம்மா ஏசுவைப் பார்க்கணுமின்னு போனப்பிலே உங்க அம்மாவும் போயிருக்காங்களா ஆன்ட்டி...?"

'கர்த்தரே...உம்மைப் பெற்றவள் வேறெங்கும் இல்லை... இதோ இங்கு நிற்கிறாள். மூன்று வயதுகூட நிரம்பாத முத்துப் போல் நிற்கிறாள்.'

"ஆன்ட்டி.... நேத்து எங்கம்மாகூட நானும் இங்கே வந்தப்போ, அப்பா அந்தத் தாத்தா, இன்னும் எல்லோரும் சேர்ந்து அம்மாவை மட்டும் பெட்டியோட இங்கே வச்சுட்டாங்க ஆன்ட்டி!"

புஷ்பத்தின் நெஞ்சு துக்கத்தால் இற்றுக் கொண்டே வருகிறது.

"அப்பா எல்லோரும் புறப்பட்டாங்க. நான் அம்மாவைக் கூட்டிட்டுப் போகலாம், இருங்கன்னு சொன்னதற்கு எங்கப்பா என்னைக் கட்டிப் பிடிச்சு அழுதார் ஆன்ட்டி.... வரும் போது நம்மகூட வந்த அம்மா, இப்போ போகும்போதும் வந்தால்தான் வருவேன்னு அழுதேன். நாளைக்கு வந்தா உன்னோட அம்மாவும் வருவா, இன்னிக்குப் போகலாம்னு கூட்டிக்கிட்டுப் போயிட்டார் என்னை."

"ரோ ....." என்ற ஒரே குரலில் உள்ளத்து வேதனைகளை யெல்லாம் கொட்டித் தீர்த்து விட்ட புஷ்பம் அவளை நெஞ்சோடு அணைத்துக் கொண்டாள்.

"நீங்களும் உங்க அம்மாவைக் கூட்டிக்கிட்டுப் போகத்தானே வந்திருக்கீங்க....?"

புஷ்பத்தால் பதில் சொல்ல முடியவில்லை. நினைத்தறியாத சோகம் நெஞ்சைப் பிழிந்தது.

ரோஸி இறந்தபின்னர் எந்தக் குழந்தை முகத்தையும் ஏறெடுத்துப் பார்க்கப் பிடிக்காத புஷ்பத்துக்கு இது என்ன சோதனை இன்று?

"ஆன்ட்டி.... நேத்து நாங்க வந்தப்போ ரொம்ப மாலையெல்லாம் அப்பா போட்டார். அதுனாலே நானும் பூ வாங்கிட்டு வந்து வச்சேன்... ஆன்ட்டி... எங்க அம்மாவுக்கு ரோஜான்னு ரொம்பப் பிடிக்கும். உங்க அம்மாவுக்கும் அதுதான் பிடிக்குமா?...... ரோஜாச் சிலுவை வைச்சிருக்கீங்களே...?"

புஷ்பம் மௌனமாக அந்தக் குழந்தையை ஏறிட்டுப் பார்த்தாள். அது சொல்லிய செய்திகள் சிலவென்றாலும் சொல்லாமல் விளக்குகின்ற விவரங்கள் எத்தனையோவாகப் பட்டது அவளுக்கு.

ரோஸியின் மறு பதிப்போ அப்பெண்?

"உன் பேர் என்ன பாப்பா?"

"பிலோமினா.... 'பிலோ'ன்னு கூப்பிடுவாங்க" என்றவள், புஷ்பத்தையே சில விநாடிகள் உற்றுப் பார்த்தாள்.

"ஆன்ட்டி.... எங்க அம்மா மாதிரியே இருக்கீங்க நீங்க. எங்கம்மா இப்படியேதான் இருப்பாங்க..." என்று திடீரென்று கூவினாள்.

புஷ்பத்தின் நெஞ்சு சுரீர் என்றது. உருவத்தில் சிறியவளானாலும் உள்ளத்தில் அக்குழந்தை எத்தனை உயர்ந்தவள்? எதிரே நிற்கும் பெண்ணிடம் இறந்து போன தன் தாயைக் கண்டு நிறைவு பெறும் அச்சிறுமியின் முன்னால் இறந்த குழந்தையின் நினைவாக வேறு எந்தக் குழந்தையையும் ஏனென்று பார்க்காத அவள் எம்மாத்திரம்? பள்ளிக்கூடம் சென்று வந்தால் பால்வடியும் குழந்தைகள் முகத்தைக் கண்டாவது ஆறுதல் பெற்றிருக்கலாமே?

அவள் தன்னை அணைத்துக் கொண்டு நிற்கும் பிலோவின் கன்னங்களை வருடினாள். அகன்று அழகு விரிக்கும் கண்களைப் பார்த்தாள். நீரில் ஊறிய இமைகள், காற்றில் சற்றே காய்ந்திருந்தாலும் மேலும்மேலும் ஊற்றுப் பெருக்கெடுக்கும் கண்ணீர்க் குளத்தில் நனைந்து இன்னும் கருமையூட்டியது. கருநீலக் கண்களின் விழிகளில் ஆழப் பதிந்துள்ள அன்பு, அருள், அழகு யாவும் அவளுக்கு ரோஸியை நினைவூட்டின. அந்தக் கண்களை அவள் கண்ட பின்னர், அவை அவளுக்கு உணர்த்தியன எவ்வளவோ! எதிரே காணும் கண்களிலே தன் குழந்தையைக் கண்ட புஷ்பம் 'பிலோ' என்றாள்.

"என்ன ஆன்ட்டி...?"

"இனிமேல் நான் உன் ஆன்ட்டியில்லை, அம்மா.....!"

"அம்மா!"

"ரோ .....!"

புஷ்பத்தின் இறுகிய பிடிக்குள்ளே சிக்கியிருக்கும் பிலோமினா இனி அவள் ரோஸி. அவள் பிலோவின் தாய். அந்த அணைப்பு பொய்யில்லை, போலியில்லை, புனிதமானது.


"பேஷ்! 'சார்ட்' ரொம்ப மேலே போறதே!"
"பாவி மனுஷா; பேஷாவது! அது என் வியாபார 'சார்ட்' இல்லை; என் பிளட் பிரஷர் சார்ட்"
பின்னே அதுபண்ற விஷமத்தைப்பாரு! சாதம் ஊட்டினா தூ... தூ...ன்னு துப்பறது!
"அப்பா, இது உன் கல்யாண போட்டோவா?"
"ஆமாண்டா கண்ணு!"
"அப்ப உன் பக்கத்திலே அழகா நிக்கறது யாரு?"
???
கான சபா
கச்சேரிக்கு உள்ளே வரக் கட்டணம் கிடையாது; இலவசம். எல்லோரும் வரலாம்.
"அது சரி செகரட்டரி சார்! அந்த போர்டில் என்ன எழுதலை?"
"வெளியில் போவதற்குத்தான் கட்டணம் வசூலிக்கப் படும் என்று எழுதலைன்."
"அடப் பாவமே! இப்படியா சார் நீங்க கார் ஆக்சிடெண்டிலே அடிபட்டீங்க?"
"நீங்க ஒண்ணு! கார் ஆக்சிடெண்டிலே துளிக்கூடக் காயம் படவில்லை! காரை மோதிய டிரைவரைக் கோபித்தேன், அதனால் வந்த வினைதான்!"

# பின்னியின் மொகோலின்



## சுறுசுறுப்புள்ள மனிதர்களுக்கான புதியதோரு ஷர்ட்டிங்

QUALITY FABRICS

BINNY & CO. (MADRAS) LTD

உங்களுக்குத் தேவையான பின்னி துணிகளை இந்த அடையாளம் காணும் அனுமதி பெற்ற பின்னி விற்பனையாளரிடமிருந்து கண்ட்ரோல் விலைக்கே வாங்குங்கள்.

காற்றுப்புகக் கூடிய இந்த அருமையான துணி நாள் முழுவதும் உங்களைப் புத்துணர்ச்சியுடனும் குளிர்ச்சியாகவும் இருக்க உதவுகிறது. சுகமாய் அணிவதற்கு உகந்ததொரு ஷர்ட்டிங் மொகோலின்.

பக்கிங்ஹாம் & கர்நாடிக் கம்பெனி லிமிடெட்.
பின்னி & கம்பெனி (மதராஸ்) லிமிடெட்
ஸ்தாபனத்தின் ஒரு கிளை.

JWT/BC/MK/3019a

# பொன் விலங்கு

**மணிவண்ணன்**

## இரண்டாவது அத்தியாயம்

பரிபூரணமாக இரண்டு கண்களிலும் ஒத்திக் கொண்டு வணங்குவதற்கும் அதிகமான மரியாதை எதையாவது செய்ய முடியுமானால் அதையும் செய்யலாம் போல அத்தனை அழகிய பாதங்கள்தாம் அவை. வெளேரென்று சுத்தமான நகங்களுக்குக் கீழே பவழ மொட்டுப் போல் நுனிகளோடு வரிசையாய் முடியும் விரல்கள். அதன் அடிப்புறம் கீழ்ப் பாதத்தில் சிவப்பு நிறம் குன்றிப் பளீரென்று தெரியும் வெண் பளிங்கு நிறம் தொடங்குகிறது. எதிரே அமர்ந்திருந்த சத்தியமூர்த்தியின்பாதங்களைப் பார்த்துக் கொண்டே திரையை நன்றாக விலக்கி விட்டு வெளியில் வந்த அந்தப் பெண் திரையில் எழுதியிருந்த ஏராளமான கிளிகளுக்கு நடுவேயிருந்து விடுபட்டுத் தனியே பறந்து வந்த ஒற்றைப் பச்சைப் பசுங் கிளியாய்த் தோன்றினாள்.

இன்னும் நன்றாகச் சொல்ல வேண்டுமானால் வைகறையில் ஒலிக்கும் பூபாளத்தைப் போல அந்த நேரத்தின் ஒரே அழகு தானேயாய், அந்த இடத்தின் ஒரே அழகு தானேயாய் அங்கு வந்து நின்றாள் அந்தப் பெண்.

''என் மகள் பாரதி...'' என்று சத்தியமூர்த்தியிடம் சொல்லி விட்டுப் பெண்ணின் பக்கமாய்த் திரும்பி, ''இவர் நம்முடைய கல்லூரியில் தமிழ் விரிவுரை





யாளராவதற்காக விண்ணப்பம் போட்டிருக்கிறார். பெயர் சத்தியமூர்த்தி'' என்று ஒருவருக்கொருவர் அறிமுகம் செய்து வைத்தார் பூபதி. முதற்பார்வையின் முதற்கணத்திலேயே நேர்ந்து முடிந்து விடுகிற பல அறிமுகங்கள் பெயரும் ஊரும் சொல்லாமலே கவனிக்க வேண்டுமென்ற கவர்ச்சியிலோ, ஆர்வத்திலோ, தற்செயலாக நேர்ந்தாலும் நடுவில் ஒருவர் இருந்து பேசியோ, புனைந்துரைத்தோ, செய்து வைக்காது இயற்கையாக நேரும் அந்த அறிமுகமே முதன்மையானதா யிருக்கிறது. அவனுடைய கண்கள் தாமாகவே முன் சென்று தரையில் பூத்துக் கிடக்கும் செந்தாமரைகளாய்த் தெரிந்த அந்தப் பாதங்களை முதன் முதலில் தனக்கு அறிமுகம் செய்து கொண்டன. அவனுடைய கண்களோ கிளிகள் பறக்கும் திரையின் நடுவே வண்டுகள் பறப்பது போல் துறுதுறுவென்ற கண்களோடு தெரிந்த அந்தக் கவர்ச்சிகரமான முகத்தை அறிமுகம் செய்து கொண்டன. அதற்குப் பிறகு இரண்டாவதாக யார் இன்னாரென்று நடுவில் வேறொருவர் சொல்லி விளக்கிச் செய்து வைத்த அறிமுகம் தான் செயற்கையாயிருந்தது.

பெண்ணிடம் ஏதோ சொல்லி அவளை உள்ளே அனுப்பிய பின் மறுபடியும் சத்தியமூர்த்தியின் பக்கமாகத் திரும்பி இண்டர்வ்யூவைத் தொடர்ந்தார் பூபதி. கண்டிப்பாகப் பேசுவது போல் அவருடைய பேச்சு இருந்தாலும் அவர் அவனுடனே உரையாடும் நேரத்தை வளர்த்துக் கொண்டு போக விரும்புகிறார் என்பதைத் தெரிந்து கொள்ள முடிந்தது.

''மிஸ்டர் சத்தியமூர்த்தி! எங்கோ ஒதுக்குப்புறமாக இருக்கும் இந்த மலைநாட்டு நகரத்தில் ஒரு கல்லூரியை நான் எதற்காக நடத்திக் கொண்டிருக்கிறேன் தெரியுமா? கல்வியை வளர்ப்பதைவிட அதிகமாக ஒழுங்கையும் கட்டுப்பாட்டையும் வளர்க்க வேண்டும் என்று ஆசைப்படுகிறேன் நான். என்னுடைய கல்லூரியில் 'இண்டர்வ்யூ'வுக்கு வருகிற முதல் நாளிலேயே தாமதமாக வருகிற ஒருவரைப் பற்றி நான் என்ன அபிப்பிராயம் கொள்ள முடியும்?''

''மன்னிக்க வேண்டும்! என் முயற்சியையும் மீறி நடந்த தவறு இது. நான் வேண்டுமென்றே இப்படித் தாமதமாக வரவில்லை.''

—பூபதி அவன் முகத்தைக் கூர்ந்து நோக்கிச் சிரித்தார். பின்பு அவருடைய கேள்விகள் வேறு விதமாகத் திரும்பின. சத்தியமூர்த்தியின் கல்வித் திறனையும், தகுதிகளையும் அறிந்து கொள்ள முயலும் கேள்விகள் அவரிடமிருந்து ஒவ்வொன்றாகப் பிறந்தன. அவற்றில் சில கேள்விகள் அவனை ஆழம் பார்ப்பவையாகவும் இருந்தன.

''இதோ, என் பக்கத்தில் அமர்ந்திருக்கிறாரே; எங்கள் கல்லூரியின் பிரின்ஸிபல் — இவருக்குத் தமிழ் ஆசிரியர்களைப் பற்றி எப்போதுமே ஒருவிதமான பயமும் சந்தேகமும் உண்டு''

-என்று சொல்லிவிட்டுத் தம்முடைய அந்தக் கேள்வி சத்தியமூர்த்தியின் முகத்தில் எந்த உணர்ச்சியைப் பரவவிடுகிறதென்று கவனித்தார் பூபதி.

சத்தியமூர்த்தியின் இதழ்களில் புன்னகை மலர்ந்தது. ''பயத்துக்கும் சந்தேகத்துக்கும் உரியவர்களாயிருப்பதற்கு அப்படி நாங்கள் என்ன செய்கிறோம்?''

''ஒன்று, மாணவர்கள் மனங்களை எல்லாம் முற்றிலும் உங்கள் வசமாக்கிக் கொண்டு நீங்கள் சொல்லியபடி ஆட்டிப் படைக்கிறீர்கள். இரண்டு, பிடிவாதமும் முரட்டுக் குணமும் உள்ளவர்களாயிருக்கிறீர்கள். மூன்று, உங்கள் மொழியைத் தவிர மற்ற மொழிகளை மதிக்க மறுக்கிறீர்கள். உண்டா, இல்லையா...?''

''மாணவர்களை எங்கள் வசமாக்கிக் கொள்ள முடிவது எங்களது சாமர்த்தியம்தானே தவிரக் குற்றமாகாது. பிடிவாதமும், முரட்டுக் குணமும், மனிதர்களில் பலரிடம் உண்டு. அது எங்களிடம் மட்டுமே இருப்பதாகச் சொல்வதை நான் ஒப்புக் கொள்ள முடியாது. ஓர் ஆசிரியனுக்குத் தான் எந்த மொழியைக் கற்பிக்கிறானோ அந்த மொழியின் மேல் மதிப்பு இருப்பது எப்படிக் குறையாகும்? ஒரு குறிப்பிட்ட இனத்தாரைப்பற்றி எப்போதோ, எதற்காகவோ ஏற்பட்ட ஓர் அபிப்பிராயத்தை அந்த இனம் மாறி வளர்ந்து விட்ட பின்பும் நிரந்தர வழக்கமாக்கிக் கொள்வதைப் பொறுத்துக் கொள்ள முடியாது. நான் என் தாய்மொழியை மதித்து வணங்குகிறேன். மற்றமொழிகளை மதிக்கிறேன்.''

தன் முகத்தில் துணிவும் தன்னம்பிக்கையும் ஒளிர இந்த வார்த்தைகளைச் சத்தியமூர்த்தி கூறியபோது கல்லூரி முதல்வரும் அதிபர் பூபதியும் ஒருவர் முகத்தை மற்றொருவர் பார்த்து மெல்லச் சிரித்துக் கொண்டார்கள். ஒளி படைத்த கண்களில் உணர்ச்சியின் சாயல்கள் நன்கு தெரியும்படி தான் வாதிடுகிற விஷயம் எதுவோ அதில் சிரத்தையும், கவனமும் அழுத்தமும் கொண்டு சத்தியமூர்த்தி விவாதிக்கும் நயத்தை அந்தரங்கமாகத் தமக்குள் இரசித்துக் கொண்டிருந்தார் பூபதி. இப்படித் தெளிவாகப் புரிந்து கொள்ள

வும், தெளிவாக விவாதிக்கவும் முடிந்த இளைஞர்கள் பலர் இந்த நாட்டுக்கு இன்று தேவை என்று நினைக்கிறவர் பூபதி. அதனால்தான் சத்தியமூர்த்தியின் பேச்சு அவரைக் கவர்ந்தது. அப்படிக் கவர்ந்தாலும் அந்தக் கவர்ச்சியை வெளிக் காட்டிக் கொள்ளாமல் கடுமையாக இருப்பவர் போல் அவனிடம் கேள்விகளைக் கேட்டுக் கொண்டிருந்தார் அவர்.

பேச்சுக்குநடுவே அவரது மகள் பாரதி ட்ரேயில் தேநீர் கொணர்ந்து மூவருக்கும் அளித்தாள். வளை விளையாடும் அந்தப் பட்டுக் கை தேநீர்க் கோப்பையைப் பீங்கான் தட்டுடன் எடுத்து நீட்டிய போது ஒரு கணம் தனக்கு மிக அருகில் தெரிந்த அந்தத் தோற்றத்தின் அழகைக் கவனித்தான் சத்தியமூர்த்தி.

மகிழ்ச்சி பூத்து மலரும் குறுகுறுப்பான விழிகள். அந்த விழிகளே இதழ்களின் செயலைச் செய்து சிரிக்கும் நயம். இரசம் தளும்பி நிற்க ஈரச்சாயல் தெரியும் சிவப்புத் திராட்சைக் கனி போல் இதழ்கள். அந்த இதழ்களின் செம்மை மினுமினுப்பில் ஒரு மயக்கும் தன்மை. மொத்தத்தில் இருளை அள்ளிப் பூசிக் கொண்டு எதிரே வந்து நிற்கும் மின்னலைப் போல் அவள் அந்தக் கருநீலப் புடைவை உடுத்திய கோலத்தில் தோற்றமளித்துக் கொண்டிருந்தாள். கண் முடிகிற கோடி நுனியில் காதோரமாக இமைகளின் பூமயிர் மேல் நோக்கி ஏறி இறங்கி ஒரு சுழிப்புச் சுழித்திருந்த அழகையும், 'இந்த இடம்தான் நீங்கள் மயக்கப்படுகிற இடம்' என்று அந்த இடத்தில் கோடு கீறிக் காட்டினாற் போன்ற புருவங்களின் வனப்பையும் பார்த்த சத்தியமூர்த்தி அந்த அழகை எவ்வளவுக் கெவ்வளவு அருகில் நெருங்கிக் கண்டானோ அவ்வளவுக் கவ்வளவு தனக்கும், அதற்கும் நடுவில் உள்ள தொலைவை அவனால் உணர முடிந்தது.

ட்ரேயைக் கொண்டு போய் வைத்து விட்டு மறுபடி அந்த அறைக்குள் வந்து புத்தக அலமாரிக்குப் பக்கத்தில் ஒதுங்கி நின்று கொண்டாள் அந்தப் பெண். மூன்று ஆண் பிள்ளைகள் உட்கார்ந்திருக்கிற இடத்தில் உள்ளே நுழைந்தவுடன் நான்காவது நாற்காலியில் தானும் உட்கார்ந்து விடாமல் சற்றே நாணத்தோடு அவள் ஒதுங்கி நின்றது சத்தியமூர்த்திக்கு மிகவும் பிடித்தது. செழிப்பும் பண வசதியும் உள்ள பல வீடுகளில் பெண்கள் ஆண்களாக நடந்து கொள்வதைச் சத்தியமூர்த்தி கவனித்திருக்கிறான். வெறுத்திருக்கிறான்.

''பணக்காரவீட்டுப் பெண்களிடம் சிறிதும் இல்லாதது நாணம்; அதிகமாக இருப்பது அகம்பாவம். பெண்ணோடு அகம்பாவத்தையும் சேர்த்துப் பார்ப்பது தண்ணென்று குவித்த மணமிக்க மலர்க் குவியலில் நெருப்புப் பிடிப்பதைப் பார்ப்பது போல் பொருத்தமில்லாத சேர்க்கையாகத் தோன்றுகிறது. பெண் என்றால் அமைதி என்று அர்த்தம். இன்றோ அது பெண்ணைத் தவிர எல்லாரிடமும் இருக்கிறது'' என்று நண்பர்களிடம் பல சமயங்களில் பேசி யிருக்கிறான் அவன். பூபதியின் மகள் பாரதி அவன் சந்தித்த செல்வக் குடும்பத்துப் பெண்களில் முற்றிலும் புதுமையானவளாக இருந்தாள்.

பொன் வரிகள்

பெண்களோடு அகம்பாவத்தையும் சேர்த்துப் பார்ப்பது தண்ணென்று குவித்த மணமிக்க மலர்க் குவியலில் நெருப்புப் பிடிப்பதைப் பார்ப்பது போல் சிறிதும் பொருத்தமில்லாத சேர்க்கையாகத் தோன்றுகிறது.

பாரதியைப் பற்றிய அவன் சிந்தனைகளும் கவனமும் கலைந்து போகும்படி பூபதியின் கேள்விகள் மீண்டும் அவனை நோக்கி ஒலித்தன.

''மிஸ்டர் சத்தியமூர்த்தி! இந்தக் கேள்வியை உங்களிடம் கேட்பதற்காக நீங்கள் வருத்தப்படக் கூடாது. நீங்கள் படித்துப் பட்டம் பெற்ற கல்லூரி அரசியல் குழப்பங்களுக்கும் மாணவர்களின் அடிதடி வம்புகளுக்கும் கால் நூற்றாண்டுக் காலமாகத் தமிழ் நாட்டில் பெயர் பெற்ற கல்லூரியாயிற்றே; முதல் வகுப்பில் தேறியிருந்தாலும், நிறைய நற்சான்றிதழ்களும், பதக்கங்களும் பரிசுகளும் பெற்றிருந்தாலும் நீங்கள் படித்த கல்லூரியைப் பற்றி நினைக்கும்போது நான் பயப்படுவது நியாயம்தானே?''

''இருக்கலாம். ஆனால் அப்படிப்பட்ட கல்லூரி ஒன்றில் படித்து உருவாகி வளர்ந்ததினால்தான் உங்கள் கல்லூரியைப் போல் ஒழுங்கும் கட்டுப்பாடும் உள்ள இலட்சியக் கல்லூரி ஒன்றில் வேலை பார்க்க வேண்டும் என்ற ஆர்வமே எனக்கு உண்டாகி யிருக்கிறது. அந்தக்கல்லூரியில் படிப்பைத்தான் நான் கற்றுக் கொண்டேனே ஒழியக் குழப்பங்களையும், அடிதடியையும் தேடிக் கற்றுக் கொள்ள வில்லை.''

—என்று சத்தியமூர்த்தி தலை நிமிர்ந்து மறுமொழி கூறிய போது எதிரே ஓர் ஓரமாக ஒதுங்கி நின்று கொண்டிருந்த பாரதியின் இதழ்களில் சிரிப்பு இழையோடியது. அவனுடைய மறுமொழியை அவள் இரசித்து மகிழ்கிறாள் என்பதற்கு அந்தச் சிரிப்பு ஓர் அடையாள மாக இருந்தது.

'' உங்கள் வார்த்தைகளை நான் அப்படியே நம்புகிறேன் சத்தியமூர்த்தி ! ஆனால் நீங்



களே உங்களோடு எடுத்துக் கொண்டு வந்திருக்கும் சாட்சியங்கள் என் நம்பிக்கைக்கு நேர்மாறாக இருக்கின்றனவே ? கல்லூரி மாணவர் யூனியனின் தலைவராக இரண்டு முறைகள் தொடர்ந்து நீங்களே இருந்திருக்கிறீர்கள். தவிர இதோ இந்த 'சர்டிபிகேட்' கல்லூரி நாட்களில் நீங்கள் மேடைப் பேச்சிலும், விவாதம் செய்வதிலும் இணையற்றவர் என்று வேறு சொல்லுகிறது. இவ்வளவும் உள்ள ஒருவர் அரசியல் குழப்பங்களிலிருந்து எப்படித் தப்பியிருக்க முடியும் என்று நான் சந்தேகப்படுகிறேன்...''

'' சந்தேகப்படுவதற்கு எவ்வளவு உரிமை உங்களுக்கு உண்டோ அவ்வளவு உரிமை அதை மறுப்பதற்கு எனக்கும் உண்டு. ஒவ்வொரு சந்தேகத்துக்கும் அதை மறுப்பவனுடைய தெளிவிலிருந்துதான் ஆயுள் கணிக்கப்படுகிறது



மேடைப் பேச்சும், விவாதத் திறமையும் என் சாமர்த்தியங்கள். அவற்றைநான் படித்த கல்லூரியின் குழப்பங்களுக்கு இடையேயும் நான் தேடி அடைந்திருக்கிறேன் என்பதற்காக நீங்கள் என்னைப் பாராட்ட வேண்டும்.''

—இப்போதும் தன்னுடைய பதிலின் நயத்தையும் அழுத்தத்தையும் பாராட்டி மகிழ்வது போல் அந்தப் பெண்ணின் கண்களும் இதழ்களும் சிரித்ததைச் சத்தியமூர்த்தி கவனித்தான்.

சத்தியமூர்த்தியின் மறுமொழிகளைக் கேட்கக் கேட்கக் கல்லூரி அதிபர் பூபதிக்கு ஒரு தகுதி வாய்ந்த மனிதனைச் சந்தித்துக் கண்டுபிடித்து விட்டோம் என்று அந்தரங்கமாகப் பெருமகிழ்ச்சி ஏற்பட்டுக் கொண்டிருந்தது. அதை மறைத்துக்கொண்டே அவர் மேலும் வழக்கமான கேள்விகளைக் கேட்கலானார்:

''எம். ஏ., பி. ஓ. எல். போன்ற பட்டங்களைப் பெறுகிறவர்களை விடப் பத்துப் பன்னிரண்டு ஆண்டுகள் ஒரே ஆசிரியரிடம் நிகண்டு முதல் தொல்காப்பியம்வரை பாடம் கேட்டுத்தேர்ந்ததமிழ்ச் சங்கப் பண்டிதர்களும், புலவர்களும், வித்துவான்களும் தமிழைஆழ

மாகப் படித்தவர்களாயிருக்கிறார்களே? கல்லூரிப் பாடங்களோடு தமிழையும் சேர்த்துப் படிக்கிறவர்கள் தமிழிலும் தேறுவதில்லை; ஆங்கிலத்திலும் சுமாராயிருக்கிறார்கள். பல்கலைக் கழக விதிகள் மட்டும் கண்டிப்பாயிராத பட்சத்தில் நான் என்ன செய்வேன் தெரியுமா? உங்களை 'இண்டர்வ்யூ'வுக்கு அழைத்திருக்கும் இதே வேலைக்குப் பழைய முறைப்படி ஆழமாகக் கற்ற ஒரு புலவரை அழைத்து நியமனம் செய்துவிடுவேன்.''

''இப்போதுகூட ஒன்றும் கெட்டுப் போய்விட வில்லை. அப்படிச் செய்ய இடமிருந்தால் — அப்படித்தான் செய்ய வேண்டுமென்று நீங்கள் கருதினால் எனக்கு இந்த வேலையைத் தர வேண்டாம். ஆனால் நீங்கள் சொல்லியதில் ஒன்றை மட்டும் நான் ஒப்புக் கொள்ள முடியாது. பெரும்பாலோரை வைத்துத் தீர்மானம் செய்யப்படுகிற முடிவுகளையே நீங்கள் எல்லாரோடும் சார்த்திப் பேச விடமாட்டேன். பெரும்பான்மை முடிவுகள் சிறுபான்மையினரின் தகுதியைப் பாதிக்கும். என்னைப் பொறுத்த வரை கல்லூரிப் பாடங்களுக்கு மேலும் அதிகமான தமிழ் நூல்களையும் ஆங்கில நூல்களையும் தேடிக் கற்று என் படிப்பை நான் ஆழமாக்கிக் கொண்டிருக்கிறேன் என்பதை நன்றாக நிரூபிக்க முடியும்....''

—சத்தியமூர்த்தி உணர்ச்சி பொங்கப் பொங்கப் பேசியதைக் கேட்டுப் பூபதி மெல்லச் சிரித்தார். 'நீ உணர்ச்சி பொங்கப் பேசும் அழகைக் கேட்பதற்காகவே இப்படி ஒரு கேள்வியை உன்னிடம் கேட்டேன்' என்று சொல்வது போலிருந்தது அந்தச் சிரிப்பு. சிரித்துக் கொண்டே தன் மகள் பாரதி நின்று கொண்டிருந்த பக்கமாகத் திரும்பி, ''அம்மா! அந்தப் புத்தக அலமாரியின் மேல் தட்டில் மேற்குக்கோடியில் ஹட்ஸனின் 'இண்ட்ரொடக்ஷன் - டு -ஸ்டடி ஆஃப் லிடரேசரும்' ரிச்சர்ட்ஸின் 'லிடரரி கிரிடிஸிஸ'மும் இருக்கும். ஸ்டூலைப் போட்டுக் கொண்டு மேலே ஏறி அவைகளை எடு அம்மா.....'' என்றார் பூபதி.

பாரதி ஸ்டூலை நகர்த்தி, மேலே ஏறி நின்று அலமாரியிலிருந்து புத்தகங்களைத் தேடி எடுப்பதையே ஓர் அழகிய அபிநயம் போல் செய்யத் தொடங்கினாள். நிலவின் கதிர்களை உருக்கிப் படைத்தாற் போன்ற அந்த நளின விரல்கள் புத்தகத்தைத் தேடி எடுக்கும் காட்சியைச் சத்தியமூர்த்தி இமையாமல் பார்த்துக் கொண்டிருந்தான். புத்தகங்களை எடுத்துக்கொண்டு வந்து தந்தையின் முன்பாக மேஜையில் வைத்து விட்டுப் பழையபடி ஒதுங்கி நின்று கொண்டாள் அந்தப் பெண். புத்தகங்களை வைப்பதற்காக ஒரே ஒரு கணம் தந்தையின் மேஜையருகே வந்தபோது மறுபடியும் அவனுடைய அந்தச் சிவந்த பாதங்களைப் பார்க்கும் வாய்ப்பு அவள் கண்களுக்குக் கிடைத்தது. ஹட்ஸனையும், ரிச்சர்ட்ஸையும், தோன்றிய இடத்தில் பிரித்து அந்தப் பக்கங்களில் இருந்தவற்றைக் கொண்டு ஏதோ சில கேள்விகளைச் சத்தியமூர்த்தியிடம் கேட்டார் பூபதி. அவருடைய கேள்விகளுக்குத் தெளிவாகவும், அழகாகவும் உடனுக்குடன் பதில் வந்தது சத்தியமூர்த்தியிடமிருந்து. இந்தக் கேள்விகளைத் தனக்கு நேரும் சோதனைகளாகவோ, சிரமங்களாகவோ அவன் கருத வில்லை. தன் திறமையை நிரூபிக்க நேரும் சந்தர்ப்பங்களாக இவற்றை வரவேற்று மகிழ்ச்சியோடு மறுமொழி கூறினான் அவன்.

திருப்தியோடு அந்தப் புத்தகங்களை மூடி வைத்தார் பூபதி. பின்பு அவன் முகத்தை நன்றாக நிமிர்ந்து பார்த்துக் கொண்டே, ''நீங்கள் கல்லூரியில் இலக்கிய வகுப்பு நடத்தும் போது, 'வாட் ஈஸ் லிடரேசர்?' (இலக்கியம் என்பது என்ன?) என்று ஒரு மாணவன் உங்களைக் கேட்பதாக வைத்துக் கொள்ளலாம். அப்போது நீங்கள் என்ன மறுமொழி சொல்லி அதை அவனுக்கு விளக்குவீர்கள்?'' என்று அவனுடைய திறமையை இன்னும் பரிசோதிக்க முயலும் குறும்புச் சிரிப்போடு கேட்டார் பூபதி.

''லிடரேசர் ஈஸ் ஏ ரிகார்ட் ஆஃப் பெஸ்ட் தாட்ஸ்.'' (இலக்கியம் என்பது சிறந்த எண்ணங்களைப் பதிந்து வைத்துக் கொண்டிருப்பது) என்ற எமர்சனின் கருத்தோடு தன் விளக்கத்தைத் தொடங்கிய சத்தியமூர்த்தி அரை மணி நேரம் வெண்கலமணியை அளவாக விட்டு விட்டு ஒலிப்பது போல் கணீரென்ற குரலில் உணர்ச்சி நெகிழத் தானே அனுபவித்து இரசிக்கும் ஆர்வத்தோடு பேசிய பின்பே ஓய்ந்தான். 'இலக்கியம் இன்னதென்பதை இலக்கியத்தை ஆழ்ந்து கற்பதால் மட்டுமே அறிந்து கொள்ள முடியும்' என்ற டி. எஸ். எலியட்டின் மேற்கோளுடன் கேட்பவர்களைக் கவர்ந்து மயக்கும் சிறிய சொற்பொழிவாக நிறைந்து முடிந்தது அவன் பேச்சு. பிரின்ஸிபல் ஒன்றும் பேசத் தோன்றாமல் மூக்கில்விரலைவைத்தார். பூபதியின் மனத்தில் அந்தரங்கமான மகிழ்ச்சி அதிகமாயிற்று. சுவரில் சாய்ந்தாற் போல் நின்று கேட்டுக் கொண்டிருந்த பாரதியின் கண்களில் ஆனந்தம் இன்னும் அதிகமாகப் பூக்கத் தொடங்கியிருந்தது.

சத்தியமூர்த்தி நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டு 'இன்னும்ஏதாவது உண்டா?' என்பது போல அவரைப் பார்த்தான்.

''மிஸ்டர், சத்தியமூர்த்தி! மற்ற இடங்களில் நடக்கும் 'இண்டர்வ்யூ'வுக்கும் இங்கு நடைபெறும் 'இண்டர்வ்யூ'வுக்கும் நிறைய வேறுபாடு இருப்பதை இதற்குள் நீங்களே தெரிந்து கொண்டிருப்பீர்கள். ஏதோ முறையைக் கழிப்பதற்கான ஒரு வழக்கமாகவோ ஃபார்மாலிடியாகவோ 'இண்டர்வ்யூ'வை நாங்கள் இங்கே நடத்துவதில்லை. நாங்கள் யாரைத் தேர்ந்தெடுக்கவேண்டுமோ அவரைப் பலவிதங்களிலும் சோதனைசெய்து தெரிந்து கொண்டாலொழியத் தேர்ந்தெடுக்க மாட்டோம். ஆகவேஇப்போது உங்களிடம் கேட்கப்படும் எந்தக் கேள்வியையும் நீங்கள் தவறாகப் புரிந்து கொள்ளாதீர்கள். புத்தகங்களைக் கையில் எடுத்து வைத்துக் கொண்டு பள்ளிக்கூடத்துப் பிள்ளைகளைக் கேள்வி கேட்பது போல்இப்படி யெல்லாம் கேட்கிறேனே யென்றும் நினைத்துக் கொள்ளாதீர்கள்...''



''நீங்கள் எப்படி வேண்டுமானாலும் கேள்வி கேட்கலாம்! எதை வேண்டுமானாலும் கேட்கலாம். கேள்விகளுக்குப் பதில் சொல்வதற்குத் தயக்கமோ, பயமோ உள்ளவர்கள் ஆசிரியர் தொழிலுக்கு முன்வருவதற்கே தகுதியற்றவர்கள். என்னிடம் உள்ள திறமைகளை நானாகவே உங்களிடம் எடுத்துச் சொல்லிக் கொள்ள முடியாது. உங்களுடைய கேள்விகள் என் தகுதிகளை நியாயமாகவும் சுயநலமில்லாமலும் நான் வெளியிட்டுக் கொள்வதற்கு நீங்களே எனக்குச் செய்து தரும் வசதிகளாயிருக்கும்போது அவற்றை நான் ஏன் இழக்க வேண்டும்? நன்றாகக் கேளுங்கள். கேட்கலாமோ, கேட்கக் கூடாதோ என்ற தயக்கமேயின்றி எல்லாவற்றையும் கேளுங்கள்..'' என்று சத்தியமூர்த்தியிடமிருந்து பதில் வந்த போது அவனுடைய அந்தத் துணிவைக் கண்டு பூபதி அவர்களும், கல்லூரி முதல்வரும் வியப்படைந்தார்கள்.

சத்தியமூர்த்தியோ தன்னுடைய உண்மைஒளிரும் அந்தக்கண்களால் அவர்களையும், அவர்கள் மனத்தில் ஓடும் எண்ணங்களையும் அளந்துகொண்டிருந்தான். எப்போதும் வலது காலை முன் வைத்து 'இதோ வாழ்வில் இன்னும் ஓர் அடி முன்னால் நடந்து செல்லப் போகிறேன் நான்' என்பது போல் வலது பாதம் முன்னால் இருக்கும்படி வழக்கமாக உட்காரும் சத்தியமூர்த்தியின் இலட்சணமான கால்களைத் தன் அழகிய கண்களால் அளந்துகொண்டிருந்தாள் பாரதி.

''ஹாட்ஸனையும், ரிச்சர்ட்ஸையும் பற்றி மட்டுமே உங்களிடம் கேட்டுப் பயனில்லை சத்தியமூர்த்தி! நீங்கள் இந்தக் கல்லூரிக்குத் தமிழ் விரிவுரையாளராகத் தானே வரப் போகிறீர்கள்? தமிழில் நீங்கள் ஏதாவது சொல்ல வேண்டும். சங்க இலக்கியத்திலிருந்து ஏதாவதுஒரு பாட்டுச்சொல்லி விளக்குங்களேன் பார்க்கலாம்.''

பூபதியின்இந்தவேண்டுகோளைச் சத்தியமூர்த்தி ஆவலோடு வரவேற்று ஒப்புக் கொண்டான். இந்த வேண்டுகோளை அவர் விடுத்திராத பட்சத்தில்தான் அவன் வருந்தநேரிட்டிருக்கும். ஆங்கில நூல்களையும், ஆங்கிலத்தையும் பற்றித் தன்னிடம் கேட்டுவிட்டுத் தமிழ் இலக்கியத்தைப் பற்றியோ, தமிழைப் பற்றியோ தன்னிடம் அவர் ஒன்றும் கேட்காமல் விட்டிருந்தால்தான் அவன் மிகவும் ஏமாறியிருப்பான். குறுந்தொகை என்னும் சங்கத் தொகை நூலிலிருந்து அழகிய பாடல் ஒன்றைக் கூறி அதன் பொருளை விளக்கி விவரித்தான் சத்தியமூர்த்தி:

'' யாயும் ஞாயும் யார் ஆகியரோ
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர் ?
யானும் நீயும் எவ்வழி அறிதும் ?
செம்புலப் பெயல்நீர் போல
அன்புடை நெஞ்சம் நீயும்தாம் கலந்தனவே

முன்பின் பழக்கமில்லாத அழகிய இளைஞன் ஒருவனும் எழிலரசியாகிய பெண்ணொருத்தியும் ஒரு மலைச் சாரலில் சந்தித்து மனம் ஒன்று படுகிறார்கள். அவன் அப்படியே தனக்கு முன்னால் தன்னுடனே தான் காணும்படி எப்போதும் நின்று கொண்டே இருக்க வேண்டும் போல அவளுக்கு ஆசையாக இருக்கிறது. ஆனால் அவனோ 'இதோ இன்னும் சிறிது நேரத்தில் நான் பிரிந்து போய் விடுவேன்' என்ற முகக் குறிப்புடனும் காரிய அவசரத்துடனும் நின்று

கொண்டிருக்கிறான். அவன் பிரியப் போகிறான் என்பதை உணர்ந்ததும் அவள் தன் முகத்தில் மனத்தின் துயரம் தெரிய வாடி நிற்கிறாள். அந்த வாட்டத்தைப் பார்த்து அவன் சிரித்துக் கொண்டே அவளிடம் சொல்கிறான்:

''எதற்காக இப்படி மனம் கலங்குகிறாய் பெண்ணே? உன்னைப் பெற்றவள் யாரோ? என்னைப் பெற்றவள் யாரோ? அவர்கள் இருவரும் ஒருவருக்கொருவர் சந்தித்திருக்கக் கூட மாட்டார்கள். என் தந்தையும் உன் தந்தையும் எந்த விதத்திலேனும் நண்பர்களு மில்லை. நீயும், நானும், இன்று இப்போது இங்கே சந்தித்துக் கொண்ட விநாடிக்கு முன்பாக என்றும் எப்போதும் எங்கும் நம்முள் ஒருவரை ஒருவர் சந்தித்து அறிந்து கொண்டது மில்லை. இருந்தும் செம்மண் நிலத்தில் பெய்த மழை நீர் அந்த நிலத்தோடு கலந்து அதன் வண்ணமாகி விடுவது போல் நம்முடைய அன்பு நெஞ்சங்கள் இன்று இப்படிச் சந்தித்த கணத்திலேயே ஒன்று கலந்து விட்டன. இது எவ்வளவு பெரிய அதிசயம்?''



உலகத்தில் தற்செயலாய்ச் சந்தித்து மனம் ஒன்றுபட்ட முதல் காதலர்களிலிருந்து பரம்பரை பரம்பரையாய் அதிசயமாயிருந்து வரும் ஓர் அழகிய தத்துவத்தை இந்தப் பாடலில் வரும் காதலன் பேசுகிறான். உள்ளங் கையையும் புறங் கையையும் போலக் காதலையும் வீரத்தையும் ஒரே பொருளின் இரண்டு பக்கங்களாக வைத்துத் தமிழ்ப் புலவர்கள் ஆயிரக் கணக்கான கவிதைகளை எழுதியிருக்கிறார்கள். ஆனாலும் காதல் என்ற தத்துவத்தை மிக நுணுக்கமாகச் சொல்கிற பாட்டு இதைப் போல் வேறொன்று இருக்க முடியாது. மனத்தோடு மனம் கலந்து சார்ந்ததன் வண்ணமாக மாறுவதற்குச் செம்மண் நிலத்தில் பெய்த மழை நீரை உவமையாகக் கூறும் அழகு ஒன்றை மட்டும் வைத்துப் பார்த்தாலும் இந்தப் பாட்டு அட்சர லட்சம் பெறும். 'இப்போது இந்தச் சிறிது காலம் சந்தித்துப் பழகியதிலேயே யுகம் யுகமாக இப்படி வாழ்ந்து விட்டுப் பிரிய முடியாமல் தவிப்பது போல் நாம் தவிக்கிறோமே?...இது என்ன ஆச்சரியம்?' என்று அவன் அவளிடம் கேட்பது போல் ஒரு தொனி நயமும் இந்தப் பாடலில் பொருந்தி யிருக்கிறது.

தாயும், தந்தையும் முன் நின்று முயலாமல், கொடுப்பாரும் அடுப்பாரும் இல்லாமல், தம்முள் தாமே, எதிர்ப்பட்டு மனம் ஒன்றுபடுகிற தெய்வீகக் காதலில் 'இது எப்படி நாம் இவ்விதம் ஆனோம்'— என்று இதயம் கலந்த இருவருமே அதிசயப்பட்டு வியந்து கொள்ளும் ஒரு நிலை உண்டுதான். அந்த நிலையை இந்தப் பாடல் சித்திரித்திருக்கிற விதம் ஈடு இணையற்றது. இந்தப் பாடலில் இவ்வளவு அழகும் நுணுக்கமும் பொருந்திய ஓர் உவமையைச் சொல்லிய திறமையால் இதைப் பாடியவருடைய இயற்பெயர் மறைந்து 'செம்புலப் பெயல் நீரார்' — என்றே அவருக்குப் பெயர் ஏற்பட்டு நிலைத்து விட்டது.''

சத்தியமூர்த்தி இந்தக் குறுந்தொகைப் பாடலை விளக்கி விவரித்தபோது பூபதி மன நிறைவோடு புன்முறுவல் பூத்தார். பின்பு பிரின்ஸிபல் உட்கார்ந்திருந்த பக்கமாகத் திரும்பி அவர் முகத்தைப் பார்த்தார். அந்த முகத்தில் அப்போது எந்த விதமான அதிருப்தியும் இல்லை என்பதைப் பூபதி அவர்கள் புரிந்துகொள்ள முடிந்தது. பூபதியும் கல்லூரி முதல்வரும் ஒருவருக்கொருவர் பார்த்துக் குறிப்பினால் பேசிக் கொண்டிருந்த அந்தச் சில கணங்களில் சத்தியமூர்த்தி எதிர்ப்புறம் நின்று கொண்டிருந்த பாரதியைப் பார்த்தான். அவளும் அப்போது அவனைத்தான் பார்த்துக் கொண்டிருந்தாள். பின்பு சிறிது நேரம் கழித்து உள்ளே போய் அவுன்ஸ் கிளாஸில் ஏதோ மருந்துடன் தந்தைக்கு அருகில் வந்து ''அப்பா! மருந்து சாப்பிடுகிற நேரமாயிற்று'' என்று கையில் கொண்டு வந்திருந்த மருந்தைத் தந்தைக்கு முன் மேஜையில் வைத்தாள் அந்தப் பெண்.

அவுன்ஸ் கிளாஸை எடுத்து மருந்தைக் குடித்துவிட்டு அந்த மருந்தின் சுவை விளைவித்த உணர்ச்சிகளினால் முகத்தைச் சிலிர்த்துக் கொண்டு கண்களில் நீரரும்பிடச் சில கணங்கள் மோட்டு வளையை வெறித்துப் பார்த்தார் பூபதி.

ஒரு கனைப்புக் கனைத்துத் தொண்டையைச் சரி செய்து கொண்டு மறுபடியும் அவர் சத்தியமூர்த்தியிடம் பேசத் தொடங்கியபோது, சுவர்க்கடிகாரத்தில் பன்னிரண்டு மணி அடித்தது. அந்த மணியோசையைக் கேட்டுத் தம் மணிக்கட்டிலிருந்த கைக் கடிகாரத்தைப் பார்த்து

நாம் யாவரும் உலகுக்குக் கடன் பட்டவரே யன்றி உலகம் நமக்குக் கடன் பட்டிருக்கவில்லை என்பதை மறக்கலாகாது. உலகுக்கு ஏதேனும் நன்மை செய்ய வாய்ப்புப் பெறுவதே நமக்குக் கிட்டிய பேறுகும். உலகுக்கு நல்லது செய்வதில் நாம் நமக்கே நல்லது செய்து கொள்ளுகிறோம். — ஸ்வாமி விவேகானந்தர்

விட்டுப் பூபதியின் முகத்தையும் பார்த்தார் கல்லூரி முதல்வர். பூபதியும் அந்தக் குறிப்பைப் புரிந்து கொண்டவர் போல், ''ஓ! உங்களுக்கு நேரமாகி விட்டதல்லவா? நீங்கள் புறப்படலாம். இதோ இவருடைய விண்ணப்பம். இதைக் கொண்டு போய் மேலே ஆக வேண்டியதைச் செய்யுங்கள். நான் இவரோடு இன்னும் கொஞ்சம் பேசிக் கொண்டிருந்து விட்டு அப்புறம் அனுப்புகிறேன்'' என்று சொல்லிக் கொண்டே அந்த விண்ணப்பத்தின் பின்பக்கமாக ஏதோ குறிப்பு எழுதி அதை முதல்வரிடம் கொடுத்தார் பூபதி. பிரின்ஸிபல் அதைக் கையில் வாங்கிக் கொண்டு அவரிடமும் சத்தியமூர்த்தியிடமும் விடைபெற்றுப் புறப்பட்டார்.

பிரின்ஸிபல் புறப்பட்டுப் போன சிறிது நேரத்துக்கெல்லாம் பூபதியின் மகள் பாரதியும் வீட்டின் உட்புறமாகச் சென்று விட்டாள். முன் பக்கத்து அறையில் சத்தியமூர்த்தியும், பூபதியும் தனியாக இருந்தார்கள். ஏதோ டெலிபோன் வந்தது. பூபதி பத்து நிமிடங்கள் டெலிபோனில் பேசி விட்டு நாற்காலியிலிருந்து எழுந்தார்.

''மன்னியுங்கள். உடல் நலம் மிகவும் கெட்டுப் போயிருப்பதால் எனக்கு அதிகத் தளர்ச்சியாக இருக்கிறது. இப்படிச் சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டே நான் உங்களோடு பேசலாமல்லவா?'' என்று ஈஸிசேரில் சாய்ந்து கொண்டார் அவர்.

''நீங்கள் மல்லிகைப் பந்தலில் எங்கே தங்கி யிருக்கிறீர்கள் மிஸ்டர் சத்தியமூர்த்தி?''

''எங்கும் தங்கவில்லை சார்! பஸ்ஸிலிருந்து இறங்கியதும் நேரே இங்கேதான் வருகிறேன். 'இண்டர்வ்யூ' முடிந்ததும் மாலையில் ஊருக்குப் புறப்படுவதாக இருக்கிறேன்.''

''இந்த ஊருக்கு வருகிறவர்கள், இதன் இயற்கை அழகையும், சூழ்நிலையும் பார்த்த பின் உடனே திரும்பிச் செல்ல நினைக்கலாமா?''

''நான்தான் இங்கேயே வந்துவிடப் போகிறேனே?''

''நீங்கள் வரவேண்டுமென்று இன்னும் அதிகார பூர்வமாக நாங்கள் தெரிவிக்கவில்லையே?'' என்று கேட்டுவிட்டுச் சிரித்தார் அவர். சிறிது நேரம் அவர்கள் இருவருக்கு மிடையே மௌனம் நிலவியது. தாம் அடுத்தாற்போல் அவனைக் கேட்க விரும்பிய கேள்வியை அவ்வளவு நேரம் இடைவெளி கொடுத்த பின் கேட்பதுதான் நியாயமென்று கருதியவர் போல் நிதானமாகக் கேட்டார் பூபதி.

''மிஸ்டர் சத்தியமூர்த்தி! உங்களுக்கு இன்னும் திருமணமாகவில்லை என்று நினைக்கிறேன். நான் நினைப்பது சரிதானே?''

''இன்னும் இல்லை'' என்று சுருக்கமாகப் பதில் சொன்னுன் சத்தியமூர்த்தி. கேள்வி விடாமல் தொடர்ந்தது.

''என்ன காரணமோ?''

''காரணம் எத்தனையோ இருக்கலாம்; அவசியம் தெரிந்து கொள்ள வேண்டுமானல் முக்கியமான ஒரு காரணத்தை மட்டும் சொல்லுகிறேன். எனக்கு இரண்டு தங்கைகள் திருமணமாக வேண்டிய வயதில் இருக்கிறார்கள்.. அவர்கள் இருவருக்கும் முதலில் திருமணமாக வேண்டுமென்பதுதான் எங்கள் குடும்பத்துக்கு இப்போது பெரிய பிரச்னை.''

''உங்கள் பொறுப்புணர்ச்சியைப் பாராட்டுகிறேன். ஆனல் அதே சமயத்தில் உங்களுக்கு நான் கூற வேண்டிய அறிவுரை ஒன்றும் உண்டு.''

''என்ன?''

''நான் சொல்கிறேன். அப்படிச் சொல்வதை உங்கள் மேல் அவநம்பிக்கைப்பட்டுச் சொல்வதாக எண்ணிக் கொள்ளாதீர்கள். பொதுவாக வயதில் மூத்தவன் என்ற உரிமையோடு வயதில் இளைஞராகிய உங்களுக்குச் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன் நான்.''

''..................''

''இது ஒரு கோ - எஜுகேஷன் கல்லூரி. இங்கு ஆண்களோடு பெண்களும் சேர்ந்து படிக்கிறார்கள். இந்தக் கல்லூரிக்கு இன்று வரை பேராசிரியர்களாகவும், விரிவுரையாளர்களாகவும் வந்திருக்கிற அத்தனை பேரிலும் நீங்கள் ஒருவர்தான் மிக இளம் பருவத்தினராக இருப்பீர்கள் என்று தோன்றுகிறது...''

''........''

''இத்தனை ஆண்டுகளாகப் பல்கலைக் கழகத்தாரிடம் வாங்கியிருக்கும் பெரிய பெரிய கிராண்ட் தொகைகளுக்காகவோ முதல் தரக் கல்லூரி என்ற பெயருக்காகவோ நான் பெருமைப்பட வில்லை; 'ஒழுக்கமும் கட்டுப்பாடும் உள்ள தரமான கல்லூரி' என்று இந்த மாகாணத்துக்கு அப்பால் வெளி மாகாணங்களில் உள்ளவர்களும் போற்றும்படி

ஒரு நல்ல பெயரை இந்தக் கல்லூரி எடுத்திருக்கிறது என்பதற்காகவே நான் பெருமைப்பட்டுக் கொண்டிருக்கிறேன்.''

''அந்த நல்ல பெயர் என்றால் ஒரு சிறிதும் கெட்டுவிடாது சார்...''

''இத்தகைய கல்லூரிகளில் மாணவ மாணவிகளிடம் நெருப்புக் காய்வது போல் அதிகம் விலகிவிடாமலும், அதிகம் நெருங்கிவிடாமலும் பழக வேண்டும்.''

''புரிகிறது சார்...''

''மனம் விட்டு உண்மையைச் சொல்கிறேன், மிஸ்டர் சத்தியமூர்த்தி! உங்களைப் பல விதங்களில் எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. சிறிது நாழிகைப் பேச்சிலேயே என்னை நீங்கள் அதிகமாகக் கவர்ந்து விட்டீர்கள். உங்களைப் போல் இதை ஒரு இலட்சியமாக நினைத்து இந்தப் பணிக்கு வருகிறவர்கள்தான் நல்ல மாணவ சமுதாயத்தை உருவாக்கிப் பல்கலைக் கழகத்தின் படிகளில் இறங்கிச் செல்லுமாறு அனுப்ப முடியும். ஆனால்?''

—என்று மீண்டும் அவர் தயங்கி நிறுத்தியபோது சத்தியமூர்த்தி எவ்வளவோ நிதானமாயிருந்தும் சற்றே பொறுமையிழந்து விட்டான்.

''என் வயதும் இளமையும் எனக்கு ஒரு தகுதிக் குறை என்று நீங்கள் நினைப்பதை என்னால் ஒப்புக் கொள்ள முடியவில்லை சார்! இளைஞர்களாயிருக்கிற அத்தனை பேரும் அயோக்கியர்கள் என்று நினைக்கும் மனப்பான்மையை வயது மூத்தவர்கள் இனியாவது இந்தத் தேசத்தில் விட்டுவிட வேண்டும். வயது மூத்தவர்களில் ஒழுக்கம் தவறுகிறவர்களும், வரன்முறையின்றி வாழ்கிறவர்களும் எத்தனைபேர்கள் இருக்கிறார்கள் என்று கணக்கெடுக்க ஆரம்பித்தால் இளைஞர்களைவிட அவர்கள் தொகைதான் அதிகமாக இருக்கும்''

— என்று சத்தியமூர்த்தி அவரிடம் சிறிது உணர்ச்சி வசப்பட்டுப் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டபடியே திரை ஓரமாக வந்த பாரதி, 'வெண்ணெய் திரண்டு வருகிற சமயத்தில், தாழியை உடைக்கிறாற் போல் அப்பாவின் மனத்தில் நல்ல அபிப்பிராயத்தை வளர்த்துக்கொண்டு விட்ட பின் இப்படி இவர் நிதானமிழந்து பேசாமலிருக்கக் கூடாதா?' என்று தனக்குள் எண்ணித் தயங்கி நின்றாள். திரை மறைவில் இருந்தபடியே தலையை நீட்டி அப்பாவின் முகம் இந்தப் பேச்சைக் கேட்ட பின்பு எப்படி இருக்கிறது என்பதைக் கவனித்தபோதும் அது நிச்சயமாகச் சரியாயில்லை என்பது மட்டும் அவளுக்குப் புரிந்தது. (தொடரும்)



## ஆதவன் உதித்தான்!

உலகத்துக்கு ஒளியைக் கொடுப்பது சூரியன். ஏழு குதிரைகள் பூட்டிய ஒற்றைச் சக்கரத் தேரிலே அருணன் சாரத்தியம் செய்ய ஆதவன் வான வீதியிலே பவனி கிளம்புகிறான் என்று நாம் சொல்லுகிறோம். மாலையில் அவன் மலை வாயிலில் விழுவதாகக் கூறுவதையும் கேட்டிருப் பீர்கள். இதே போல் ஒவ்வொரு நாட்டிலும் சூரியோதயத்தையும் அஸ்தமனத்தையும் பற்றிப் பல கதைகள் இருந்து வருகின்றன.

ஆப்பிரிக்கா தேசத்துச் சுதேசிகளின் கட்டற்ற கற்பனையைப் பாருங்கள். ஒவ்வொரு



நாள் மாலையும் கடவுள் அலிலா, சூரியன் மலை வாயிலில் விழுந்த இடத்தை நோக்கி ஒரு யானைக் கூட்டத்தை நடத்திச் செல்லுவாராம். பாதாளத்தில் விழுந்து உருமாறி ஒளி இழந்து போன நெருப்புப் பந்தான சூரியனை அலிலா மறுபடியும் உயிர்ப்பித்துத்தருவாராம். யானைகள் அந்த நெருப்பு உருண்டையைத் தங்கள் தந்தத்தி னால் தாங்கியபடி மெல்ல மெல்ல மேலே மலை உச்சிக்குத் தள்ளிக் கொண்டு வந்து சேர்க்கு மாம். உடனே சூரியோதயம் ஏற்படுகிறது. மறுபடியும் மாலையில் சூரியன் பாதாளத்தில் போய் விழ, மறுபடியும் கடவுள் அலிலா....!

இப்படி ஒரு நம்பிக்கை.

தென் அமெரிக்காவில் உள்ள பெரு நாட்டில் வாழும் செவ்விந்தியரிடையே சூரியோதயத்தைப் பற்றி நிலவி வரும் கதையைப் பாருங்கள். இவர் களின் ராஜகுமாரிகளைச் சூரியனின் குழந்தைகள் என்று நம்புகிறார்கள். இந்த இளவரசிகள் இரவு முழுவதும் தங்கள் டீப்பீஸ்களின் முன்னால் மண்ணினால் ஆன அகல் விளக்குகளைத் தூண்டி எரிய விட்டுக் கொண்டு அருணோதயத்தை எதிர் நோக்கியபடி உட்கார்ந்திருப்பார்களாம். அப் போது 'காண்டர்' (கழுகு) என்றழைக்கப்படும் வானுலகத் தூதனை பறவை அதிகாலையில் வானத்தில் தோன்றி இளவரசிகள் அணையாமல் காத்து வரும் விளக்குகளில் ஒன்றைத் தனது அலகில் கொத்தி எடுத்துக் கொண்டு உலகத்தின் மறு பக்கத்தில் ஒளி இழந்து ஒளிந்து கொண் டிருக்கும் சூரியனிடம் கொண்டு போய்க் கொடுத்து விட்டுச் செல்லுமாம். அந்த விளக் கின் உதவியினால் சூரியன் தனது ஒளியைத் திரும்பப் பெற்றுக் கீழ் வானிலே தோன்று வானும். இந்த நம்பிக்கைகள் நமக்கு விநோத மாக இருக்கலாம். ஆனால் ஆப்பிரிக்க நாட்டுக் குழந்தைகளும், பெருநாட்டுக் குழந்தைகளும் இந்தக்கதையை எத்தனை ஆர்வத்துடன் கேட்டு வியப்பும் திகைப்பும் அடைவார்கள் தெரியுமா? ஏன், இனி நமக்கும் கூட சூரியோதயத்தைக் கண்டதும் யானைகள் சூரியனை உருட்டிவரும் காட்சி நினைவுக்கு வராமலா இருக்கும்?



### உங்கள் ஆல்பத்துக்கு

உலகத்தின் கூரையான இமயமலையில் உள்ளது திபெத்து நாடு. உலகிலேயே மிக உயரத்தில் உள்ள தேசம் திபெத்துதான். 'மர்மங்கள் நிறைந்த நாடு' என்று பெயர் பெற்ற இந்நாட் டுக்குச் செல்ல இந்த நாகரிக யுகத்திலும் நேரான பாதைகள் கிடையா. தலாய் லாமா, பஞ்சன் லாமா என்றெல்லாம் கேள்விப் பட்டிருப்பீர்களே, அவர்கள் எல்லாம் இந்த நாட்டைச் சேர்ந்தவர்கள்தாம். திபெத்து நாட்டுப் பூசாரி ஒருவரை மேலே காண்கிறீர்கள்.

## எக்ஸிபிஷன் புதிர்

அடுத்த நாள் கிட்டு மட்டும் தனியாகப் பொருட் காட்சிக்குப் போனன். போகும்போதே ஒரு முடிவோடுதான் போனன். என்ன முடிவு தெரியுமா? வெள்ளைக் கடையிலிருந்து (கட்டத்திலிருந்து) வேடிக்கை பார்க்க ஆரம்பிக்க வேண்டியது. எக்ஸிபிஷனிலுள்ள வெள்ளைக் கடைகளை எல்லாம் ஒன்று விடாமல்—வர்ணக் கடைக்குள் நுழையாமல்—பார்த்துவிட வேண்டியது. மிகக் குறைந்த திருப்பங்களில் இதைச் செய்து முடிக்க வேண்டும். வெள்ளைக் கடைகளுக்கு இரண்டு முறை விஜயம் செய்யலாம். ஆனல் வந்த வழியாகவே மறுமுறை வராமல் வர்ணக் கடைகளுக்குள் நுழையாமல் விஜயம் செய்ய வேண்டும். கிட்டு இதைச் சாதிக்க எக்ஸிபிஷனில் எப்படிப் பவனி வந்தான் என்பதை உங்களால் விளக்க முடியுமா?




## உங்களுக்குத் தெரியுமா?

✿ உலகிலேயே மிகப் பெரிய புத்தகசாலே என்று கருதப்படுவது பிரான்ஸ் தேசத்தின் தேசிய புத்தக சாலேதான். இது பதினன்காம் லூயி மன்னனல் ஸ்தாபிக்கப்பட்டது. இதில் 1,400,000 புத்தகங்களும் 300,000 புத்தக மடிப்புக்களும் 175,000 கை எழுத்துப் பிரதிகளும், 800,000 படக் குறிப்புக்களும் 150,000 புராதன நாணயம், தங்கப் பதக்கங்களும் 1,300,000 கைவேலேப் பாட்டுப் பொருள்களும் 100,000 சித்திரங்களும் உள்ளன.

✿ ஆந்திராவில் உள்ள வினு கொண்டா என்ற ஒரு ஊரில் அறுபது டன் எடையுள்ள பெரிய பாறை ஒரு கோவிலின் கோபுர நுனியைத் தொட்டுக் கொண்டு அப்படியே அந்தரத்தில் நிற்கும் அற்புதத்தை இன்றைக்கும் காணலாம்!

1750ம் வருஷத்தில் ஒரு நாள் மலேயடிவாரத்திலுள்ள கோயிலே நோக்கி இந்தப் பாறை உருண்டு வந்தது. ஆனல் மந்திரத்தினல் கட்டுண்டது போல் கோபுரத்தின் மீது மோதி அதை கக்குநூறுக நொறுக்க இரண்டு அங்குல தூரம் இருக்கும் போது பாறை அப்படியே அந்தரத்தில் கோபுரத்தின் மீது பட்டும் படாமலும் அப்படியே நின்று விட்டது. நம் ஜனங்கள் இதைக் கடவுளின் சக்தி என்கிருர்கள். மேல்நாட்டவர்களோ அந்தரத்திலே அறுபது டன் பாறை இருநூறு வருஷங்களுக்கு மேலாக அசைந்தாடுவதை 'லாஸ் ஆப் கிராவிடி' யின் விந்தை என்கிருர்கள்.




சென்ற இதழ் புதிருக்கு விடை



## காட்டுக்குள்ளே பாங்கோ

ஆப்பிரிக்காவில் வாழும் மான் வகைகளிலேயே அற்புதமான அழகு வாய்ந்தது இந்தப் பாங்கோ மான்தான். உடலெங்கும் பளபளப்பான செம் பழுப்பு நிற ரோமம் குட்டையாக மண்டிக் கிடக்கும். இதன் பட்டு உடலின் குறுக்கே பக்கங்களிலும் பின்புறமும் மங்கலான வெள்ளைக் கோடுகள் ஓடுவது கவர்ச்சிகரமாக இருக்கும். இதன் கொம்பு கம்பீரமானது; வளைந்து சுருண்டு மேல் நோக்கிச் செல்லுவது இந்த மானுக்கே ஒரு கம்பீரத்தைத் தரும். இதன் கண்களோ பெரியவை, பிரகாசமானவை. இது மிகவும் பயந்த சுபாவம் உடையது. அதனுலேயே இதை உயிருடன் காண்பதும் அரிது. உஷ்ணப் பிரதேசத்தின் மிகஅடர்த்தியான காடுகளில் வளரும் புல்லேத் தின்று வாழும் சுபாவமுடையது இது. எப்போதும் இருள் மண்டிக் கிடக்கும் இத்த கைய கானகத்தில் வாழப் பழகி விட்ட பாங்கோவைப் பிடித்து வளர்க்க முயற்சி செய்தால் கூட இது பிரகாசமான வெளிச்சத்தைக் கண்டு வெறுப்படைகிறது. இருள் கவிந்த வேளைகளிலும் மப்பும் மந்தாரமுமான காலங்களிலுமே இது உற்சாகமாக வெளிக் கிளம்புகிறது.

நன்கு வளர்ந்த இவ்வகை ஆண் மானின் உயரம் தோள் வரை மூன்றடி ஏழு அங்குலம். ஆண் பெண் இரண்டுக்குமே கொம்பு உண்டு. கொம்பு மிகவும் கூர்மையான முனைகளைக்கொண்டது. இது சிறந்த ஆயுதமாகவும் பயன்படும். சிறுத்தைகள் குட்டி பாங்கோக்களைத் தாக்கிக் கொன்று விடும். ஆனல் நன்கு வளர்ந்த பாங்கோவிடம் இவற்றின் பாச்சா பலிக்காது. ஆப்பிரிக்கர்கள் குழி வெட்டி வலே விரித்துத் தான் இந்த மானேப் பிடிக்கிருர்கள். நாட்டியக்காரர்களும், மந்திரவாதிகளும் அணியும் உடையாகப் பயன்படுகிறது இதன் தோல்.

# பத்தினிக் கோட்டம்

அத்தியாயம் நாற்பத்தொன்று

## திரமிள சங்கத் தலைவர்

வெள்ளி முகம் கண்ட விடியற்சாம வேளையில் அந்த ஆதுரசாலைக்கு வந்து சேர்ந்தான் பரமேசுவர வர்மன்.

அது சமண முனிவர்களால் நடத்தப் பெறும் ஆதுரசாலையானதால் அங்கே விளக்குகள் ஏதும் இருக்கவில்லை. விளக்கின் தீக் கொழுந்தில் சிற்றுயிர்கள் விழுந்து இறக்க நேரிடும் என அஞ்சியே கொல்லா நோன்பினரான சமணர்கள் விளக்கேற்றும் வழக்கத்தை மேற்கொள்ளாதிருந்தனர். ஆதலால் அந்த மருத்துவமனை விடியற்சாம நேரத்தின் பூஞ்சைக் கருக்கலில் இருண்டு காணப்பட்டது.

குற்றுயிரும் குறையுயிருமாயிருந்த சடலத்தைத் தோளில் சுமந்தவாறு தாழ்வாரத்தில் ஏறி நின்ற பரமேசுவர வர்மன் சுற்றுமுற்றும் தன் பார்வையை ஓட்டினான். ஒளிவு மறைவான செயல்கள் அங்கு ஒன்றுமே நடைபெறுவதில்லை என்பதற்கறிகுறியாக எல்லா வாயில்களும் சாளரங்களும் — கதவுகளோ, திரைகளோ இன்றித் திறந்து கிடந்தன. ஆனால், அங்கே மனிதர்கள் யாரும் இருக்கிறார்களா இல்லையா என்று அனுமானிக்க முடியாத அத்தனை ஆழ்ந்த அமைதி நிலவிக் கிடந்தது.

'இந்த ஆதுரசாலை இப்போது நடைபெறுகிறதா, இல்லையா? மருத்துவப்



பணி நிறுத்தப்பட்டிருந்தாலும் இங்கு சமண முனிவர்களாவது இருக்க வேண்டுமே! ஒருகால் அவர்களும் வேறெங்காவது இடம் பெயர்ந்து போய்விட்டிருப்பார்களோ? மெல்லக் குரல் கொடுத்து அழைத்துப் பார்க்கலாமா? யாராவது உள்ளிருந்து வந்தால் அவர்களிடம் என்ன சொல்வது? பெருவள நல்லூர்ச் சாலையில் நடந்த நிகழ்ச்சிகளைக் கூறி, மூர்ச்சித்துக் கிடக்கும் இந்த மனிதருக்கு உடனடியாகச் சிகிச்சை செய்யச் சொல்லலாம். ஆனால், என்னை அவர்கள் அடையாளம் தெரிந்துகொள்வார்களே! தூய நெஞ்சத்தினரான சமண முனிவர்களால் எனக்கு எத்தகைய துன்பமும் நேராதென்பது நிச்சயம் என்றாலும், இந்தத் துர்ப்பாக்கிய மனிதருக்கு நான்தான் ஊறு விளைவித்திருப்பேனோ என்று என்மீதே சந்தேகப்பட்டுவிட்டால் என்ன செய்வது? வேண்டாம்; நான் வந்ததாகக் காட்டிக் கொள்ளாமல், இந்த மனிதரை இங்கேயே இறக்கிக் கிடத்திவிட்டுப் போய்விடலாம். அவர்களாக எழுந்து வந்து பார்த்துச் சிகிச்சை செய்து கொள்ளட்டும். அல்லது இவரின் விதி எப்படியோ அப்படி நடந்துவிட்டுப் போகட்டும்.'

தாழ்வாரத்தின் சுவரோரம் போடப்பெற்றிருந்த ஒரு கல் படுக்கையை நோக்கி நடந்தான் பரமேசுவரவர்மன்.

''வரவேண்டும், வரவேண்டும்!''

அவன் சட்டென்று திரும்பினான். இருண்டு கிடந்த ஆதுரசாலையின் உள்ளிருந்து வெண்ணிற ஆடை தரித்த உயரமான மனிதர் ஒருவர் எவ்விதத் தட்டுத் தடங்கலுமின்றி வெகு நிதானமாக வெளியே வந்தார்.

பரபரப்படைந்த பரமேசுவரவர்மன் ஓரடி பின்னால் நகர்ந்து அவரைக் கூர்ந்து நோக்கினான். அவர் ஒரு சமண முனிவர் என்பது அவனுக்குச் சந்தேகமறப் புலனாகியது. ஆனால், அவரது முகத்தை அவனால் புலப்படுத்திக் கொள்ள முடியவில்லை. அவரும் அவனை உற்றுப் பார்த்தார்.

''அஞ்சற்க! ஆவன செய்வோம்!''
—அருள் மயமான கனிவுக் குரல்.

இருட்டிலே வந்து நிற்பவனை 'யார்' என்று கேட்கவில்லை; 'என்ன சேதி' என்றும் வினவவில்லை; 'வர வேண்டும்' என்ற அன்பான வரவேற்பு மொழி; 'அஞ்சற்க' என்னும் ஆறுதல் வார்த்தை; 'ஆவன செய்வோம்' என்ற வாக்குறுதி. எத்தனை உயர்ந்த பண்பு மிக்க பேச்சு!

பரமேசுவர வர்மனின் மனம் விநய வியப்பில் அடங்கியது.

சமண முனிவர் தம் வலக்கையை உயர்த்தி ஏதோ சமிக்ஞை செய்யவே,



உள்ளிருந்து இருவர் வெளியே வந்தனர்.

அவர்களும் வெண்ணிற ஆடையே அணிந்திருந்தனர். முகங்கள் புலனாகவில்லை. பரமேசுவர வர்மனிடம் நெருங்கிய அவர்கள் அவனது தோளில் மூர்ச்சித்துக் கிடந்த மனிதரை இதமாக இறக்கி யெடுத்து ஏந்திப் பற்றியவாறு உள்ளே சென்றனர். அவர்களைப் பின்தொடர்ந்து அந்தச் சமண முனிவரும் சென்றார்.

தாழ்வாரத்தில் தனியே நின்றான் பரமேசுவர வர்மன். 'சரி; இங்கு வந்த காரியம் ஒருவாறு முடிந்தது. மர்மத் தாக்குதலுக்கு உள்ளான அந்த மனிதரைப் பற்றி இனி கவலை இல்லை. அவர் எப்படியும் உயிர் பிழைத்து விடுவார். நான் திட்டமிட்டபடி, என் நீண்ட பயணத்தைத் தொடர வேண்டியதுதான்.' —அங்கிருந்து ஓரடி எடுத்து வைத்தவன் சட்டென்று நின்றான்.

'பெருவள நல்லூர்ச் சாலையிலே பார்த்த அந்தப் பல்லக்கு யாருடையதாக இருக்கும்? அதிலே வந்தவர் யாராயிருப்பார்? அதனை ஏன் சிலர் வழிமறித்துத் தாக்கினார்கள்? அப்படித் தாக்கிவிட்டு ஓடிய அவர்கள் யார்? அவ்வழிமறிப்புச் சண்டைக்குப் பின் இந்த மனிதர் அங்கே அடிபட்டு வீழ்ந்து கிடக்கக் காரணம் என்ன? இவர் யாராயிருப்பார்?' — தயங்கி நின்ற பரமேசுவரவர்மன் தன் பார்வையை மருத்துவ மனையினுள் திருப்பினான்.

வலப்புறமிருந்த ஓர் அறையில் அம்மூன்று சமண முனிவர்களும் மெல்லிய குரலில் ஏதோ பேசிக் கொள்வது கேட்டது. அவ்வப்போது 'பளிச், பளிச்' என்ற ஒளியும் தோன்றி மறைந்தது. பிரக்ஞை இழந்து கிடக்கும் மனிதரின் உடலில் உள்ள இரணங்களை, மாணிக்கக் கல்லின் ஒளியினால் கண்டுபிடித்து மருந்து இடுவதில் அவர்கள் முனைந்திருக்கிறார்கள் போலும்.

'உயிராபத்தான நிலையிலே ஒரு மனிதரைக் கொண்டு வந்து ஒப்படைத்து விட்டு அவரைப் பற்றித் தகவலேதும் தெரிவிக்காமல் போவது முறையல்லவே! அவசர சிகிச்சை செய்யவேண்டியிருந்ததால் ஆதுர சாலையின் காப்பாளர் என்னிடம் ஏதும் விசாரிக்காமல் —பிறகு வந்து தெரிந்து கொள்ளலாம் என்று — உள்ளே போயிருப்பார். அவர் வரும் வரையில் காத்திருந்து அவரிடம் நடந்த விவரங்களை யெல்லாம் கூறி, அந்த மனிதர் யார் என்ற தகவலையும் கேட்டுத் தெரிந்து கொண்டு புறப்படுவதுதான் நல்லது.'

பெருமூச்சு விட்டுத் திரும்பிய பரமேசுவர வர்மன் தாழ்வாரத்தில்











'Simplons'

சாலை

அமைக்கவும்

கட்டிடம்

கட்டவும்

உதவும் சாதனங்கள்

Simplon & Co. Ltd

தலைமைக் காரியாலயம் : சென்னை - 2 — தொழிற்சாலை : சென்னை - 11

கிளைகள் : பெங்களூர் - உதகமண்டலம் - திருச்சிராப்பள்ளி - செகந்தராபாத்

கிடந்த கல் படுக்கையின்மீது போய்ச் சோர்வுடன் அமர்ந்தான். புகை சூழ்ந்த மாளிகைபோல் இருளில் புதைந்திருந்த அந்த ஆதுரசாலையை யும், அங்கே தன்னந்தனியாகக் குளிரில் முடங்கி உட்கார்ந்திருக்கும் தன்னையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்த அவன் தனக்குள் மெல்லச் சிரித்தான். பிறகு வேதனையுடன் நெட்டுயிர்த்துத் தன் தலையைத் தாங்கிப் பிடித்துக் கொண்டான்.

ஆமாம்; காலஞ்சென்ற மாமன்னன் மகேந்திர வர்மனால் சமணர்களுக்கெனப் 'பள்ளிச் சந்தமாக' வழங்கப் பெற்ற ஏழு வேலி நிலப்பரப்பில் அமைந்திருக் கும் இந்த ஆதுரசாலை, அம்மன்னனின் பட்டத்து ராணியால் கட்டுவிக்கப் பெற்றதாகும். மண்ணும் மனையிருப்பும் அளித்ததோடு அல்லாமல், ஆண்டு தோறும் ஐம்பது கழஞ்சுப் பொன் மானியமும் வழங்கி, இதனைச் சுற்றி யுள்ள தோட்டத்தில் விளைவிக்கப் பெறும் மருந்து மூலிகைச் செடிகளுக்குரிய 'செங்கொடிக் காணம்', 'கண்ணிட்டுக் காணம்' முதலான வரிகளையும் வசூலிக்காது விட்டிருந்தான் அந்தத் தருமத் துவஜ மன்னன். இப்படிப் பல்லவரால் உருவாகி வளர்ந்த இவ் வாதுர சாலையில்தான் இன்று அதே பல்லவ குலத்தில் உதித்த பரமேசுவர வர்மன் பராரிபோல் வந்து ஒடுங்கி முடங்கி உட்கார்ந்து கொண்டிருக்கிறான்!

இந்த ஆதுரசாலை இப்போது மருத் துவப் பணி ஒன்றை மட்டுமே குறிக் கோளாகக் கொண்டு இயங்கி வருகிற தென்று சொல்ல முடியாது; சமண சமயத்தின் தலைமைப் பீடமாகவும் அது செயல்பட்டு வந்தது. இந்த மாறு தலுக்கான காரணத்தைப் பரமேசுவர வர்மனும் அறிவான்.

**ப**ல நூறு ஆண்டுகளுக்கு முன் வட புலத்திலிருந்து தென்னகம் வந்து காலூன்றிய 'தேர வாதம்' எனப்படும் பௌத்த மதம், மற்கலியுண்டாக்கிய ஆசிவக மதம் முதலான மதங்களைப் போலவே, 'அநேகாந்த வாதம்' எனப் படும் சமண மதமும் புதிதாக வந்து பரவிய ஒன்றுதான்.

சமணர்களின் இருபத்து நான்கு தீர்த்தங்கரர்களில் கடைசித் தீர்த்தங்கர ரான ஞாதி புத்திர வர்த்தமான மகா வீரருக்கு ஒன்பது சீடர்கள் இருந் தார்கள். மகாவீரர் வீடுபேறு அடைந் ததும் அவரது சீடர்கள் சமண சமயத் தலைமையை ஏற்றுப் பரிபாலித்து வந்தனர். அவர்களில் இறுதியாகத் தலைமை வகித்தவர் பத்திரபாகு என்பவராவார். இவர் வட நாட்டில்

> உன் உதவி இல்லாவிடில் ஓர் எறும் பேனும் வாழ முடியாமல் தவிக்கும் என எண்ணுகிறாயா? அப்படி எண் ணுவது பெரும் அபசாரமாகும். உன் உதவியை உலகம் இரந்து நிற்கவும் வேண்டி நிற்கவில்லை. ஆண்டவனுக் காகப் பணி செய்யும் பேற்றினைத் தான் அவன் மக்களுக்கு ஓர் உரிமை யாக அளித்திருக்கிறானே அன்றி, உதவி செய்வதை அல்ல. 'உதவி' என்ற பதத்தை உன் உள்ளத்தில் இருந்து வெட்டி எறிந்துவிடு. நீ உதவ இயலாது. நீ வணங்கத்தான் முடியும். வணங்கு. உலகம் முழுவ தையும் அந்தப் பணிவான மனநிலை யுடன் பார். பற்றுக்கள் அப்போது உன்னை அறவே விட்டுவிடும்.
>
> —ஸ்வாமி விவேகானந்தர்

பஞ்சம் வரப்போவதை முன்கூட்டியே அறிந்து தமது பன்னீராயிரம் சமண முனிவர்களையும் அழைத்துக் கொண்டு தென்திசை நோக்கி வந்து கங்க நாட் டின் சிரவண பெள்குளத்தில் தங்கலா னார். பிறகு தம் சீடர்களில் ஒருவரான விசாக முனிவர் என்பவரைத் தமிழ் நாட்டுக்கு அனுப்பிச் சோழ-பாண்டிய நாடுகளில் சமண சமயத்தைப் பரவச் செய்தார். இப்படி, பத்திரபாகு முனி வரின் முயற்சியாலும், விசாக முனி வரின் நேர்முக விஜயத்தினாலும்தான் தமிழகம் சமண சமயத்தை அறிமுகப் படுத்திக் கொண்டது.

புதியனவற்றுக்கு எப்போதுமே ஒரு தனி வேகம் உண்டல்லவா? தமிழ் நாட்டில் சமணம் விரைந்து பரவத் தொடங்கியது. அவ்வப்போது பல பேரறிவாளர்களும் மாமுனிவர்களும் தோன்றித் தமிழாலும் தமது தூய அறநெறி நடத்தைகளாலும் சமண சமய வளர்ச்சிக்கு அடிகோலினர். அதன்பின் தமிழக அரசியலில் ஏற்பட்ட பல மாறுதல்களாலும், சமணரான களப்பிரர் சோழபாண்டிய ஆட்சிப் பீடங் களைக் கைப்பற்றியதாலும் சமணத்தின் வளர்ச்சி மேலும் விரிவடையலாயிற்று.

பத்திரபாகு முனிவரின் காலத்தி லேயே சமண மதத்தின் மூல சங்கத்தி லிருந்து நந்தி கணம், சேன கணம், சிம்ம கணம், தேவ கணம் என்பதாக நான்கு பிரிவுகள் பிரிந்திருந்தன. அவற் றில் நந்தி கணம் எனும் அருங்கலாவன் யப் பிரிவே தமிழ் நாட்டில் அதிகம் பரவி வந்தது. இந்த நந்தி கணத்தைச் சேர்ந்த வச்சிரநந்தி என்பார், தமி ழகச் சமண சமயத்தின் தலைமைப் பீடமாகத் 'திரமிள சங்கம்' என்ற

> எவனுடைய நம்பிக்கையையும் தகர்க்க முயலாதே. உன்னால் முடியுமானால் ஒருவனுக்கு அவனுடைய நம்பிக்கைக்கும் மேம்பட்ட ஒன்றைக் கொடு; உன்னால் இயன்றால் ஒருவனை அவன் இப்போதுள்ள நிலையிலேயே பற்றி, மேல்நோக்கிச் செலுத்து. ஒருபோதும் அவனிடத்தில் இப்போதுள்ள நம்பிக்கையை அழிக்காதே.
>
> —ஸ்வாமி விவேகானந்தர்

ஒன்றை மதுரையிலே நிறுவினர். இதனாலும் தமிழ் நாட்டிலே சமண சமயம் புது வெள்ளமாகப் பாய்ந்து, தமிழர்களின் தாய்ச் சமயமான சைவத்தை மெல்ல மெல்ல மூழ்கடிக்கத் தொடங்கியது. இந்நிலையில்தான், மூழ்கி வந்த சைவத்தை மேலே தூக்கிவிட அப்புது வெள்ளத்திலிருந்தே மாமலையொன்று எதிர் முகம் காட்டி எழும்பியது. ஆமாம்; திருப்பாதிரிப்புலியூர் பாடலிபுரச் சமண சங்கத்தின் தலைவராயிருந்த தருமசேனர் என்பார், திருவருளின் கருணை ஈர்ப்பினால் உண்மையொளி கண்டு திருநாவுக்கரசராக மாறிச் சமண வெள்ளத்திலே மூழ்கிக் கொண்டிருந்த சைவத்தை ஏந்திக் கொண்டு எதிர் நீச்சலிடலானார். அந்த ஞான மாமலையோடு இன்னொரு ஞான மேருவாக அவதரித்த திருஞான சம்பந்தரும் துணை நின்று சைவத்தைக் கரையேற்றிக் கொண்டு வந்தனர்.

புத்துயிர் பெற்ற சைவம் தன் பழைய ஒளிக் கதிர்களைப் புதுப் பொலிவுடன் வீசித் தமிழகத்தைத் தன்பால் ஈர்க்கத் தொடங்கியது. திருநாவுக்கரசரும் திருஞானசம்பந்தரும் உதய ஞாயிறுகளாக உலா வந்து சைவ ஒளியைப் பரப்பினர். அதுமட்டுமின்றி, அப்போது பல்லவ மன்னனாயிருந்த மகேந்திர வர்மனையும், பாண்டிய மன்னராயிருக்கும் நின்றசீர் நெடுமாறனையும் சமணத்திலிருந்து சைவ சமயிகளாக ஆக்கி வைத்தனர். இதனாலெல்லாம் சமண வெள்ளம் பையப் பைய வடிய ஆரம்பித்தது.

மதுரையில் பேராதிக்கம் செலுத்தி வந்த சமணர்களின் 'திரமிள (திராவிட) சங்கம்', திருஞான சம்பந்தரின் அனல் வாதப் புனல் வாதத்தினால் கலகலத்துக் கலைந்தது. அங்கிருந்த சமணத் தலைவர்கள் பாடலிபுரச் சமணப் பள்ளியில் வந்து புகலடையலாயினர்.

எந்த ஆதிக்கத்தை இழப்பவர்களாயினும் அல்லது அதைப் பெறுபவர்களாயினும் ஆரம்ப காலத்தில் நிதானம் தவறிப் பூசலிலும் புன்மைச் செயலிலும் இறங்குவது இயற்கை. சமயத் துறையில் நீண்ட காலமாகவே இது ஒரு தொற்றுநோய் போல் இருந்து வந்திருக்கிறது. சமய வழிக் கொள்கையிலே உறுதியாக நின்று, அதில் உண்மையான பற்றும் கொண்டு, அதன் உள்ளொளியையும் உயர்ந்த நோக்கங்களையும் உணர்ந்து, அவற்றை ஓம்பி ஒழுகுபவர்கள் அத்தகைய இழி செயல்களில் ஈடுபடுவதில்லை. ஆனால், மதத்தை ஒரு 'மதமாக' ஏற்று அதன் புறச் சின்னங்களிலும் புற நடவடிக்கைகளிலும் மட்டுமே தம் மனத்தை இறுக்கி வைத்துக் கொண்டிருக்கும் சில போலி மதவாதிகளோ அம்மாதிரி ஈன காரியங்கள் செய்வதில்தான் எப்போதுமே நாட்டம் உடையவர்களாக இருப்பார்கள். தத்தமது மதங்களைக் காப்பதற்கென்றே தாம் பிறந்திருப்பதாக அவர்கள் பறைசாற்றிக் கொள்வார்கள். உண்மையில் அவர்களாலேயே அவர்களுடைய மதத்தின் புனிதம் கெட்டுக் கறை படிய ஏதுவாகிறது என்பதை ஏனோ அவர்கள் உணர்வதில்லை. உணர்ந்தாலும் அந்தச் சுயநல வாதிகள் அதற்கு வேறு பொருள் கூற முனைவார்கள். இத்தகைய புன்மை ஜன்மங்கள் எந்தக் காலத்திலும், எல்லா மதங்களிலும், எப்போதும் இருந்துகொண்டேதான் இருக்கிறார்கள்.

இப்படித்தான், அன்பின் உருவான நாவுக்கரசரும் அருளின் வடிவமான ஞானசம்பந்தரும் சமண சமயத்தின் மேல் கருத்துப் போர் நிகழ்த்தி அதை அற வழியிலே வென்று வரும்போது, ஆங்காங்கே சில போலிச் சமணர்களும் போலிச் சைவர்களும் கூடி, கருத்துப் போருக்குப் பதிலாகக் கத்திப் போர் செய்து கலகம் விளைவிக்கலாயினர். இந்த வகையில் பாடலிபுரத்திலும் ஒரு கலகம் விளைந்தது. சமயங்களின் பெயரால் நடைபெறும் மறச் செயல்களை அடக்கிச் சமயப்பொறை காக்க வேண்டியது மன்னனின் கடமை அல்லவா? அப்போது பல்லவப் பேரரசனாக இருந்த மகேந்திரவர்மன் அந்தக் கலகத்தை அடக்கும்பொருட்டு அங்கிருந்த சமணப் பள்ளிகளையும் பாழிகளையும் இடித்துத் தள்ளினான். அப்படி இடிக்கப்பெற்ற பள்ளி பாழிகளின் கற்கள் வீணாகிவிடக் கூடாதே என்பதற்காக, அவற்றைக் கொண்டு திருவதிகை என்னும் ஊரில் ஒரு கோயில் எடுப்பித்து அதற்குக் 'குணபர ஈச்சரம்' என்று தன் பெயரையே சூட்டினான்.

இந்த விதமாகப் பாடலிபுரத்தில் இருந்த சமண சங்கமும் கலைய நேரிடவே, அங்கிருந்த சமண முனிவர்களின்




*சிகரியுடன் ப்ளெண்ட் செய்யப்பட்டது

புத்தம் புதியது • சுவையுடன் மணமுள்ளது
திருப்தி அளிப்பது

# கபே பிராண்ட்* பிரெஞ்சு காபி

ஓர் ப்ரூக் பாண்ட் தயாரிப்பு

பெரும்பாலோர் சிரவண பெள்குளத்துக்குப் போய் விட்டனர். ஆனால், மொழிப் பற்றும், நாட்டுப் பற்றும், சமண சமய நெறிகளில் ஆழ்ந்த நம்பிக்கையும் கொண்ட தமிழ்ச் சமண முனிவர்கள் அவ்வாறு நாடு விட்டு நாடு போகாமல், இந்தப் பெருவளநல்லூர்ச் சாலையை அடுத்துள்ள ஆதுர சாலையில் வந்து தங்கி, சமந்தபத்திரர் என்பவரைத் தலைவராகக் கொண்ட 'திரமிள சங்கம்' ஒன்றை இங்கே தோற்றுவித்துக் கொண்டார்கள். ஆகவேதான் இந்த ஆதுரசாலை முழுக்க முழுக்க ஆதுர சாலையாக இராமல், சமண சமயத்தின் தலைமைப் பீடமாகவும் விளங்கிவந்தது...

உஷைக் கன்னி ஒளி நீரில் முகம் அலம்ப ஆரம்பித்து விட்டாள் என்பதை உணர்ந்த பரமேசுவர வர்மன் தன் சிந்தனையிலிருந்து விடுபட்டு நிமிர்ந்தான். இவ்வளவு நேரமாகியும் அந்த ஆதுர சாலையின் காப்பாளர்களில் யாருமே வெளியே வராமல் இருப்பது அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. 'அவர்களை அழைத்துக் கூற வேண்டிய விவரங்களைக் கூறி, தாக்குதலுக்கு உள்ளான அந்த மனிதரைப் பற்றிய தகவல்களையும் கேட்டுக்கொண்டு புறப்படலாமா?' என்று ஒரு கணம் எண்ணினான். பிறகு, 'அவர்கள் என்னைப் பார்க்க விரும்பாமல் வேண்டுமென்றே வெளியில் வராமல் இருக்கிறார்களோ?' என்ற இன்னோர் எண்ணமும் தோன்றவே, முதலில் நினைத்த முடிவை மாற்றிக்கொண்டு குழம்பி நின்றான்.

'இனி என்ன செய்வது? அந்தச் சமணத் துறவிகளிடம் எதையும் சொல்லாமல், எதையும் கேட்காமல் புறப்பட்டு விடுவோமா? அதுதான் சரி.' — சட்டென்று எழுந்த பரமேசுவரவர்மன் அங்கிருந்து வெளியேறத் தாழ்வாரத்துப் படிகளில் வேகமாக இறங்கினான்.

''பல்லவ மன்னரவர்களுக்கு என் அன்பான வாழ்த்துக்கள் உரித்தாகும்!'' என்று அமைதி நிறைந்த குரலில் கூறிக்கொண்டே அருள் வழியும் புன்னகையோடு ஆதுரசாலையின் வலப் பக்க அறையிலிருந்து வெளிப்பட்டு அவனை நோக்கி வந்தார் அந்த நெடிதுயர்ந்த சமண முனிவர்.

ஆமாம்; திரமிள சங்கத் தலைவரான சமந்தபத்திரர் என்பவர்தான் அவர்!

### அத்தியாயம் நாற்பத்திரண்டு

## பல்லக்கில் வந்தவர் யார்?

விழிகளை மலர்த்தி வியப்புடன் பார்த்தான் பரமேசுவர வர்மன்.

''ஆபத்தான நிலையில் உள்ள ஒரு மனித உயிரைக் காப்பதே முதற் கடமை என்று எண்ணி அந்தப் பணியில் என் முழுக் கவனத்தையும் செலுத்தி விட்டதால் உடனடியாக வந்து மன்னரவர்களை வரவேற்க இயலாமற் போய்விட்டது; வருந்தற்க!'' என்றவாறு அவனுடைய இரு கரங்களையும் பற்றித் தம் கண்களில் ஒற்றிக் கொண்டார் சமந்தபத்திரர்.

பரமேசுவர வர்மனின் உடல் புல்லரித்தது. குவித்த கரங்களைத் தாழ்த்தாமல் அவரையே பார்த்துக்கொண்டிருந்தான் அவன். சமந்தபத்திரரும் அவனை விழியசைக்காமல் நோக்கினார். மாபெரும் சாம்ராஜ்யத்தின் மன்னனாயிருந்த அவன் இன்றிருக்கும் கோலத்தைக் கண்டு மனம் கசிந்ததாலோ என்னவோ அவர் கண்கள் பனித்தன.

''அடிகளாரை இன்று சந்திக்க நேர்ந்தது பற்றிப் பெரிதும் மகிழ்ச்சியுறுகிறேன்'' என்று குளிர்ந்த குரலில் கூறிப் புன்முறுவல் பூத்த பரமேசுவர வர்மன் சட்டென்று நிமிர்ந்து, ''அந்த மனிதரின் உடல்நிலை இப்போது எப்படியிருக்கிறது?'' என்று மிகுந்த ஆவலுடன் வினவினான்.

''அவர் உயிர் பிழைத்து விட்டார். ஆயினும் நிலைமை இன்னும் கவலைக்கிடமாகவே இருக்கிறது.''

மேற்கொண்டு அவர் ஏதேனும் சொல்வார், அல்லது கேட்பார் என்று எதிர்பார்த்தான் பரமேசுவர வர்மன். ஆனால் அவர் தம் பார்வையை வேறெங்கோ செலுத்திக் கொண்டு மௌனமாக நின்றிருந்தார்.

இனியும் காலம் தாழ்த்த விரும்பாதவன்போல் ஓரடி முன் வந்து நின்ற பரமேசுவர வர்மன், அன்றிரவு பெருவளநல்லூர்ச் சாலையில் தான் கண்ட காட்சிகளையும் நிகழ்ச்சிகளையும் மளமளவெனக் கூறி, ''இந்த விவரங்களை அடிகளாரிடம் தெரிவித்துவிட்டுப் போகவே இவ்வளவு நேரம் இங்கு காத்திருந்தேன். இனி நான் புறப்பட விடையளிப்பீர்கள் என்றும் நம்புகிறேன்'' என்றான்.

சமந்தபத்திரர் இதைக்கேட்டு எவ்வித பரபரப்பும் அடைந்ததாகத் தெரியவில்லை. எதைப் பற்றியோ ஆழ்ந்து

# காலகேட்டின்மூலம் நாள்முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஏனெனில், ஒரே தேய்ப்பில் கால்கேட் டென்டல் கிரீம் துர் நாற்றத்தையும் சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சத விகிதத்தை ஒழிக்கிறது.

கால்கேட் உடனடியாக வாய்-துர் நாற்றத்தை 10ல் 7 சந்தர்ப்பங்களில் அகற்றுகிறது என்பதையும், உணவு சாப்பிட்டவுடன் கால்கேட்டினுல் பற்களைத் துலக்கும் முறையால், பற்பசை வரலாற்றிலேயே இதுவரை கண்டிராத பெருமளவில், ஏராளமானவர்களுக்குச் சொத்தை ஒழிக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான பரிட்சைகள் நிரூபித்துள்ளன: இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு!

சாப்பிட்டவுடன் வாயை கொப்பளித்தால் மட்டும் போதாது—சாப்பிட்டவுடன் வழக்கமாக கால்கேட் டென்டல் கிரீமினுல் உங்கள் பற்களை நன்ருகத் துலக்குங்கள். இதன் விசேஷமும், ஊடுருவும் தன்மையுமுள்ள நுரை பற்களின் இடைவெளிகளிலே புகுந்து, சொத்தைக்கும், துர் நாற்றத்துக்கும் காரணமாக இருக்கும் அழுகிய பதார்த்த அணுக்களை அகற்றுகிறது.

கால்கேட்டில் நீடித்திருக்கும் நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனுலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்.




வழக்கமாக கால்கேட் உபயோகித்தால், அது:

- ✔ துர் நாற்றத்தை அகற்றுகிறது
- ✔ சொத்தையைத் தடுக்கிறது
- ✔ பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது

நீங்கள் பற்பொடியை விரும்பினுல், இந்த பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத்-பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.

**பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்ணிற பற்களைப் பெறவும் உலகத்திலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளையும் விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிறார்கள்.**

ஒரு விடுமுறை நாளில் போய் வரத் தீர்மானித்தேன்.

இதற்குள் சங்கீத சீசன் குறுக்கிட்டது. அன்று ஒரு பிரபல வித்வான் கச்சேரிக்கு நான் போயிருந்தபோது ரங்கசாமி தலையில் முட்டிக் கொண்டேன்.

''என்ன ரங்கசாமி ஞாபகம் இருக்கிறதா?'' என்று கேட்டேன்.

''என்ன ஸார்! அதற்குள் மறந்து விடுவேனா! உங்கள் புஸ்தகத்தைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும் என்று நினைத்துக் கொள்ளாத நாள் கிடையாது. ஆனால் அதற்கு நேரம்தான் இல்லை. சீக்கிரத்தில் கொண்டு வந்து விடுகிறேன்'' என்றார் ரங்கசாமி.

''நான்கூட இரண்டு கடிதாசிகள் போட்டேன்!'' என்றேன்.

''எப்போ? உங்களைப் பார்த்த மறு மாதமே நான் அந்த இடத்தை விட்டுக் காலிபண்ணிவிட்டேனே! அதனால்தான் உங்கள் கடுதாசி எனக்குக் கிடைக்கவில்லை!'' என்றார்.

''அட ராமா! அப்போ உங்கள் புது விலாசம் என்ன? அங்கேயாகிலும் நான் வந்து புஸ்தகத்தை வாங்கிக் கொள்கிறேன்'' என்றேன்.

''அதெல்லாம் கூடாது. நானே கொண்டு வந்து தருகிறேன்'' என்று ஆயிரம் உறுதி மொழி கூறினார் அருமை நண்பர் ரங்கசாமி!

''எதற்கும் உங்கள் விலாசத்தைச் சொல்லுங்களேன்!'' என்றேன்.

அவர் விலாசம் சொன்னார். அவர் சொன்ன தெருவின் பெயர் மனசில் நிற்காது போல் தோன்றியது. எதிலாவது குறித்துக் கொள்ள வேண்டும் போல் தோன்றியது. கச்சேரிக்கு வாங்கிய டிக்கெட்தான் பையிலிருந்தது. டிக்கெட்டின் பின்புறத்தில் அதைக் குறித்து வைத்துக் கொண்டேன்.

மறுபடியும் ரங்கசாமி நான் கணக்கைக் கணக்கிடப் பிரம்மாவின் காலண்டரைப் பார்க்கத் தொடங்கி விட்டார்.

எனக்கோ அந்தப் புஸ்தகம் அவசரமாகத் திடீரென்று தேவைப்பட்டது!

கச்சேரிக்குப் போட்டுக் கொண்டு போன சட்டை சலவைக்கு மூன்று தடவை போய் வந்து விட்டதே! இப்போது அந்த டிக்கெட்டைத் தேடினால் எங்கே கிடைக்கும்?

அன்றைக்கு மௌண்ட் ரோடு பக்கம் போயிருந்தேன். பொதுவாக அந்தப் பக்கம் போனால் அங்கிருக்கும் ஹிக்கின் பாதம்ஸ் புத்தகக் கடையில் நுழைந்து புஸ்தகங்களைப் பார்ப்பதிலும் என்னென்ன புதுப் புஸ்தகங்கள் வந்திருக்கின்றன என்று தெரிந்து கொள்வதிலும் தனியான திருப்தி. அன்றைக்கு அந்தப் புஸ்தகக்கடையில் புஸ்தகங்களைப் பார்த்துக் கொண்டு வந்தபோது வெகு நாட்களாகத் தேடிக் கொண்டிருந்த ஒரு புஸ்தகம் தட்டுப்பட்டது. ''ஆகா! நம்மிடம் இப்போது பணம் இருந்தால்....'' என்று நினைத்துக்கொண்டே என் பர்ஸைத் திறந்தேன். எனக்கே நம்ப முடியாதபடி பத்து ரூபாய் நோட்டு அதில் இருந்தது. அந்தப் பத்து ரூபாய் நோட்டு எப்படி வந்தது என்பதைப் பற்றிச் சிந்திக்கவில்லை. புஸ்தகத்தின் விலையைப் பார்த்தேன். எட்டேகால் ரூபாய் என்றுதான் போட்டிருந்தது. புஸ்தகத்தை வாங்கிக் கொண்டு வழியெல்லாம் புரட்டிப் புரட்டிப் பார்த்துக் கொண்டே பெருமிதத்துடன் வீட்டுக்கு வந்து சேர்ந்தேன்.

''என்ன வெறுங் கையோடு வருகிறீர்கள்? குழந்தைக்குப் பால் டப்பா வாங்கி வரச் சொல்லி யிருந்தேனே..?'' என்றாள் மனைவி.

''இப்போதல்லவா புரிகிறது பர்ஸ் பத்து ரூபாய் குட்டி போட்டதன் ரகசியம்!'' என்று நினைத்துக்கொண்டேன்.

அதற்குப் பிறகு எனக்குக் கிடைத்த விசேஷ முணுமுணுப்பின் காரணமாக இந்தப் படிப்பு வாசனை இல்லாமலிருந்திருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும் என்று நான் நினைத்தால் தவறு என்ன இருக்கிறது?

இதோ என் காரியாலயத்தில் பக்கத்தில் இருக்கும் நண்பர் பதினேழு ரூபாய் கொடுத்து ஓர் அருமையான புஸ்தகம் வாங்கி மானேஜருக்குத் தெரியாமல் ரகசியமாகப் படித்துக் கொண்டிருக்கிறார். அவரை, ''ஸார்! நீங்கள் படித்து முடித்துவிட்டு எனக்கு ஒரு வாரம் கொடுங்கள். நான் படித்து விட்டுத் தருகிறேன்'' என்றேன்.

அதற்கு அவர், ''நீங்கள் என்னிடமிருந்து இரண்டு வருஷங்களுக்கு முன் வாங்கிக் கொண்டு போன புஸ்தகத்தையே திருப்பித் தரவில்லை. அதைக் கொடுங்கள் — பிறகு நான் இதைத் தருகிறேன்'' என்றார். எனக்குத் தூக்கி வாரிப் போட்டது.

அதைத்தான் இப்போது தேடிக் கொண்டிருக்கிறேன். இரண்டு அலமாரி முழுதும் தேடியாகி விட்டது. காணவில்லை. மூன்றாவது அலமாரியைத் தேடப் போகிறேன். அதிலாவது இருக்கிறதோ அல்லது அதை யாராவது இரவல் வாங்கிப் போய்த் திருப்பித் தரவில்லையோ என்னவோ, தெரியவில்லை.

மொத்தத்தில் இந்தப் படிப்பு வாசனை ரொம்பத் தொல்லைப் படுத்துகிறது. இதை மறந்து போவதற்கு வேறு வழி கிடையாதோ என்று கூடத் தோன்றுகிறது!

ஒரு விடுமுறை நாளில் போய் வரத் தீர்மானித்தேன்.

இதற்குள் சங்கீத சீசன் குறுக்கிட்டது. அன்று ஒரு பிரபல வித்வான் கச்சேரிக்கு நான் போயிருந்தபோது ரங்கசாமி தலையில் முட்டிக் கொண்டேன்.

''என்ன ரங்கசாமி ஞாபகம் இருக்கிறதா?'' என்று கேட்டேன்.

''என்ன ஸார்! அதற்குள் மறந்து விடுவேனா! உங்கள் புஸ்தகத்தைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும் என்று நினைத்துக் கொள்ளாத நாள் கிடையாது. ஆனால் அதற்கு நேரம்தான் இல்லை. சீக்கிரத்தில் கொண்டு வந்து விடுகிறேன்'' என்றார் ரங்கசாமி.

''நான்கூட இரண்டு கடிதாசிகள் போட்டேன்!'' என்றேன்.

''எப்போ? உங்களைப் பார்த்த மறு மாதமே நான் அந்த இடத்தை விட்டுக் காலிபண்ணிவிட்டேனே! அதனால்தான் உங்கள் கடுதாசி எனக்குக் கிடைக்கவில்லை!'' என்றார்.

''அட ராமா! அப்போ உங்கள் புது விலாசம் என்ன? அங்கேயாகிலும் நான் வந்து புஸ்தகத்தை வாங்கிக் கொள்கிறேன்'' என்றேன்.

''அதெல்லாம் கூடாது. நானே கொண்டு வந்து தருகிறேன்'' என்று ஆயிரம் உறுதி மொழி கூறினார் அருமை நண்பர் ரங்கசாமி!

''எதற்கும் உங்கள் விலாசத்தைச் சொல்லுங்களேன்!'' என்றேன்.

அவர் விலாசம் சொன்னார். அவர் சொன்ன தெருவின் பெயர் மனசில் நிற்காது போல் தோன்றியது. எதிலாவது குறித்துக் கொள்ள வேண்டும் போல் தோன்றியது. கச்சேரிக்கு வாங்கிய டிக்கெட்தான் பையிலிருந்தது. டிக்கெட்டின் பின்புறத்தில் அதைக் குறித்து வைத்துக் கொண்டேன்.

மறுபடியும் ரங்கசாமி நான் கணக்கைக் கணக்கிடப் பிரம்மாவின் காலண்டரைப் பார்க்கத் தொடங்கி விட்டார்.

எனக்கோ அந்தப் புஸ்தகம் அவசரமாகத் திடீரென்று தேவைப்பட்டது!

கச்சேரிக்குப் போட்டுக் கொண்டு போன சட்டை சலவைக்கு மூன்று தடவை போய் வந்து விட்டதே! இப்போது அந்த டிக்கெட்டைத் தேடினால் எங்கே கிடைக்கும்?

அன்றைக்கு மௌண்ட் ரோடு பக்கம் போயிருந்தேன். பொதுவாக அந்தப் பக்கம் போனால் அங்கிருக்கும் ஹிக்கின் பாதம்ஸ் புத்தகக் கடையில் நுழைந்து புஸ்தகங்களைப் பார்ப்பதிலும் என்னென்ன புதுப் புஸ்தகங்கள் வந்திருக்கின்றன என்று தெரிந்து கொள்வதிலும் தனியான திருப்தி. அன்றைக்கு அந்தப் புஸ்தகக்கடையில் புஸ்தகங்களைப் பார்த்துக் கொண்டு வந்தபோது வெகு நாட்களாகத் தேடிக் கொண்டிருந்த ஒரு புஸ்தகம் தட்டுப்பட்டது. ''ஆகா! நம்மிடம் இப்போது பணம் இருந்தால்....'' என்று நினைத்துக்கொண்டே என் பர்ஸைத் திறந்தேன். எனக்கே நம்ப முடியாதபடி பத்து ரூபாய் நோட்டு அதில் இருந்தது. அந்தப் பத்து ரூபாய் நோட்டு எப்படி வந்தது என்பதைப் பற்றிச் சிந்திக்கவில்லை. புஸ்தகத்தின் விலையைப் பார்த்தேன். எட்டேகால் ரூபாய் என்றுதான் போட்டிருந்தது. புஸ்தகத்தை வாங்கிக் கொண்டு வழியெல்லாம் புரட்டிப் புரட்டிப் பார்த்துக் கொண்டே பெருமிதத்துடன் வீட்டுக்கு வந்து சேர்ந்தேன்.

''என்ன வெறுங் கையோடு வருகிறீர்கள்? குழந்தைக்குப் பால் டப்பா வாங்கி வரச் சொல்லியிருந்தேனே..?'' என்றாள் மனைவி.

''இப்போதல்லவா புரிகிறது பர்ஸ் பத்து ரூபாய் குட்டி போட்டதன் ரகசியம்!'' என்று நினைத்துக்கொண்டேன்.

அதற்குப் பிறகு எனக்குக் கிடைத்த விசேஷ முணுமுணுப்பின் காரணமாக இந்தப் படிப்பு வாசனை இல்லாமலிருந்திருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும் என்று நான் நினைத்தால் தவறு என்ன இருக்கிறது?

இதோ என் காரியாலயத்தில் பக்கத்தில் இருக்கும் நண்பர் பதினேழு ரூபாய் கொடுத்து ஓர் அருமையான புஸ்தகம் வாங்கி மானேஜருக்குத் தெரியாமல் ரகசியமாகப் படித்துக் கொண்டிருக்கிறார். அவரை, ''ஸார்! நீங்கள் படித்து முடித்துவிட்டு எனக்கு ஒரு வாரம் கொடுங்கள். நான் படித்து விட்டுத் தருகிறேன்'' என்றேன்.

அதற்கு அவர், ''நீங்கள் என்னிடமிருந்து இரண்டு வருஷங்களுக்கு முன் வாங்கிக் கொண்டு போன புஸ்தகத்தையே திருப்பித் தரவில்லை. அதைக் கொடுங்கள் — பிறகு நான் இதைத் தருகிறேன்'' என்றார். எனக்குத் தூக்கி வாரிப் போட்டது.

அதைத்தான் இப்போது தேடிக் கொண்டிருக்கிறேன். இரண்டு அலமாரி முழுதும் தேடியாகி விட்டது. காணவில்லை. மூன்றாவது அலமாரியைத் தேடப் போகிறேன். அதிலாவது இருக்கிறதோ அல்லது அதை யாராவது இரவல் வாங்கிப் போய்த் திருப்பித் தரவில்லையோ என்னவோ, தெரியவில்லை.

மொத்தத்தில் இந்தப் படிப்பு வாசனை ரொம்பத் தொல்லைப் படுத்துகிறது. இதை மறந்து போவதற்கு வேறு வழி கிடையாதோ என்று கூடத் தோன்றுகிறது!



# பூனா நகரத்துக் கார்த்திகேயன்

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

இந்திய நாட்டின் சரித்திரத்திலே சத்ரபதி சிவாஜிக்கு ஒரு நிரந்தரமான இடம் உண்டு. கி.பி. பதினேழாம் நூற்றாண்டிலே மொகலாய மன்னனான ஔரங்கசீப் இஸ்லாமிய மதப்பற்று மிக்கவனாக இருந்திருக்கிறான். அது காரணமாக இந்துக்கள் பலரையும் துன்புறுத்தியிருக்கிறான். அச்சமயத்தில் மராத்தியத் தலைவனாக இருந்த சிவாஜி, ஔரங்கசீபை எதிர்த்துப் பல முறை வெற்றி கண்டிருக்கிறான். மொகலாய மன்னரது சிறையிலிருந்து தப்பி ராய்கர் என்னும் இடத்தைத் தலைநகராக வைத்து ஒரு மகாராஷ்டிர ராஜ்யத்தையே நிறுவியிருக்கிறான். அவன் அன்னை பவானியை ஆராதித்துப் பூனா என்னும் இடத்தையே தன்னுடைய கேந்திர ஸ்தானமாக அமைத்து வாழ்ந்திருக்கிறான். கர்நாடக ராஜ்யத்தையும் வென்று தன் ராஜ்யத்தை விஸ்தரித்திருக்கிறான். இந்த சத்ரபதி சிவாஜியால் புகழ் பெற்ற நாட்டையும், அவன் வணங்கிய அன்னை பவானியையும் காண வேண்டும் என்றால் நாம் பூனா என்னும் நகரத்துக்கே செல்ல வேண்டும். இன்றைய மகாராஷ்டிர ராஜ்யத்துக்குத் தலைநகர் பம்பாய்தான் என்றாலும் மராத்திய மக்கள் நிரம்பிய நகரமாகவும், பால கங்காதர திலகர் போன்ற தேசத் தலைவர்கள் வாழ்ந்த நகரமாகவும் இருப்பது பூனா பட்டணமே. அந்தப் பூனா என்னும் புண்ணிய நகரத்துக்கே செல்கிறோம் நாம் இன்று.

பூனா செல்ல மதராஸிலிருந்து பம்பாய் செல்லும் ரயிலிலே ஏறி, பூனா ஸ்டேஷனிலே இறங்கலாம். பம்பாய்க்குத் தெற்கே நூற்றிருபது மைல் தொலைவில் இந்த நகரம் இருக்கிறது. பூனா நகரத்தின் ஆதிப் பெயர் புண்ணிய நகரம் என்பதேயாகும். அன்னை பவானி, சத்ரபதி சிவாஜி, லோகமான்ய திலகர் போன்றவர்களைத் தன்னகத்தே கொண்ட நகரம் புண்ணிய நகரம் என்று பாராட்டப்படுவதில் வியப்பில்லையே. புண்ணிய நகரமே நாளடைவில் புண்யா என்று குறுகி இன்று பூனா என்று நிலைத்திருக்கிறது. இந்த நகரத்தின் பகுதிகள் எல்லாம் 'பேட்டை பேட்டை' என்றே அழைக்கப்படுகின்றன. அதிலும் வாரத்தில் உள்ள கிழமைகளின் பெயரால் சனிவார்பேட், ரவிவார்பேட், சோமவார்பேட், மங்களவார்பேட், புதவார்பேட், சுக்கிரவார்பேட் என்றெல்லாம் பல பகுதிகள் இருப்பதுடன், இன்னும் சதாசிவபேட், கணேசபேட், ராஸ்தாபேட், பவானிபேட் என்னும் பெயரோடும் பல பகுதிகள் இருக்கின்றன. நாம் இங்குள்ள பேட்டைகளையும் அங்குள்ள கடைகளையும் பார்க்க வந்தவர்கள் அல்லவே. நாம் க்ஷேத்திராடனம் அல்லவா தொடங்கியிருக்கிறோம். அதனால் விறுவிறு என்று சுற்றி அங்குள்ள கோயில்களையெல்லாம் தரிசித்துவிடலாம்.

நாம் முதலிலேயே பவானிபேட் சென்று அன்னை பவானியை வணங்கி விடுவோம். இந்தப் பகுதிக்கு ஆதியில் போர்பன் என்ற பெயரே இருந்திருக்கிறது. பவானியின் கோயில் கட்டப்பட்ட பின்னரே பவானிபேட் என்ற பெயர் நிலைத்திருக்கிறது. அன்னை பவானியின் கோயில் ஒரு குறுகிய சந்தில் சிறிய கோயிலாகவே இருக்கிறது. அங்கு கோபுரமோ, கோபுர வாயிலோ ஒன்றும் இல்லை. கோயிலெல்லாம் ஓட்டுக் கூரை வேய்ந்ததே. ஒரு சிறு கருவறை; அதற்கு முன்னால் பக்தர்கள் நின்று தொழ, மரத் தூண்கள் தாங்கும் கூரையோடு கூடிய ஒரு மண்டபம். அன்னை பவானி நல்ல கரு நிறம் உடையவளாக இருக்கிறாள். அவள் கருவறையைச் சுற்றி வர ஒரு வழி வகுத்திருக்கிறார்கள். அந்த வழியில் ஒரு கல் நாட்டப்பட்டிருக்கிறது. பவானியிடம் பிரார்த்தனை செய்பவர் அந்தக் கல்லைத் தழுவித் தங்கள் தங்கள் பிரார்த்தனைகளைச் செய்து கொள்கிறார்கள். இந்தக் கோயிலில் வந்து வணங்கி அன்னை பவானியின் அருள் பெற்றுத்தான் சத்ரபதி சிவாஜி அரிய பெரிய காரியங்களையெல்லாம் செய்திருக்கிறான். அவனுடைய புகழுக்கும் கீர்த்திக்கும் ஏற்ற வண்ணம் இக் கோயில் இன்றளவும் ஒரு பெரிய கோயிலாக உருவாகவில்லைதான்.

பவானிபேட் அன்னை பவானியைத் தரிசித்த பின் கஸ்பாபேட் சென்று அங்கு சிவாஜியின் தாயாரான ஜீஜாபாய் அம்மையாரால் கட்டப்பட்ட மகா கணபதி கோயிலுக்கும் நாம் வணக்கம் செலுத்தலாம். மராத்தியர்களுக்கு மகா கணபதியிடம் அளவு கடந்த பக்தி. செல்லிய வண்ணத்திலே சிறியதும் பெரியதுமான கணபதி வடி

வங்கள் பலவற்றை உருவாக்கி வழிபட்டு வருகின்றனர். ஒவ்வொரு கோயில் வாயில் கதவத்திலுமே சிறிய மகா கணபதி-வடிவம் இருக்கும். கஸ்பாபேட்டில் உள்ள கணபதி சுயம்பு மூர்த்தி என்கின்றனர். ஆதியில் மாடு மேய்க்கும் சிறுவர்கள் கற்பாறை ஒன்று கணபதியின் வடிவில் இருப்பதைக் கண்டு அதற்குப் பால் சொரிந்து வழிபாடு செய்திருக்கின்றனர். பின்னர்தான் ஜீஜாபாய் கோயில் கட்டிப் பிரபலப்படுத்தி யிருக்கிறார். இன்று மகாராஷ்டிரர்களுக்கு அன்னை பவானியை விட அதி உத்கிருஷ்டமான தெய்வம் இக் கணபதியே. கல்யாணம் முதலிய எல்லா சுப காரியங்களிலும் அக்ரதாம்பூலம் இந்தக் கணபதிக்குத்தான். இங்கு வந்து பூஜித்து மணவோலையை வாசித்த பின்னரே மற்றக் காரியங்களைச் செய்வதை வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். விநாயக சதுர்த்தி விழா இந்தக்கோயிலில் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. இந்தக் கஸ்பா பேட்டையிலே முதலாவது மகா யுத்தத்தில் மகாராஷ்டிர வீரர்கள் செய்த அரிய வீரச் செயல்களின் ஞாபகார்த்தமாகப் பெரிய கட்டிடம் ஒன்றைக் கட்டி அங்கு சிவாஜியின் உருவச் சிலையையும் நிறுவியிருக்கின்றனர்.

பூனா நகரத்திலுள்ள கோயில்களில் எல்லாம் பழமையான கோயில் பாதாளேசுவரர் கோயில்தான். பெயரிலிருந்தே அது பூமியின் மட்டத்துக்கு அடியிலுள்ள கோயில் என்று அறியலாம். அந்தக் கோயில், நமது மாமல்லபுரத்தைப் போன்று மலையை வெட்டிச் செதுக்கப்பட்ட தொன்று. கி.பி. எட்டாம் நூற்றாண்டில் வெட்டப்பட்டதென அறிகிறோம். கோயில் பூமி மட்டத்துக்கு அடியில் இருப்பதால் படிகளில் இறங்கி உள்ளே செல்ல வேண்டும். நல்ல சதுரமான தூண்கள் அமைந்த முன் மண்டபத்துடன் கோயில் இருக்கும். அங்கு இறைவன் லிங்கத் திருவுருவில் இருப்பான். முன் மண்டபத்தையும் முந்திக் கொண்டு நந்தி ஒன்று படுத்திருக்கும். இந்த நகரத்தில் உள்ள குடைவரை இது ஒன்றுதான் என்று அறியும்போது அதன் பெருமையும் விளங்கும். இந்தப் பாதாளேசுவரர் கோயிலை அடுத்தே ஒரு சிறு கோயில். அதை ஜங்கிலி மகராஜ் கோயில் என்கின்றனர். யாரோ ஒரு மகான் காடு மேடெல்லாம் சுற்றி அலைந்திருக்கிறார். கடைசியில் இங்கு வந்து தங்கி அமரர் ஆகியிருக்கிறார். அவரைச் சமாதி வைத்த இடத்திலே கோயிலைக் கட்டி யிருக்கின்றனர். இந்தக் கோயில் வாயிலில் ஒரு மணி விளக்கு தொங்கிக் கொண்டிருக்கிறது. அதை நந்தா விளக்காக நிர்வாகிகள் காத்து வருகின்றனர். இந்த ஜங்கிலி மகராஜ் சந்நிதியிலே இந்துக்களும் முஸ்லிம்களும் சேர்ந்தே வழிபாடு செய்கின்றனர்.

பூனா நகரத்தில் மிகச் சிறப்பாகக் கூறப்படுவது சனிவார்வாடா என்னும் பழைய அரண்மனை யொன்று. சத்ரபதி சிவாஜியின் பரம்பரைக்குப் பின்னால் மகாராஷ்டிர நாட்டைப் பீஷ்வாக்கள் உன்னத நிலைக்குக் கொண்டு வந்திருக்கின்றனர். அப்போது இந்த நகரமே அவர்களது தலைநகரமாக இருந்திருக்கிறது. பீஷ்வாக்களில் பிரசித்தி பெற்றவரான முதலாவது பாஜிராவ் இந்த



பாதாளேசுவரர் கோயில்

அரண்மனையைக் கட்டியிருக்கிறார். இந்த அரண்மனைகளில் பல பகுதிகள் இடிந்துவிட்டன. எஞ்சிய இடத்தில் ஒரு பொருட்காட்சிச் சாலை வைத்து அதில் மகாராஷ்டிரர்களது ஆயுதங்கள்; பீரங்கிகள் முதலியவற்றைச் சேகரித்து வைத்திருக்கின்றனர்.

இந் நகரின் மத்தியில் குஜராத்தித் துணி வியாபாரிகள் கட்டிய லட்சுமி நாராயணன் கோயில் ஒன்றும் இருக்கிறது. இதற்கு ஒரு குறுகிய சந்து வழியே செல்ல வேண்டும். போனால் அங்கு ஒரு பெரிய கோயில் இருக்கும். முழுவதும் கல்லாலேயே கட்டியிருக்கிறார்கள். வண்ணங்களை அள்ளி இறைத்திருக்கிறார்கள். இங்குள்ள வைஷ்ணவர்கள் ராமானுஜ சித்தாந்த சபை ஒன்றை அமைத்து அதில் திவ்யப் பிரபந்தப் பாடல்களை யெல்லாம் பாடுகிறார்கள். ஏதோ நாமதேவ், துக்காராம் முதலியவர்களது பாடல்கள்தாம் அங்கு பிரசித்தம் என்பதில்லை. ஆயிரம் மைல்களுக்கு அப்பாலும் நமது ஆழ்வார்களது பாசுரங்கள் பாடப்படுகின்றன என்று அறிகிறபோது நமது உள்ளத்துக்கு எவ்வளவோ மகிழ்ச்சி. இன்னும் இந்த நகரைச் சுற்றிச் சுற்றி வந்தால் கணபதி கோயில்களையும், அனுமார் கோயில்களையும் காணலாம். மகாராஷ்டிர மக்களிடையே கணபதிக்கு அடுத்தபடி பிராதான்யம் பெற்றிருப்பவர் ஆஞ்சநேயர்.

இப்படியே உங்களைச் சுற்றிச் சுற்றியடிக்க விரும்பவில்லை. இவ்வூருக்குத் தென்-மேற்குப் பக்கத்தே உள்ள ஒரு சிறு மலைக்கு அழைத்துச் செல்ல விரும்புகிறேன். அந்த மலை கடல் மட்டத்துக்கு மேல் இருநூற்று அறுபது அடி உயரம் உள்ள சிறிய மலைதான். அந்த மலை ஏற நல்ல படிக்கட்டுகள் கட்டியிருக்கிறார்கள். மொத்தம் ஏறவேண்டியதெல்லாம் நூற்றெட்டுப் படிகள். இந்த மலையைப் பார்வதி மலை என்கின்றனர். பர்வதத்தின் மேல் உறைபவள்தானே பார்வதி. ஆதியில் இம்மலையில் பார்வதி என்னும் பெயர் கொண்ட தேவியின் கோயில் இருந்திருக்கிறது. அந்த அக் காட்டில் உள்ள வேடர்கள் ஆராதித்து வந்திருக்கிறார்கள். பின்னர் அக்கோயிலுக்கு ஒரு பூசாரி ஏற்பட்டிருக்கிறான். அவன் தினமும் மலை ஏறித் தேவியின் பூஜையை முடித்து விட்டுத் திரும்பி யிருக்கிறான். அச்சமயத்தில் அம்மலையின் பக்கத்தில் வாழ்ந்து வந்த நானா சாகிப் பீஷ்வாவின் தாயார் காசிபாய் அம்மையார் ஒரு கடும் வியாதியால் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்திருக்கிறாள். நானா சாகிப் பீஷ்



"அது என்ன பால்?"

"உங்களுக்குத் தமிழ் இலக்கணம் தெரியுமா?"

"தெரியும்!"

"அது பலவின் பால்!"

வாயின் மலைவி தன் மாமியாருக்காகப் பார்வதி தேவியிடம் பிரார்த்தனை செய்திருக்கிறுள். காசிபாய் அம்மையாரும் நோய் நீங்கிக் குணம் பெற்றிருக்கிறார். இதன் பின்னர் நானு சாகிப் பீஷ்வா பத்து லட்சம் ரூபாய் செலவிட்டு மலையின் மேல் கோயில்கள் எல்லாம் கட்டி யிருக்கிறார். நாமும் மலை ஏறி அந்தக் கோயில்களுக்குச் சென்று வருவோம். மலை மீது ஏறியவுடன் ஒரு சிறு மண்டபத்தில் பாண்டுரங்க விட்டலனும் ருக்மிணி தேவியும் நமக்குத் தரிசனம் தருவார்கள். அவர்களை வணங்கி விட்டு வடபக்கம் உள்ள படிகளை ஏறிக் கடந்து சென்றால் ஒரு பெரிய கோயில் முற்றத்துக்கு வந்து சேருவோம். அங்கே இருப்பவர்தான் தேவ தேவன். லிங்க உருவினர் அவர்.

> தேவர் கோ அறியாத
> தேவ தேவன்
> செழும் பொழில்கள் பயந்து காத்து
> அழிக்கும் மற்றை
> மூவர் கோனும் நின்ற
> முதல்வன் மூர்த்தி

என்று மணிவாசகர் பாடினரே. அந்தத் தேவ தேவனை எங்கெல்லாமோ தேடினேமே; அவன் இங்கேயல்லவா வந்து ஒளிந்து கொண்டிருக்கிறான்? இக் கோயிலைச் சுற்றி வர நல்ல வெளிப் பிராகாரம் அமைத்திருக்கின்றனர். அங்கு சுற்றி வந்து தேவ தேவனுக்கு வணக்கம் செலுத்தி விட்டு வெளியில் வந்து தென் பக்கமாக நடந்து சென்றால் சிகரத்தோடு கூடிய பெரிய கோயில் ஒன்றையும் காண்போம். அது மகா விஷ்ணுவின் கோயிலாக இருக்கும். தேவ தேவனுக்கு வணக்கம் செலுத்தியது போல் மகா விஷ்ணுவுக்கும் வணக்கம் செலுத்தி விட்டுத் திரும்பும் போது இரண்டு கோயில்களுக்கும் இடையே ஒரு சிறு கோயில் தெரியும். இந்தக் கோயிலை விட்டு விட்டோம் என்று ஆதங்கத்துடன் அக் கோயிலினுள் நுழைய விரும்பினல் கோயில் வாயிலில் உள்ள பலகை ஒன்று நம்மை எச்சரிக்கும். மராத்தியில் 'இக் கோயிலுள் பெண்களும் பாதரட்சைகளும் வருதல் கூடாது' என்று எழுதி யிருக்கும். இது என்ன? 'பாதரட்சைகள் வரக் கூடாது என்றால் அர்த்தம் இருக்கிறது. பெண்கள் ஏன் வருதல் கூடாது?' என்று விசாரித்தால் அங்குள்ள அர்ச்சகர், அது கார்த்திகேயன் கோயில் என்றும், அங்குள்ள கார்த்திகேயன் பிரம்மச்சாரி என்றும் அதனுல் அவன் பெண்களின் முகத்திலேயே விழிக்கிறதில்லை என்றும் கூறுவார். சரி என்று உடன் வந்திருக்கும் சகோதரிகளை வெளியே நிறுத்தி விட்டு உள்ளே நுழைந்தால் அங்கு பளிங்குக் கல்லில் உருவாகி யிருப்பவன் நமது அறுமுகனே என்று காண்போம். சிறிய வடிவில் மயில் மேல் ஆரோகணித்தவனாக அவன் இருப்பான். இது என்ன, நமது ஊரில் ஒன்றுக்கு இரண்டாகத் தேவசேனையையும் வள்ளியையும் மணந்து கொண்டிருக்கும் கார்த்திகேயன், இங்கே மட்டும் பிரம்மச்சாரியாக வேஷம் போடுவானேன் என்று கேட்கத் தோன்றும்.

இந்தக் கார்த்திகேயனைத் தரிசித்த பின் மலையை விட்டுக் கீழ் இறங்கி விடலாம். மகாத்மா காந்தி பல தடவை ஏர்வாடா சிறையில் இருந்தார் என்பார்களே, அந்த ஏர்வாடா சிறையும் பூனு நகரத்துக்குக் கிழக்கே நான்கு மைல் தூரத்திலிருக்கிறது. ஊர் சுற்றிப் பார்க்கக் கார் ஏற்பாடு செய்திருந்தால் அந்தக் காரைத் திருப்பி ஏர்வாடா சிறைக்குப் போகலாம். போகிற வழியில் பூனுவில் ஓடுகின்ற மூலா, முக்தா நதிகளையும் கடக்கலாம். ஏர்வாடா சிறையை இன்று மூடி வைத்திருப்பார்கள் என்றாலும் அந்தச் சிறையின் காம்பவுண்டுக்குள் ஒரு சிறிய இடத்தில் கஸ்தூரிபா காந்தியின் சமாதியும், மகாதேவ தேசாய் சமாதியும் இருப்பதைப் பார்க்கலாம். அந்தச் சமாதிகளை அணுகி, அந்த அமரர்களுக்கு அஞ்சலி செலுத்தலாம்.

இப்போது நடைபெறும் யுகம் எவர்சில்வர் யுகம் என்பதை நாம் அறிவோம். ஆனல் பல வருஷங்களுக்கு முன் பூனு பித்தளைப் பாத்திரங்கள் பிரசித்தி பெற்றிருந்திருக்கின்றன. அப்போதெல்லாம் மெல்லிய தகட்டில் செய்யப்பட்ட 'பூனுத் தம்ளர்'கள் பிரசித்தமானவை. இன்று அவை போன இடம் தெரியவில்லை. என்றாலும் இன்று பூனுவில் உள்ள தமிழ் மக்கள் அந்தப் பூனுத் தம்ளரை விடப் பிரசித்தி பெற்றிருக்கிறார்கள். அங்குள்ள மிலிட்டரி அக்கௌண்ட் ஆபீஸிலும் மற்றைய எஞ்சினியரிங் பகுதிகளிலும் கிட்டத்தட்ட மூவாயிரம் பேர்கள் வேலை செய்கிறார்கள். இந்தத் தமிழர்கள் தங்கள் குழந்தைகள் படிப்புக்கென ஒரு பெரிய பள்ளியை நடத்துகின்றனர். சரஸ்வதி வித்யாலயம் என்ற அந்தப் பள்ளிக்கென நாலு லட்சம் ரூபாயில் ஒரு பெரிய கட்டிடம் கட்டி யிருக்கின்றனர். உயர்நிலைப் பள்ளியில் ஆண்களும் பெண்களுமாக ஆயிரம் பேர்களும் ஆரம்பப் பள்ளியில் ஐந்நூறு பிள்ளைகளும் வசதியாகப் படிக்க வகை செய்திருக்கின்றனர். 'கலைக் கழகம்' ஒன்றை அமைத்து இலக்கியம், இசை, நடனம், நாடகம் முதலியவைகளை வளர்த்துவருகின்றனர்.

## சமைக்கும்போதே இளைப்பாறலாம்

[illegible] மண்ணெண்ணெய் அடுப்பு கண்டு பிடிக்கும் வரையில் சமையல் என்றாலே மிகக் கஷ்டமான காரியம் என்று கருதப்பட்டு வந்தது. இப்பொழுது நீங்கள் சமைக்கும்போதே இளைப்பாறலாம். [illegible] கஷ்டமோ அடுப்பூதும் [illegible] கண்ணில் புகை [illegible] இல்லை. சமையலறையில் புகைக்கரிப் பிடிக்காது. இந்த அடுப்பு [illegible] எளிதானது எளிமையானது.

- [illegible]
- [illegible]
- [illegible]



PATENT NO. [illegible]

# காஸ் ஜனதா

மண்ணெண்ணெய் அடுப்பு

சுவையான சமையல் | சுலபமான சமையல்

தயாரிப்பாளர்கள்

தி ஓரியண்டல் மெட்டல் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்

77, [illegible] தெரு, கல்கத்தா-12

---



## சீரான ஆகாரமில்லாததால் நீங்கள் மெலிந்திருக்கிறீர்களா ?

# ஆல்போ-ஸாங் சாப்பிடுங்கள்

மிகச் சிறந்தது. சாதாரண உணவுடன் சேர்ந்து சிக்கனமான, விஞ்ஞான முறையில் ஊட்டமளிப்பது.

தேநீர், காப்பி, பால், கஞ்சி, பழரசம் முதலியவைகளுடன் சேர்த்து அருந்தினால் மிக ருசியாக இருக்கும். சிறு குழந்தைகளுக்கும், வளரும் பிராயத்திலும், பிரசவகாலத்தில் தாய்மார்களுக்கும், சிந்திக்கும் தொழிலாளிகளுக்கும், முதியவர்களுக்கும், பலவீனம், இரத்தமின்மை, மற்றும் நோயிலிருந்து தேறிவரும்போதும் ஆல்போ-ஸாங் சிறந்த டானிக் உணவாகிறது.



பௌடர் மற்றும் மாத்திரைகளாகவும் கிடைக்கிறது.

## ஜே. & ஜே. டிசேன்

ஹைதராபாத்—டெக்கான்




## பேச்சாளராக:

மேடைச் சொற்பொழிவாளர்களையும் பல சிறந்த இலக்கியச் சொற்பொழிவாளர்களையும் இன்று நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் நிறையக் காண்கிறோம். மேடைகளும் அவற்றை அலங்கரிப்பதற்கான சொற்பொழிவுத் துறைகளும், சொற்பொழிவாளர்களும் இன்று நாட்டில் பெருகி யுள்ளனர். அவர்களுக்கு எல்லாம் பயன்படும் அருமருந்தாக இந்நூல் வெளி வந்திருக்கிறது.

மேடைப் பேச்சு சிறப்பாக அமைவதற்கும், பேச்சாளர்கள் மேற்கொள்ள வேண்டிய குறிக்கோள்களுக்கும் அரியதொரு விளக்கமாக இந்நூல் எழுதப்பட்டுள்ளது. மேடைப் பேச்சு வரலாறு, மேடைப் பேச்சு வகைகள், எழுத்தும் பேச்சும் முதலிய இருபத்தொரு தலைப்புக் கட்டுரைகளிலும் பிற்சேர்க்கையிலுமாக இவ்வாசிரியர் இந்நூலில் சொல்லியுள்ள கருத்துக்கள் பேச்சாளருக்கு நல்வழி காட்டுகிற தன்மை வாய்ந்தவை. பேச்சு படிப்படியாக வளர்ச்சி பெறுவதையும், திறன் அடைவதையும், குறித்து மதிப்பிடுவதற்கு ஒரு குறிப்பும் இணைத்திருக்கிறார்கள். பாராட்டுக் கூட்டம், இரங்கற் கூட்டம், அவைத் தலைமை, நன்றி நவிலல் ஆகிய பேச்சின் பல துறைகளைப் பற்றிய விளக்கமும் நன்கு அமைந்துள்ளன.

ஆசிரியர்: அ. கி. பரந்தாமனார், எம். ஏ. விற்பனை உரிமை: பாரி நிலையம், 59, பிராட்வே சென்னை-1; விலை: ரூ. 2.00

## ஊமையன் சண்டை

பாரதத்தில் சுதந்திரத்துக்கு ஆபத்து விளைந்திருக்கும் இத்தருணத்தில் நம் நாட்டு வீர புருஷர்களின் வாழ்க்கையைப் பற்றித் தெரிந்து கொள்வது உணர்ச்சியும், ஊக்கமும், தைரியமும் அளிப்பனவாகும். பகைவர்களிடமிருந்து தப்புவதும், அவர்களை அழித்துத் துவம்சம் செய்வதும் அவர்கள் சூழ்ச்சிக்கு எதிர்ச் சூழ்ச்சி செய்வதும் வீரத்துக்குரிய லட்சணங்களாகும். தமிழ் நாட்டில் வீரசிங்கம் கட்டபொம்மு, ஊமையன், பெரிய மருது, சின்ன மருது ஆகியோர் விடுதலை முரசு கொட்டி எதிரிகளைத் திக்குமுக்காடச் செய்தவர்கள். இப்போது தேச உணர்ச்சி பொங்கிப் பெருக வேண்டிய சமயத்தில் தேவையான புத்தகம். கட்டபொம்முவைப் போலவும், ஊமையனைப் போலவும், பெரிய மருதுவைப் போலவும் வீரமணிகள் நம் நாட்டுக்குத் தேவை. இந்நூலைப் படிப்பதால் வீர உணர்ச்சியுடன் நரம்புகள் முறுக்கேறும்; ஒற்றுமை உணர்ச்சி பல்கிப் பெருகும்; பாரத நாட்டைப் பாதுகாக்கும் எண்ணம் வலுக்கும். யோகி சுத்தானந்த பாரதியார் படைத்துள்ள இந்நூலில் தமிழ் வீர நடை போடுகிறது.

பிரசுரம்: பாரத சக்தி நிலையம், 8, சிங்கராச்சாரி தெரு, சென்னை-5: விலை: ரூ. 1 50.

## வினோபாவின் வாழ்க்கை

வினோபா தம் தாய் சமையல் செய்து கொண்டிருக்கும் போது அவர் அருகில் காகிதங்களுடன் அமர்ந்தார். காகிதச் சுருளின் ஒரு முனையை நெருப்பில் இட்டார் அவர். 'என்ன காரியம் இது?' என்று கேட்டார் அன்னை. 'நான் பெற்ற கல்லூரி சர்டிபிகேட்டுகளை எரித்துக் கொண்டிருக்கிறேன்' என்று பதில் அளித்தார் வினோபா. 'இது என்ன முட்டாள்தனம்! அவை இருந்தால் பின்னால் பயன்படுமே' என்றார் தாயார். 'கல்லூரியை விட்டு வெளியேறத் தீர்மானித்து விட்டேன். இவை இனி எனக்குத் தேவையில்லை. பின் ஏன் இவைகளை வைத்துக் காப்பாற்ற வேண்டும்?' என்று கேட்டு அன்னையைத் திணற அடித்தார் வினோபா. இப்படி எத்தனை எத்தனையோ ருசிகரமான சம்பவங்கள் நிறைந்தது வினோபாவின் வாழ்க்கை. இவற்றில் ஒரு சிலவற்றை இந்நூலிலிருந்து தெரிந்துகொள்ளலாம்.

பிரசுரம்: சர்வோதயப் பிரசுரம், தஞ்சாவூர்: விலை: ரூ. 0.40

## புதிர்க் கதைகள்

இரண்டு சிறுவர்கள் காப்பி அடித்தார்கள். அந்தச் சிறுவர்களில் யார் காப்பி அடித்தார்களோ, அவர்களைக் கண்டு பிடிக்கிறது முதல் புதிர்க் கதை. இதில் என்ன புதிர் இருக்கிறது? யார் ஈயடிச்சான் காப்பி யடிச்சானோ அவன்தானே குற்றவாளி என்று நீங்கள் கூறுவது காதில் விழுகிறது. 'இரவல் புத்தகத்தில் அட்டை போடக் காரணம் என்ன?' என்று யாராவது ஒரு பையனைக் கேட்டால் 'அட்டை கிழிந்திருக்கும்' என்று யாரும் சொல்லி விடுவார்கள். இரண்டாம் கதையிலும் எந்த விதமான புதிரும் இருப்பதாகத் தெரியவில்லை. இந்தக் கதைப் புத்தகத்தில் செல்லாத நோட்டு பையன்கள் எண்ணத்தைக் கவர்ந்து செல்லத் தக்கது.

ஆசிரியர்: பூவண்ணன், பிரசுரம்: மீனாட்சி பதிப்பகம், புதுக்கோட்டை; விலை: ரூ. 0 70.

# இதுவல்லவோ மதம்?

நம்முடைய வேதாந்த மதமே உண்மையான மதம். அதன் நோக்கம் இந்தச் சின்னஞ்சிறிய உலகத்தின் தொடுவானமல்ல. நம் மதத்தின் நோக்கம் அதற்கு அப்பால், அப்பாலுக்கும் அப்பால் உள்ளது. புலன்களுக்கு அப்பால், பிரபஞ்சவெளிக்கு அப்பால், காலத்துக்கு அப்பால், தொலைவில், இந்த உலகத்துடன் லவலேசமும் தொடர்பின்றி வெகு வெகு தொலைவில், உள்ளது நம் மதத்தின் இலட்சியம். அந்த இலட்சியத்தை அடைந்து ஆத்ம மகிமை என்ற மேலான பெருங் கடலில் திளைக்கும் போது இந்த விசுவமெல்லாம் ஒரு துளிக்குச் சமானமேயாகும்..... நம்முடையதே உண்மையான மதம். ஏனெனில் எல்லாவற்றுக்கும் மேலாக அது துறவைப் போதிக்கிறது. ஹிந்துக்களாகிய நம்முடன் ஒப்பிடும்போது நேற்றுத் தோன்றிய இதர நாட்டு மதத்தினரிடம் நமது மதமானது, தனது யுகயுகாந்திரமான ஞானத்துடன் கம்பீரமாகவும் தெளிவாகவும் சொல்கிறது: குழந்தைகாள், நீங்கள் புலன்களுக்கு அடிமையாகி இருக்கிறீர்கள்; இந்தப் புலன் நுகர்ச்சி அழிவடைவதுதான். புலன்களால் கேட்டைத்தான் தேடிக் கொள்ள முடியும். இங்கு காணும் க்ஷண கால டாம்பீக வாழ்வு இறுதியில் வீழ்ச்சியைத்தான் தரும். இதை யெல்லாம் விடுங்கள். புலன்களிடத்தும் உலகப் பொருள்களிடத்தும் வைத்துள்ள பாசத்தைத் துறவுங்கள். அதுவே உண்மையான மதம் சொல்லும் மார்க்கம்' என்று. போகத்தின் மூலம் நமது குறிக்கோளை அடைய முடியாது. தியாகத்தின் மூலம்தான் முடியும். எனவே இந்தத் தியாகத்தைப் போதிக்கும் நம்முடைய மதமே மதமாகும்.

ஃ ஃ ஃ

வேதாந்த மதம் ஒன்றுதான் உலக மதம்; வேறெதுவும் அல்ல என்று நான் சொல்லுகிறேன். இதற்கு முதல் காரணம் நம் மதம் தவிர மீதி எல்லா மதங்களும் தனியொரு ஸ்தாபகர் அல்லது குறிப்பிட்ட சில ஸ்தாபகர்களின் வாழ்வுடன் பிரிக்க முடியாமல் பிணைக்கப்பட்டிருக்கின்றன. அவர்களிடமிருந்தே அம்மதங்களுக்கு உறுதிப்பாடும், பிரமாணமும், சக்தியும் கிடைக்கின்றன. அவர்கள் உண்மையாகவே வாழ்ந்த சரித்திரபூர்வமான பாத்திரங்கள் என்பதை ஆதாரமாகக் கொண்டே அம்மதங்களின் கோட்பாடுகள் எழுப்பப்பட்டிருக்கின்றன. எனவே அவர்களின் சரித்திரத்துவத்தை ஆராய்ந்து தாக்க நேரிட்டால் உடனே மதம் என்ற கட்டடமே சிதிலமாகத் தொடங்குகிறது.

ஆனால் நம் மதம் ஸ்தாபகர்களின் வாழ்வைக் கொண்டு எழுப்பியதல்ல. அது தத்துவங்களின் மீது எழுப்பியது. வேதங்களைச் செய்ததாக ஒரு ஸ்தாபகரும் உரிமை பாராட்ட முடியாது. அவை நிரந்தரத் தத்துவங்களின் உறைவிடம். ரிஷிகள் என்றுமுள்ள இந்த உண்மைகளைக் கண்டு உலகுக்குத் தந்தார்கள். எனவே அவர்கள் பெயரை—பெயரை மட்டுமே—ஆங்காங்கு காண்கிறோமே ஒழிய அவர்கள் சரிதம் பற்றி ஏதும் அறியோம். அவர்கள் தத்துவங்களின் விளக்கமாவதற்கே முயன்றவர்கள். எனவே அவர்கள் சரித்திர பூர்வமாக வாழ்ந்தார்களா வாழவில்லையா என்பதை ஆராய்ந்து காண்பதால் நம் மதத்துக்கு ஒரு சாதக பாதகமும் கிடையாது. மக்கட் குலத்தில் மிகப் பெரும்பான்மையினரை ஒரு மதத்தில் ஈடுபடுத்த முடியுமானால் அது தத்துவங்களைக் கொண்டுதான் இயலுமே ஒழிய, தனி மனிதர்களைக் கொண்டல்ல.

இந்து மதம் உலக மதமாகக் கூடியதற்கு இரண்டாவது காரணம் இம் மதத்தின் பிரமாண நூல்கள் மட்டிலுமேதான் புற இயற்கை பற்றி நவீன விஞ்ஞானம் கண்டு பிடித்துள்ள முடிவுகளுக்கு முற்றிலும் இசைவாக உள்ளன. ஜடப் பொருள்களைக் குறித்து நவீன விஞ்ஞானம் கூறும் கொள்கைகளை கைவிடாமலே ஆன்மீகத் துறையில் வேதாந்தம் கண்ட முடிவுகளைப் பின்பற்ற முடியும். பகுத்தறிவுக்கு அற்புதமான முறையில் பொருந்தியிருப்பதால்தான் . வேதாந்தம் மேநாட்டினரின்மனங்களைக்கவர்ந்திருக்கிறது.

எல்லாவற்றுக்கும் மேலாக ஆன்மீக ரீதியில் காணும் போது உலகமெல்லாம் ஒன்றே, உலக மாந்தரெல்லாம் ஒன்றே என்ற மகத்தான நிரந்தரத் தத்துவத்தைக் கூறுவதால் வேதாந்தமே உலக மதமாக முடியும்.

ஃ ஃ ஃ

உங்கள் வாயை மூடிக் கொண்டு நெஞ்சங்களைத் திறந்து வைத்துக் கொள்ளுங்கள். உங்களில் ஒவ்வொருவரும் சுமையனைத்தும் தன் தலையிலேயே சார்ந்திருப்பதாகக் கொண்டு இந்த நாட்டையும் உலகையும் உய்விக்க முயலுங்கள். வேதாந்த ஒளியையும், வேதாந்தம் கூறும் வாழ்க்கையையும் வீடு வீடாக எடுத்துச் சென்று ஒவ்வோர் ஆத்மாவிலும் மறைந்து கிடக்கும் தெய்வத் தன்மையைத் தட்டி எழுப்புங்கள். அப்படிச் செய்தால், நீங்கள் காணும் வெற்றி எவ்வளவு சிறியதாயினும், ஒரு மகத்தான பணிக்காக வாழ்ந்து உழைத்து மாண்ட திருப்தியை அடைவீர்கள்.

ஃ ஃ ஃ

சமூகக் கருத்துக்களையும், அரசியல் கருத்துக்களையும் இந்தியாவில் பரப்பு முன், ஞான வெள்ளத்தையே முதலாவதாகப் பொங்கிப் பரவிப் பாய வைக்க வேண்டும். நாம் முதல் கவனம் அளிக்க வேண்டிய பணி இதுவே : உபநிஷதங்களிலும், சாஸ்திரங்களிலும், புராணங்களிலும் பொதிந்து கிடக்கும் அதிஅற்புதமான உண்மைகளை நூல்களிலிருந்தும், மடங்களிலிருந்தும், வனங்களிலிருந்தும் வெளிப்படுத்த வேண்டும். ஒரு சிலரின் கையிலிருந்து அவற்றை வெளிக் கொணர வேண்டும். வெளிவிட்டபின் அந்த உண்மைகளை நாடெங்கும் பரப்ப வேண்டும். அவை வடகோடியிலிருந்து தென் முனை வரையில், இமாலயம் முதல் கன்னியாகுமரி வரையில், சிந்து நாட்டிலிருந்து பிரம்மபுத்திரா வரையில் தீயெனப் பரவச் செய்ய வேண்டும்.

**— ஸ்வாமி விவேகானந்தர்**




### அத்தியாயம் 5

## சுதந்திர சேனை

அருகிலிருந்த நாற்காலிகளுள் ஒன்றில் வடிவேலுவை அவர்கள் அமரச் செய்தார்கள். எதிரே மேஜை மீதிருந்த கோப்பையைச் சூடான டீயினால் நிரப்பினான் தாரா. சர்க்கரைக் கிண்ணத்தையும் அவன் பக்கமாய் நகர்த்தினான்.

சுற்றிலுமிருந்தோர் ஏதேதோ கேள்விகளைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். வடிவேலுவின் செவிகளில் அவற்றில் எதுவுமே விழுந்ததாகத் தெரியவில்லை. ஒரு ஸ்பூன் சர்க்கரையை எடுத்துப் போட்டுக் கொண்டு டீயைக் கலக்கிக் கோப்பைக்குள் சுழலை உண்டாக்கியபடி அவன் அமர்ந்திருந்தான்.

தாரா தன்னை அந்த யுவர்களுக்கும் யுவதிகளுக்கும் அறிமுகப்படுத்தி வைத்த விதத்தைப் பற்றி அவன் நினைத்துப் பார்த்தான். 'வடிவேலு என்பவரைப் பற்றி உங்களிடம் அடிக்கடி சொல்லியிருக்கிறேனல்லவா?' என்று அவர்களைக் கேட்டானே தாரா? அதற்கு முன்பே ஜந்தர் மந்தரில் தன்னைச் சந்தித்த போது அவன் கூறிய வார்த்தைகள் என்ன? சுபாஷ் பாபுவிடமிருந்து செய்தி வரலாம் என்ற தகவல் கிடைத்ததுமே உங்களை எதிர்பார்க்கத் தொடங்கி விட்டேன் என்பதுபோல் சொல்லவில்லையா? நேதாஜியின் சுதந்திர சேனையில் நான் சேருவேனென்றும் அவருடைய ஒற்றர்களுள் ஒருவனாகத் தாய்நாடு திரும்புவேனென்றும் அவன் எப்படி எந்த ஆதாரத்தின் பேரில் தீர்மானித்தான்? அவன் எதையும் தீர்மானிக்கவில்லை; அவனுடைய விருப்பமாக அது இருந்திருக்கிறது. தெய்வாதீனமாக அந்த விருப்பம் நிறைவேறியும் இருக்கிறது. அப்படியானால் தாரா என்னைப் பற்றிய நினைவாகவே இருந்திருக்கிறான் என்பதுதானே அர்த்தம்? அது மட்டுமல்ல, தன் மனத்துக்குகந்த விதத்தில் என்னைக் குறித்து இனிய கற்பனைகளிலும் இறங்கியிருக்கிறான். அவனுடைய அந்தப் பகற் கனவுகள் அரசியல் அரங்கத்தில் என்னை உலவ விட்டதுடன் நின்றனவா, அல்லது அந்தரங்க இதயபீடத்திலும் எனக்கு இடமளித்து இன்பமடைந்திருக்கிறானா? அது உண்மையானால்...... ஐயோ! எவ்வளவு பெரிய ஏமாற்

றத்தை அவனுக்கு நான் அளிக்கப் போகிறேன்? அவனுடைய ஆசைகளும் நம்பிக்கைகளும் வடிவேலு என்பவனுடைய அரசியல் வாழ்வைப் பொறுத்த வரையில் ஈடேறினாலும் அவனது குடும்ப வாழ்க்கை சம்பந்தப்பட்ட வரையில் பொய்த்துத் தான் போகப் போகின்றன.



அதை அறியும்போது அவனுக்கு ஏற்படக் கூடிய துன்பத்தை ஆண்டவன்தான் துடைத்தெறிந்து அருள வேண்டும்!'

தாராவின் மெல்லிய மென்மையான விரல்கள் அவன் நெற்றியில் படிந்தன. ''உடம்புக்கு என்ன?'' என்று கவலையோடு கேட்டாள் அவள். தலைகுனிந்து உட்கார்ந்திருந்தவன் தண்ணென்று தன் நெற்றியைத் தீண்டியது தாராவின் கரம் என்பதை உணர்ந்ததும் திடுக்கிட்டு நிமிர்ந்தான். ''மன்னியுங்கள்! ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்து விட்டேன். நீங்கள் என்ன கேட்டீர்கள்?''

''இப்போது ஒரு அவசரமும் இல்லை. நீங்கள் ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள். நாளை மீண்டும் சந்திப்போம்.''

வடிவேலு தாராவை நேருக்கு நேராகப் பார்த்தான். ''சேர்ந்தாற் போல் மூன்று வாக்கியங்களைப் பேசினீர்கள். மூன்றிலும் தவறான கருத்துக்கள்! இது தானா நீங்கள் சுபாஷ்பாபுவைப் புரிந்து கொண்டிருக்கும் லட்சணம்?''

தாராவுக்குக் கோபம் வரவில்லை. 'அடேயப்பா! கொள்ளைப் பேச்சு பேசக் கற்றுக் கொண்டு விட்டாரே! பழைய வடிவேலு இல்லை இவர்!' என்று எண்ணியவளாக வியப்புடன் புன்னகை புரிந்தாள். மற்றவர்களும் அவளுடன் வடிவேலுவைச் சூழ்ந்து அவன் முகத்தையே நோக்கினார்கள்.

''முதல் தவறு, 'அவசரமில்லை' என்றது. கணப் போதுகூட வீணாக்காமல் பல காரியங்களைச் செய்தாக வேண்டிய நெருக்கடி நிலைமை இது. பர்மாவுக்கு ஜப்பானியர் சுதந்திரமளித்து விட்டார்கள். ரங்கூனில் சர்க்கார் மாளிகையில் மயில் கொடி இப்போது பறப்பது போல் டெல்லி செங்கோட்டையில் வெகு சீக்கிரத்தில் மூவர்ணக் கொடி பறக்கும் என்று நேதாஜி அறிவித்து விட்டார். ஆமை வேகத்தில் நடை போடுவதை நாம் இன்று முதல் மறந்துவிட வேண்டும். சுதந்திர சேனை, பாரதநாட்டை அடிமைத்தனத்தி லிருந்து விடுவிக்கக் கிழக்கு எல்லைப்புறத்தை நெருங்கிக் கொண்டிருக்கும் இந்தச் சமயத்தில் நமக்கு ஓய்வு என்பதே கிடையாது. 'நாளை சந்திப்போம்' என்றீர்கள். அது சந்தேகத்துக்குரிய விஷயம். பிரிட்டிஷ் சர்க்காரின் ஸி. ஐ. டி.களுடைய திறமையைத் தொக்கி நிற்கின்ற சமாசாரம். ஆகவே கிடைத்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு நாம் பேசி விவாதிக்க வேண்டியதை யெல்லாம் முடித்துக் கொள்வோம்.''

''சுபாஷ் பாபுவைப் பற்றிச் சொல்லுங்கள்'' என்றாள் வடிவேலுவுக்கு எதிரே நின்ற ஒரு பெண்மணி. ''அவர் இறந்து விட்டார் என்று அறிவிக்கப்பட்டதும் நாங்களெல்லாம் எப்படிக் கதிகலங்கிப் போனோம்? எதிலுமே எங்களுக்குப் பற்றில்லாமல் போய் விட்டது. ஜெர்மனியில் தாம் சுகமாக இருந்ததை அவர் ஏன் முன்னமேயே அறிவிக்கவில்லை?''

''ஜெர்மனியில் அவர் வாழ்கிறார் என்பதே யுத்த ரகசியமாகி விட்டது. தம் நடவடிக்கைகளைப் பற்றிப் பிரிட்டிஷாருக்குத் தெரிவிக்கவேண்டிய தருணம் இன்னும் வரவில்லை என்று கருதியே அவர் மௌனமாயிருந்து வந்தார். மகன் மாண்டு விட்டதாய் எண்ணி மனம் நொந்து வருந்தப்படக் கூடிய தம் தாயாரைக் கூட அவர் சமாதானப் படுத்த முடியாத நிலையிலிருந்தார்.''



''அப்பா! எவ்வளவு வைராக்கிய முள்ள நெஞ்சம்! சிங்கப்பூர் வீழ்ச்சிக்குப் பிறகு ஆஜாத் ஹிந்த் ரேடியோவில் அவர் பேசினார் என்றதும் எங்களுக்கு மெய் சிலிர்த்தது. அப்போது இங்கே ஏற்பட்ட பரபரப்பு சொல்லி முடியாது!''

''சுபாஷ்பாபுவின் வாழ்க்கையே துரித கதியில் நடை போடும் ஒரு சரித்திர நாவலைப் படிப்பது போல் திடுக்கிடும் சம்பவங்களும் எதிர்பாராத திருப்பங்களும் நிறைந்த ஒன்றாகி விட்டது. இந்தியாவிலிருந்து மாறுவேஷத்தில் கிளம்பிய அவர் முதலில் ருஷ்யாவுக்குப்போய் அங்கு இந்திய சுதந்திரத்துக்கு ஆதரவு தேடுவதாய் இருந்தார். ஆனால் சந்தர்ப்பச் சூழ்நிலைகள் அதற்கு ஏற்றமாதிரியாக அமைய வில்லை. ஆகவே காபூலிலிருந்த இத்தாலிய தூதராலயத்தின் உதவியுடன் அவர் ஜெர்மனியை அடைந்தார். முதலில் திட்டமிட்டிருந்ததுபோல் அவர் ருஷ்யாவுக்குச் செல்லாததே நல்லதாயிற்று. ஏனெனில் அவர் ஜெர்மனியில் அடியெடுத்து வைத்த நான்கு மாதங்களுக்குள்ளாகவே ருஷ்யா மீது ஜெர்மானியப் படையெடுப்பு ஆரம்பமாகி விட்டது. நேச நாடுகளுள் ஒன்றாக ருஷ்யா மாறியது. நேதாஜி அங்கு சென்றிருந்தால் இவ்வளவு அரிய பெரிய காரியங்களைச் சாதித்திருக்க முடியுமா?''

''ஜெர்மனியில் அவர் மேற்கொள்ளக் கூடிய பணிகள் நிறைய இருந்தனவா?''

''ஆப்பிரிக்காவில் போரிட்ட பிரிட்டிஷ் படையினர் ஏராளமாக ஜெர்மனியிடம் சரணடைந்திருந்தனர். அந்த யுத்தக் கைதிகளில் பலர் இந்தியர்கள். அவர்களை ஜெர்மனிக்குத் தருவித்துச் சுதந்திர இந்தியா சேனையை உருவாக்கினார். ஆஜாத் ஹிந்த் ரேடியோ நிலையத்தை நிறுவினார். ஜெர்மனியில் வசிக்கும் போதுதான் அவரை 'நேதாஜி' என்று அன்புடனும் பண்புடனும் அனைவரும் அழைக்கத் தொடங்கினார்கள். 'ஜெய் ஹிந்த்!' என்று சுதந்திர இந்தியா சேனையைச் சேர்ந்தவர்கள் ஒருவரை யொருவர் சந்திக்கும்போது முகமன் கூறுகிற பாணியில் முழங்கும் பழக்கமும் ஏற்பட்டது.

''மலாயா வீழ்ந்ததும், தன்னுடன் சேர்ந்து ஜெர்மனியும் இத்தாலியும் இந்தியாவின் எதிர்காலம் பற்றி ஓர் அறிக்கை விட வேண்டும் என்று ஜப்பான் கோரியது. முஸோலினியை இதற்கு இணங்க வைத்தார் சுபாஷ். ஆனால் ஹிட்லர் இதனை ஏற்கவில்லை. இந்திய சுதந்திரம் பற்றிப் பிரகடனம் செய்வது ஐரோப்பாவைக் கபளீகரம் செய்துள்ள தனக்கே கூட அகலக்கால் வைப்பதற்கு ஒப்பாகும் என்று ஹிட்லர் நினைத்திருக்க வேண்டும். மேலும் வாதாடிப் பயனில்லை எனக் கண்டதும் ஜப்பானியரின் அழைப்பை ஒப்புக் கொண்டு நீர் மூழ்கிக் கப்பல் ஒன்றில் ஏறி டோக்கியோவுக்கும் அங்கிருந்து சிங்கப்பூருக்கும் வந்து சேர்ந்தார் சுபாஷ்பாபு.''

''அவர் வருவதற்கு முன்பாகவே மலாயாவிலும் இந்திய தேசிய ராணுவம் உருவாகியிருந்ததல்லவா?''

''ஆமாம்! ஜப்பானியரின் தூண்டுதலுடன் மோகன் சிங்கின் தலைமையில் ஏற்பட்டிருந்த இந்திய தேசிய ராணுவத்தில் சேர விரும்பிய இந்திய யுத்தக் கைதிகள் உடனடியாக ஜப்பானியரால் விடுதலை செய்யப்பட்டனர்.''

''ஜப்பானியருடைய நோக்கத்தை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால் நேற்று வரை உப்பிட்டவனை மறந்து, திடுமெனக் கட்சி மாறுபவர்களைச் சுயநலமிகளாகத்தானே நினைக்க வேண்டும்?''

இப்படி ஒருவன் கேட்டதும் அங்கே ஏககாலத்தில் கோபக் குரல்களும் கண்டனக் குரல்களும் எழுந்தன. இந்திய தேசிய ராணுவத்தைக் குறித்து, அதுவும் வடிவேலுவைப் பக்கத்தில் வைத்துக் கொண்டே மட்டமாகப் பேசுவதை அவர்களில் பலர் விரும்பவில்லை என்பது தெளிவாயிற்று.

வடிவேலு அவர்களைக் கையமர்த்தி அமைதியாக இருக்கச் செய்தான். ''அந்தக் கேள்வியைக் கேட்டவரை நான் பாராட்டுகிறேன். மனத்திலுள்ள சந்தேகங்களை விண்டுரைத்துக் கேட்டு விடுவதுதான் நல்லது. தர்க்கம் புரிந்து நல்ல முடிவெனத் தோன்றுவதை மேற்கொள்ளாமல் குருட்டு நம்பிக்கையுடன் எதையும் பின்பற்றுவதை நான் அடியோடு வெறுக்கிறேன்.

''இந்திய தேசிய ராணுவத்தில் சேருமுன்னர் நானும் நீண்டநேரம் ஆலோசித்திருக்கிறேன். நண்பர்களுடன் நன்மை தீமைகளை விவாதித்தும் இருக்கிறேன். இறுதியில் நான் கண்ட முடிவு பிரிட்டிஷாரின் கொள்கைப்படி ராஜத் துரோகமான செயல்தான். ஆனால் ஆங்கிலேய அரசாங்கம் நம் மிடத்தில் நியாயத்தைக் கடைப்பிடிக்கிறதா? அச்சு நாடுகளுடன் நடத்தும் இந்த யுத்தத்தில் சுதந்திரத்துக்காகவும் ஜனநாயகத்துக்காகவும் தாங்கள் போராடுவதாகப் பிரிட்டிஷார்சொல்லிக் கொள்கிறார்கள். பாரத மக்களின் ஜனநாயக சுதந்திர உணர்ச்சிகளை இவர்கள் மதிக்கிறார்களா? அவர்களுடைய சுதந்திரத்துக்காக நாம் ரத்தம் சிந்தத் தயாராக இருக்கையிலும் நம் சுதந்திரத்தைப் பற்றி அவர்கள் சிந்திக்க மறுக்கிறார்கள். சென்ற வருஷத்திய ஆகஸ்டு புரட்சி என்னவாயிற்று? கண்ணீர்ப்

# வதந்தியைக் கேட்காதீர்கள்—

நாட்டின் தற்கால ஆபத்தான நிலையில் மக்கள், விரிவான முறையில் செய்திகளையும் சரியான தகவல்களையும் கேட்க ஆவலுடன் இருக்கின்றனர். ஆகாசவாணி, அதிகப்படியான செய்தி அறிக்கைகளையும் விசேஷ நிகழ்ச்சிகளையும் வழங்கி, ஒலிபரப்பு நேரத்தை அதிகமாக்கி அவர்களது அவசரத் தேவையைப் பூர்த்தி செய்துவருகிறது. இந்த ஒலிபரப்புச் செய்திகளைக் கேட்பது மூலம் பீதி உண்டாக்கும் வதந்திகளை நிறுத்துவதுடன் நாட்டிற்குச் சேவை புரிவதற்கான பல வழிகளையும் நீங்கள் கற்றுக்கொள்ள முடியும்!

உங்களுக்கு இப்பொழுது ஒரு ரேடியோ தேவை—ஆம், இப்பொழுதே மிகமிகத் தேவை. என்றும் நட்புள்ள உங்கள் பிலிப்ஸ் வியாபாரி, உங்களுக்கு எப்பொழுதும் சேவை புரியக் காத்திருக்கிறார்.

# ஆகாசவாணிச் செய்திகளைக் கேளுங்கள்



## ரேடியோ நிகழ்ச்சிகளைக் கேளுங்கள், பிறரையும் கேட்கச் செய்யுங்கள்!

ஆகாசவாணியே கேளுங்கள்

அதிகாரபூர்வமான செய்திகள்
தலைவர்களின் பேச்சுக்கள்
விசேஷ நிகழ்ச்சிகள்

**பிலிப்ஸ் ரேடியோ**

பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்

JWTPHR 58A

புகை தடியடிப் பிரயோகத்துடன் நிறுத்தினார்களா? இல்லை! விமானத்திலிருந்த படி மிஷின் கன்னை இயக்கிச் சாரி சாரியாக மக்களைச் சாக அடித்தார்கள். கிராமங்களில் ராணுவத்தினரை ஏவி ஏழை எளியோர் சித்திர வதைக்குள்ளாகி மடிவதை வேடிக்கை பார்த்தார்கள். ஐந்நூற்றி முப்பத்தெட்டு முறை துப்பாக்கிப் பிரயோகம் நடந்திருக்கிறது. பத்தாயிரம் பேர்கள் மாண்டார்கள், அறுபதாயிரம் மக்கள் சிறைப்பட்டார்கள். பட்டினியுடன் பரிதவிக்கும் மக்களிடமிருந்து ஒரு கோடி ரூபாய் அபராதமாக வசூலித்திருக்கிறார்கள்.

'புரட்சி செய்வார்களா பாட்சி? மலையாகக் குவிந்து கிடக்கும் துப்பாக்கித் தோட்டாக்கள் தீரும்வரை சுட்டு வீழ்த்துவேன்!' என்று அன்றைக்கு மார் தட்டியதுடன் செய்தும் காட்டினான் ஜெனரல் டையர். அவன் குரூரத்தனத்துக்குச் சான்றாகச் சீமைவாழ் சீமாட்டிகள் பரிசாக அளித்த தங்கக் கத்தியையும் பெருமிதத்துடன் ஏற்றுக் கொண்டான். வெள்ளையன், ஆணவமிக்க அந்நிலையிலிருந்து இன்னும் கீழிறங்கி வர



வில்லை என்பதைக் காண்கிறோம். ஆனால் வேறு ஒரு மாறுதல் உண்டாகியிருக்கிறது. இன்று பிரிட்டிஷாரை எதிர்க்கும் இந்தியர்கள் சாது ஜனங்களல்ல, சிப்பாய்கள். குண்டுக்குக் குண்டு, ரத்தத்துக்கு ரத்தம், பழிக்குப் பழி என்று துடித்தெழுந்து பிரிட்டிஷாருக்கு அவர்களுக்குப் புரியும் பாஷையில் பாடம் கற்பிக்கத் தயாராக உள்ள இந்திய தேசிய ராணுவத்தினர்! தோழர்களே! பாரதத் தாயின் தளைகளைத் தகர்த்தெறிய நமது ராணுவம் தயாராக உள்ளது. மலாயாவிலிருந்து ஒரு பெரும் சேனை ஏற்கனவே பர்மாவுக்குள் புகுந்து போய்த் தக்க தருணத்தை எதிர்பார்த்துக் காத்திருக்கிறது!''

வடிவேலு பேசி முடித்ததும் அங்கே ''வாரே வாஹ்! அச்சா! ஹியர்! ஹியர்! ஆஹா!'' என்பது போன்ற பாராட்டொலிகள் எழுந்தன.

''உங்கள் சந்தேகங்கள் தீர்ந்தனவா?'' என்று கேட்டான் வடிவேலு, சற்று முன் வினா எழுப்பியவனை நோக்கி.

''முற்றிலும் தீரவில்லை!'' என்றான் அவன் அமைதியாக.

''சொல்லுங்கள், சொல்லுங்கள்!'' என்று அவனைப் பேசத் தூண்டினான் வடிவேலு.

''பிரிட்டிஷாரை நமது நாட்டின் விடுதலைக்காக எதிர்த்துப் போராட வேண்டும் என்கிற உங்கள் முடிவு சரிதான். ஆனால் முடிவை எட்டிப் பிடிக்கக் கையாளப்படுகிற வழி? நேற்று வரை உங்களுடைய பரம விரோதியாக நீங்கள் கருதிவந்த ஜப்பானியனை இன்று உங்களது உற்ற நண்பனாக எண்ணிக் கூட்டுச் சேருவது வியப்பளிக்கிறது.''

''அழகாகச் சொன்னீர்கள்! வரவேற்கிறேன்'' என்றான் வடிவேலு. ''ஜப்பானியனை நான் அடியோடு வெறுத்தேன், வாஸ்தவம்தான். இப்போதும் வெறுப்பு எங்கும் ஓடிப் போய்விடவில்லை. மனத்தின் அடித்தளத்தில் இருந்து கொண்டேதான் இருக்கிறது. மலாயாவில் அவர்கள் புரிந்த அக்கிரமங்களை நான் நேரில் பார்த்தவன். 'ஆசியா ஆசியர்களுக்கே' என்று பிரசாரம் செய்யும் இவர்களது உள்நோக்கத்தை நான் உணர்ந்தவன். ஆசியாவை ஆளவேண்டிய ஆசியர்களாகத் தங்களை மட்டுமே எண்ணுகிறார்கள் என்றும் மற்றவர்களை அவர்களுக்கு அடங்கி நடக்க வேண்டிய ஆசியர்களாகக் கருதுகிறார்கள் என்பதும் எனக்குத் தெரியும். இல்லாவிட்டால் தங்கள் தாய்நாட்டிலும் மலாயாவிலும் சீன மக்கள் அவ்வளவு கொடுமைக்கு உள்ளாகியிருக்க மாட்டார்கள். இதையெல்லாம் நன்கு புரிந்து கொண்டிருப்பதினாலேதான் நான் இந்திய தேசிய ராணு



வத்தில் சேர்ந்தேன்! சீனாவிலும் மலாயாவிலும் ஜப்பானியர்கள் நிகழ்த்திய அட்டூழியங்கள் பாரத புண்ணிய பூமியிலும் நடைபெறாமல் உடன் வரும் இந்திய தேசிய ராணுவத்தினர் பாதுகாப்பார்கள். பர்மாவைப் பிடித்து விட்ட ஜப்பானியன் அஸ்ஸாமுக்குள் விரைவில் புகத்தான் போகிறான். டில்லி வரையில் சென்று நம் தலை நகரைப் பிரிட்டிஷாரின் ஆட்சியிலிருந்து விடுவிக்கத்தான் போகிறான். அப்போது அங்கு நிறுவப்படுகிற அரசாங்கம் டோக்கியோவின் கைப்பாவையாக விளங்கக் கூடியதாயிராமல், பாரத மக்கள் பெருமைப்படக் கூடிய சக்தி வாய்ந்த சுதந்திர சர்க்காராக அமைய, அருகிலேயே எச்சரிக்கையுடன் இருக்கும் ஐ. என்.ஏ. துணை புரியும். இந்திய மக்கள் வாணலியிலிருந்து தப்பி நெருப்பில் விழாமல் இருக்க இன்று ஐ. என். ஏ. பலப்பட்டுத்தானாக வேண்டும். அதற்கு நம் அனைவரது ஒத்துழைப்பும் தேவை. நண்பரும் தட்டாமல் தயங்காமல் ஆதரவு அளிப்பார் என்றே நம்புகிறேன்.'' — இப்படிச் சொல்லிவிட்டு வடிவேலு தன் புருவங்களையும் விழிகளையும் உயர்த்தி எதிரே இருந்த வாலிபனை நோக்கினான்.

ஐயப்பாடுகள் அனைத்தும் நீங்கப் பெற்று அவன் வடிவேலுவின் தோள்களில் கரம் பதித்து அழுத்தினான். ''பாயி! சுபாஷ் பாபுவின் லட்சியங்களைச் சரியாக விளக்கி எனக்கிருந்த குழப்பங்களை நீக்கிப் பேருதவி புரிந்திருக்கிறீர்கள். உங்களுக்கு நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். இனி நான் தாய்நாட்டுக்காக எந்த விதமான கடுமையான சோதனைக்கும் உட்படத் தயார்!'' என்று உருக்கமான குரலில் மொழிந்தான்.

## அத்தியாயம் 6

# சரிந்த கோபுரம்

இரண்டு மூன்று தினங்களுக்குப் பிறகு வடிவேலுவின் விருப்பத்தை யொட்டி டில்லியின் பல்வேறு பகுதிகளையும் தாரா அவனுக்குச் சுற்றிக் காண்பித்துக் கொண்டிருந்தாள். குதுப்மினாரை நோக்கிக் கார் சென்று கொண்டிருக்கையில், ''தேனூரிலிருந்தபோது என்னடா வாத்தியாரய்யா வீடு பூட்டிக் கிடக்கிறதே என்று யோசித்தேன். அரிச்சுவடியையே கட்டிக் கொண்டு அழுபவர் மனத்திலேயும் சுதந்திரக் கனல் மூண்டெழ முடியுமென்பது இப்போதுதான் தெரிகிறது!'' என்றான் வடிவேலு, வாத்தியார் வெங்கிட்டுவிடம் கிண்டலாக.

''ஆமாம், தம்பி! பள்ளிப் பிள்ளைகளுடன் போராடுவதை விடத் தேசத்துக்குப் போராடுவதே மேலென்று பட்டது. கிளம்பிவிட்டேன். தாராவும் உதவிக்கு யாரேனு மிருந்தால் தேவலை என்று என் காதில் போட்டு வைத்திருந்தாள். அகத்துக்காரியைப் பெண்ணோடே மெட்ராஸிலே இரு என்றுகூறி விட்டு விட்டு இங்கே வந்தேன். அது சரி, நீ தேனூருக்குப் போயிருந்தாயா என்ன?'' என்றார் வெங்கிட்டு.

''ஆமாம்'' என்ற வடிவேலு பக்கத்திலிருந்த தாராவை நோக்கிக் கூறினான்: ''தாரா! நீங்கள் தொடங்கி வைத்த பள்ளியை இப்போது பார்த்தால் பிரமித்துவிடுவீர்கள்!''

தொடர்ந்து கிராமத்தில் தான் கண்டு கேட்டவற்றை யெல்லாம் அவ்விருவருக்கும் சுவாரஸ்யமாக விவரித்தான்.

''சாமியார் கோலத்தில் அங்குபோனவர் ஸர்தார்ஜியின் வேஷத்தில் என்னைச் சந்தித்தீர்கள். ஆனால் இப்போது மட்டும் பழைய வடிவேலுவாகவே நீங்கள் மாறி விட்டீர்களே, ஏன்?'' என்று கேட்டாள் தாரா.

''நான் வந்த காரியம் தீர்ந்துவிட்டது தாரா. உங்களையும் உங்களுடைய ரகசிய சங்கத்தின் அங்கத்தினர்களையும் சந்தித்தாகி விட்டது. இனி நான் பிரிட்டிஷாரிடம் அகப்பட்டுக் கொண்டால்தான் என்ன?''

''பேச்சைப் பார் பேச்சை!'' என்று கடிந்து கொண்டாள் தாரா. ''தயவு செய்து ஜாக்கிரதையாக இருப்பதாக எனக்கு வாக்குறுதி கொடுங்கள்!''

''அடடா! திடீரென்று அடியேன்மீது ஏன் இத்தனை அக்கறை ?''

''கையிலிருக்கும் மோதிரம் நழுவி எங்கோ விழுந்து விடுகிறது. பல நாட்களுக்குப் பிறகு கடவுள் புண்ணியத்தில் அது திரும்பவும் கிடைக்கிறது. அப்போது முன்னை விட அதை மிகவும் பத்திரமாக வைத்துப் பாதுகாப்போம் அல்லவா? அதே போல் நீங்கள் எனக்குக் காணமற் போய்க் கிடைத்த பொக்கிஷமாயிற்றே?'' தாரா சிரித்துக்கொண்டே வேடிக்கையாகத்தான் இப்படிக் கூறினாள். ஆனால் வடிவேலுவின் உள்ளத்தில் பெரும் புயலை இந்த வார்த்தைகள் கிளப்பி விட்டன. தன்னைத்தானே நொந்து கொள்பவனாக இடிந்து போய் அமர்ந்திருந்த அவன் வண்டி நின்று விட்டதையோ, தாரா கீழே இறங்கித்

# CASTOPHENE
## CHOCOLATE LAXATIVE




மலச்சிக்கலுக்கு

சிறந்த

துரிதமான

குணமளிக்கும்

நிவாரணி

எங்கும் கிடைக்கும்

காஸ்டோபின்
மான்யுபாக்சரிங் கம்பெனி
வொர்லி பம்பாய்-18




# அன்றும் இன்றும் தரமென நிரூபிக்கப்பட்ட காபி



ஸ்டேன்ஸ் காபி அதனுடைய புத்தம் புதிய சுவை மிகுந்த நறுமணத்திற்காகவே தேர்ந்தெடுக்கப் படுகிறது.

உண்மையிலேயே ஸ்டேன்ஸ் சுத்தமான காபியை விட இந்தியன் காபியில் சிறந்தது வேறெதுவுமில்லை.

**காபி வாங்கும்போது ஸ்டேன்ஸை மறவாதீர்கள்**



தி யுனைடெட் காப்பி சப்ளை கம்பெனி லிட.
தபால் பெட்டி நெ. 12, கோயமுத்தூர்

# கால் அரிப்பு சரும அரிப்பு

அரிப்பு எரிச்சல் முதலிய உபாதைகளை உங்களால் தாங்கமுடியாமல் பைத்தியம் பிடித்து விடும் போலிருக்கிறதா? உங்கள் சருமத்தில் வெடிப்புகள் தோன்றி தோல் உரிந்து ரத்தம் கசிகிறதா? பாதங்களிலும் கால் விரல்களுக்கிடையிலும் புண்கள் தோன்றி உபத்திரவம் செய்கின்றனவா? இவைகள் வெடித்துக் கசிந்து மேலும் புண்களை உண்டாக்குகின்றனவா? இவைகளுக்கெல்லாம் மூலகாரணம் சிங்கப்பூர் சொறி, வண்ணாரப் படை என்று பல பெயர்களில் வழங்கப்படும் ஒருவகைக் கிருமி. மூல காரணமான இந்தக் கிருமிகளை ஒழிக்கும்வரை இவ்வுபாதைகளிலிருந்து நிவாரணமடைய முடியாது. விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்ட நிக்ஸோடர்ம் (NIXODERM) முதல் தடவை போட்டவுடனேயே அரிப்பை நிறுத்தி கிருமிகளைக் கொன்று, சருமத்தின் புண்ணை ஆற்றி, மிருதுவாக்கி சுத்தப்படுத்த ஆரம்பிக்கிறது. நிக்ஸோடர்ம் (NIXODERM) அரிப்பை நிறுத்துவதில் வெற்றி கண்டுள்ளது. மேலும் பாதத்தின் மேலிருக்கும் புண்கள், மேகப் படை, முகப்பருக்கள், கட்டிகள், முகத்திலோ அல்லது தேகத்திலோ பரவிய படர் தாமரை முதலிய உபாதைகளைக் குணமாக்குகிறது. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடர்ம் NIXODERM வாங்குங்கள். பூர்ண திருப்தியை இது நிச்சயமாக அளிக்கும்.

> பிறருக்கு முக்தி நிலை கிடைப்பதற்காக நீ நரகத்துக்கும் செல்லத் துணிவாய். 'என்னுடைய முக்தி' என்று தனதாகச் சொந்தம் பாவிக்கும் ஒரு நிலையே கிடையாது. ஏனெனில் 'முக்தி' என்று ஏற்படும்போது அதில் எனது என்று சுயநலமாகச் சிந்திப்பதே இயலாத விஷயமாகும்.
>
> —ஸ்வாமி விவேகானந்தர்

தனக்காகக் காத்திருப்பதையோ கவனிக்கவேயில்லை. "உங்களுக்கு என்ன வந்துவிட்டது? இப்படி அடிக்கடி நீங்கள் மௌனச் சாமியாராகி விடுகிறீர்களே?" என்று கேட்டுத் தாரா அவனை உலுக்கி எழுப்பினாள்.

காரை விட்டு வெளி வந்த அவன் குதுப்மினாரைப் பார்ப்பதில் சிரத்தை இழந்தவனாக, "இப்படி மர நிழலில் இளைப்பாறலாம், தாரா!" என்றான்.

"நன்றாய்த்தான் இருக்கிறது. இங்கேயும் அரட்டை அடிக்கத்தான் வந்தீர்களா?" என்று கேட்டார் மாஜி பள்ளிக்கூட வாத்தியார் வெங்கிட்டு. "நாலுவது ஏறிப் பார்த்துவிட்டு வருகிறேன்" என்று வானளாவும் அந்தக் கோபுரத்தை நோக்கி நடந்தார்.

வேப்பமரம் ஒன்றின் நிழலில் வடிவேலுவுக்கு எதிரில் அமர்ந்தாள் தாரா. "சுபாஷ்பாபுவைப் பற்றியும் சுதந்திர சேனையைப் பற்றியும் விவரித்தீர்கள். ஆனால் நேதாஜி எங்களிடம் என்ன எதிர்பார்க்கிறார் என்று கூறவில்லையே நீங்கள்? சங்க அங்கத்தினர்கள் அதைத் தெரிந்து கொள்ள ஆவலாய் இருக்கிறார்கள்."

"முதலாவதாக இது போன்ற ரகசியச் சங்கங்கள் நாட்டின் மூலை முடுக்குகளில் எல்லாம் தோன்ற வேண்டும். இப்போதுள்ளவற்றின் எண்ணிக்கை நான் எதிர்பார்த்ததை விட மிகவும் கம்மியாகவே இருக்கிறது. என்னைப் போலவே வேறு பல ஒற்றர்கள் இங்கு வந்துள்ளார்கள். என்னுடன் இம்முறை ஐந்தாறு பேர்கள் நீர் மூழ்கிக் கப்பலில் வந்து கத்தியவார் கடற்கரையில் இறங்கினார்கள். மேலும் பலரும் வருவார்கள். இவர்களெல்லாம் அவ்வப்போது உங்களுடன் தொடர்புகொள்வார்கள். அவர்களிடம் உங்களுக்குத் தெரிந்த வரையில் பிரிட்டிஷ் ராணுவம், இந்த நாட்டின் பொருளாதார நிலவரம் இவற்றைப் பற்றிய தகவல்களைத் தெரிவிக்க வேண்டும். இப்படிச் சேகரித்த செய்திகளை அவர்கள் ரேடியோ மூலம் நம் தலைவருக்குக் கிடைக்கச் செய்வார்கள். ஐ. என். ஏ. ராணுவத்தினர் பாரத நாட்டில் அடியெடுத்து வைக்கும்போது மக்கள் அவர்களை அன்புடன் வரவேற்கவும் அவர்களுக்கு உறுதுணையாக நிற்கவும் ஏற்ற சுமுகமான அரசியல் சூழ்நிலையை உருவாக்கவும் நீங்கள் உழைக்க வேண்டும். இதையெல்லாம் விட மகத்தான பணி ஒன்றும் உள்ளது..."

"என்ன அது?"

"இங்குள்ள பிரிட்டிஷ் ராணுவத்தில் உங்களுடைய சங்க அங்கத்தினர்களில் பெரும்பாலோர் சேர வேண்டும்."

"என்ன சொன்னீர்கள்?"

"அவசரப்படாமல் முழுவதையும் கேள், தாரா! அப்படி சேர்ந்த பிறகு அவர்களில் ஒவ்வொருவரும் ராணுவத்தில் உள்ள இந்திய வீரர்களிடம் மெல்லப் பேச்சுக் கொடுத்துச் சிறிது சிறிதாக அவர்களை நம் பக்கமாகத் திருப்ப வேண்டும். ஐ. என். ஏ.யிடமும் நேதாஜியிடமும் அவர்களுக்கு மதிப்பும் மரியாதையும் பிறக்கச் செய்வதுடன் தேசபக்தியையும் ஊட்ட வேண்டும். மிகுந்த சாமர்த்தியத்துடன் இவ்வாறு நடந்து கொண்டால் அஸ்ஸாமில் ஐ. என். ஏ. துருப்பினர் நுழைந்து முன்னேறுகையில் பிரிட்டிஷ் இந்திய ராணுவ வீரர்கள் அவர்களை எதிர்ப்பதற்குப் பதிலாக அவர்களுடனே தாங்களும் சேர்ந்து கொண்டு டில்லியை நோக்கி வீறு நடை போடுவார்கள்!"

"அபாரமான யோசனை!" என்று ஆனந்தத்துடன் ஆமோதித்தாள் தாரா.

"யோசனை நல்லதாக இருந்தால் போதுமா? அதிகாரிகளுக்குச் சந்தேகம் ஏற்படாத வகையில் கெட்டிக்காரத்தனமாக நடந்துகொள்ள வேண்டுமே?"

தாரா அதைப்பற்றிக் கவலைப்படுவதாகத் தெரியவில்லை. "இதைச் சொன்னால் போதும், நண்பர்கள் அப்படியே சந்தோஷத்தில் கூத்தாடுவார்கள்!" என்றாள். "அன்றைக்கு மட்டும் என்ன? உங்கள் பேச்சிலே அப்படியே சொக்கிப் போய் விட்டார்களே!"

"தாரா! அன்றைக்கு நான் ரோஜா மலரை மட்டும்தான் அவர்களுக்குச் சித்திரம் எழுதிக் காட்டினேன்; முட்களை வரையவில்லை."

"அப்படியென்றால்?"

"மலாயாவிலிருந்த பிரிட்டிஷ் இந்தியச் சிப்பாய்கள் அனைவருக்கும் திடீரென்று தேசபக்தி பொங்கி எழுந்து விட்டதாய்க் கூற முடியாது. கைதிகள் முகாமில் இருந்த பலரைக் கட்டாய உழைப்புக்காக அடிமைகளாக்கிப் பசிபிக் தீவுகளுக்கு ஜப்பானியர் அனுப்பிக் கொண்டிருந்தனர். இந்தக் கதி நமக்கும் நேர்ந்து விடுமோ என்று பயந்து ஐ. என். ஏ.வில் சேர முன் வந்தவர்கள்

பலர். இப்போதைக்குச் சுதந்திர சேனையில் சேர்ந்து வைத்தால் பின்னர் சந்தர்ப்பம் கிடைக்கும்போது பிரிட்டிஷார் பக்கம் பாய்ந்து விடலாம் என்று நினைத்திருப்பவர்களும் நிறையப்பேர்கள் உண்டு. சுயமாகச்சிந்திக்கும் திறனின்றிப் பிறருடைய வற்புறுத்தலுக்கு இணங்கி ஏனோ தானோ வென்று தங்கள் பெயரைப் பதிவு செய்து கொண்டவர்கள் வேறு. மோகன் சிங்குக்குப் பெரிய பதவி கிடைத்ததும் அவரிடத்தில் நல்ல பெயர் எடுத்துத் தங்கள் நிலையை உயர்த்திக் கொள்ளப் பல ஐ. என். ஏ. அதிகாரிகள் ஆசைப்பட்டார்கள். 'நான் எத்தனை பேர்களைச் சுதந்திரச் சேனையில் சேர்த்திருக்கிறேன் பார்!' என்று பெருமையுடன் அவரிடம் சொல்லிக்கொள்ள விரும்பினார்கள். இதற்காகக் கைதிகள் முகாமில் இருந்த பல பிரிட்டிஷ் இந்திய வீரர்களை அவர்களுடைய இஷ்டத்துக்கு விரோதமாக ஐ. என். ஏ.வில் சேருமாறு துன்புறுத்தினார்கள். ஜப்பானிய பாணியில் பயங்கரமான சித்திரவதைகள்கூட நடைபெற்றன. இன்று அந்தச் சுதந்திர சேனையில் எத்தனை வீரர்கள் நாம் செய்தது நியாயம் என்ற உறுதியுடனும் திடமான நெஞ்சத்துடனும் இருக்கிறார்களோ தெரியாது. ஏன், எனக்கேகூடப் பல தடவைகளில் ராஜத் துரோகம் இழைத்து விட்டோமே என்ற சஞ்சலம் உண்டாகிறது!''

தாரா அனுதாபத்துடன் அவனை நோக்கினாள். ''உங்கள் சங்கடம் எனக்குப் புரிகிறது. ஆனால் தாய்நாட்டின் விடுதலைக்காகப் போரிடக் கூடிய பொன்னான சந்தர்ப்பத்தை நீங்கள் வேண்டுமென்றே கைநழுவ விட்டால் அது தேசத் துரோகமாகாதா? அதை யோசிக்க வேண்டாமா நீங்கள்?''

''அப்படி எண்ணித்தான் சமாதானப் படுத்திக் கொள்கிறேன். ராஜத் துரோகத்தை மறந்துவிட முயன்று வெற்றியும் காணலாம். ஆனால் உனக்கு நான் செய்து விட்ட மகத்தான துரோகத்தை எப்படி மன்னிப்பது?''

திடுக்கிட்டவளாகத் தாரா எழுந்து நின்றாள்.

''எத்தனை நாளைக்கு ஒத்திப் போட முடியும் தாரா? என்றைக்கேனும் ஒரு நாள் உனக்குத் தெரியத்தானே போகிறது. தாரா! எனக்குக் கல்யாணமாகி விட்டது!''

சில விநாடிகள் தாரா அப்படியே சிலையாக நின்றாள். 'அந்தக் குதுப்மினாரைப் போலவே தான் அமைத்திருந்த வானளாவும் காதல் கோபுரம் சரிந்து தன் தலையிலேயே விழப் போவதாக அவளுக்குப் பிரமை தட்டுகிறதா? இல்லாவிட்டால் குதுப்மினாரை வெறித்துப் பார்த்தவாறே அவள் ஏன் பின் நோக்கித் தட்டுத் தடுமாறி நடக்கிறாள்? ஆட்டம் கண்டுவிட்ட கோபுரம் தகர்ந்து விழுந்தால் அவளைத் தாக்கக் கூடிய கற்களிலிருந்தும் பாறைகளிலிருந்தும் அவளைக் காக்க அவளுடைய கரங்கள் தாமாகவே அவள் முகத்துக்கு நேராக உயருகின்றனவே? அப்படித் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளத் தாரா விரும்பவில்லை போலும். பின் வாங்குவதை விடுத்து அவள் குதுப்மினாரை நோக்கி ஓட்டம் பிடிக்கிறாள். அடப் பாவமே! அந்தக் காதல் கோபுரம் தகர்ந்து விழாமல் கைலாகு கொடுத்துத் தாங்கலாம் என்று எண்ணுகிறாளோ? அதுவுமில்லை! இதோ கோபுர வாசலினுள்ளே நுழைந்து படிகளிலே விரைந்தேறிச் செல்கிறாளே, அதற்கு என்ன பொருள்? தன்னால் சமைக்கப்பட்ட அந்தக் காதல் கோபுரம் தவிடுபொடியாகு முன்னர் அதில் ஏறி அதன் உச்சியிலிருந்தே கீழே விழுந்து உயிரை மாய்த்துக் கொள்ளலாம் என்பதுதானே?'

வடிவேலு துணுக்குற்றான். ''தாரா! நில் நில்!'' என்று கூவிக் கொண்டே அவளைப் பின்தொடர்ந்து தலைதெறிக்க ஓடினான். (தொடரும்(

# பாத்திரம்!

பெயரில் மட்டுமல்லாது, வாழ்விலும் தர்ம தாதாவாக விளங்கிய தர்மலிங்கம் போய் விட்டார்.' அவருடைய அறுபது வயது வாழ்க்கைப் பயணம் அன்று விடியற்காலே நான்கு மணியோடு முடிந்து விட்டது. தூங்கிக் கொண்டிருந்த மனைவியை எழுப்பி, 'நெஞ்சை அடைக்குது, ஒரு டம்ளர் தண்ணீர் கொண்டுவா' என்று கேட்டாராம். அவள் தண்ணீர் கொண்டு வரும்போது குடிக்க அவர் இல்லை.

ஊரே இரண்டு தர்மலிங்கத்தின் வீட்டுக்குள்ளேயும் வாசலில் போட்டிருந்த பந்தலுக்குள்ளேயுமாக அடைத்துக் கொண்டிருந்தது. அவருடைய செல்வாக்கும் புகழும் சாமானியமானவையா?

''புண்ணியம் செஞ்ச ஆத்மா: அவர் செஞ்ச தர்மந்தான் அவரை ஒரு நோய் நொடி இல்லாமல் கொண்டு சேர்த்துவிட்டது'' என்று அவர் வாழ்ந்த முறையையும் 'புறப்பட்ட' முறையையும் இணைத்துச் செல்லித்துக் கொண்டது கூட்டம்.

'அவர் வாழ்ந்த முறைக்குப் பலன் இப்படி நோய் நொடி இல்லாமல் போய்விட்டது மட்டும்தானா?' இந்தக் கேள்வியைச் சந்தர்ப்பம் தெரியாமல் 'இழவு' வீட்டில் வைத்து எழுப்பி என்னைக் குடைந்தது என் மனம். என் மனம் சுபாவத்திலேயே ஓர் அடங்காப் பிடாரி. அதற்கு எந்தச் சந்தர்ப்பத்தில் எதைப் பற்றிச் சிந்திப்பது என்று கிடையாது. திடீர் திடீரென்று என்னுடன் விசித்திரமான வாதங்களில் ஈடுபட்டு விடும். அன்று அதைத் தாண்டி விடுவது போல் சூழ்நிலையும் அமைந்து விட்டது.

ஒரு மனிதருடைய வாழ்க்கையைப் பற்றிக் கணக்கெடுக்க நாம் தேர்ந்து வைத்திருக்கிற இடமே துக்க வீடுதான். அன்றும் அப்படித்தான். வீட்டுக்குள் அழுகை ஓலம் ஒலித்துக் கொண்டிருந்தபோது வாசலில் போட்டிருந்த பந்தலுக்குள்ளிருந்த நாங்கள் சிலர் மேற்படி கணக்கெடுப்பில் ஈடுபட்டிருந்தோம். அங்கிருந்தவர்கள் அநேகர் பரிணும நியதிப்படி தர்மலிங்கம் போன வழியில் அடுத்துப் புறப்பட 'கியூ'வில் நிற்கும் பிராயத்தினர்தாம். அதனுல் பேச்சில் வேதாந்த நெடி சற்று அதிகமாக இருந்தது.

''எவ்வளவு போக பாக்கியம்! என்ன தோரணை! கடைசியில் ஒரு வாய்த் தண்ணீர் குடிக்க முடியாமல்தான் போய் விட்டார். எல்லாம் அவ்வளவுக்குள்தான்!'' என்றார் ஒருவர். அவர் தர்மலிங்கத்துக்குப் பக்கத்து வீட்டுக்காரர். தர்மலிங்கத்தின் 'போக பாக்கியத்தில்' இவருக்கு நெடுநாட்களாகக் கொஞ்சம் பொறுமை உண்டு. அது 'அவ்வளவுக்குள் தான்' என்று ஆகிவிட்டதில் ஏதோ ஓர் ஆத்ம திருப்தி.

''என்ன அப்படிச் சொல்லிட்டீங்க? அவர் ஒரு தர்மவானுக இருக்கப் போய், அந்த வயதிலேயும் அவர் கேட்டவுடன் தண்ணீர் எடுத்து வர ஆள் இருந்தது. உங்களுக்கும் எனக்கும் கடைசிக் காலத்தில் அப்படி ஒரு உதவியாவது இருக்க வேண்டுமே!'' என்று முன்னவரை நாசூக்காகக் குத்தினுர் இன்னெருவர்.

''ஆங்! தர்மம் என்ன தர்மம்! வாழுன் முடிஞ்ச பின் எதுவும் வகைக்கு உதவாது'' என்று ஆரம்பித்தார் முதல்வர். அதற்குள் என் மனம் அவருடைய வார்த்தையைப் பற்றிக் கொண்டு தன் பாதையில் ஓட ஆரம்பித்தது.

தர்மலிங்கம் செய்த தர்மத்தின் பலனைப் பற்றி இரண்டு அபிப்பிராயங்கள் இருக்க முடியும். ஆனுல் அவர் செய்த தர்மத்தின் அளவைப் பற்றி இரு அபிப்பிராயத்துக்கு இடமே இல்லை. அவருடைய கணக்கில் இருந்த பொருள் அதிகமா அல்லது மனத்தில் இருந்த அருள் அதிகமா என்று கண்டுபிடிப்பதுகடினம்.

''ஊருக்கெல்லாம் அள்ளிக் கொடுத்துட்டு ஆண்டியாகத்தான் போகப் போகிறுன் பார்!''



தாமரை மணாளன்

என்று அவருடைய குடும்பத்தைச் சார்ந்தவர்கள் பாதி அநுதாபத்துடனும், பாதி வயிற்றெரிச்சலுடனும் பேசுவார்கள்.

ஆனால் தர்மலிங்கம் அடிக்கடி இப்படிச் சொல்வார். ''மொண்டு குடிக்கிறதினலேயே கிணற்றில் தண்ணீர் வற்றிப் போகாது ஊற்று நின்று போனால்தான் வற்றும்.''

அவருடைய வருமான ஊற்று வற்றவில்லை. எனவே லட்சாதிபதியாக வாழ்க்கையை ஆரம்பித்தவர் இன்று லட்சாதிபதியாகத்தான் புறப்பட்டுப் போகிறார். இதற்கிடையில் அவர் கிணற்றில் 'மொண்டு' குடித்தவர் ஏராளம். அவர் எத்தனை பையன்களைப் படிக்க வைத்து முன்னேற வைத்தார், எத்தனை நொறுங்கிப் போன குடும்பங்களைத் தாங்கி நிறுத்தினர், எத்தனை சங்கங்களுக்கு உதவி செய்தார், அந்தக் கூட்டத்தோடு கூட்டமாக எத்தனை புள்ளிகள் அவரிடம் தர்மத்தின் பெயரால் கொள்ளையடித்தன என்பதெல்லாம் எண்ணிலடங்காத நீளப் பட்டியல்.

''வேய்! என்ன யோசிக்கிறீர்? இத்தனை செய்தாரே, அந்த மனிதர், அதுக்கு என்ன மதிப்புக் கிடைச்சிருக்கு? 'தர்மம் என்ன தர்மம்' என்றுதானே பேச்சாக இருக்கிறது''' என்று என்னை வம்புக்கிழுத்துத் தர்க்கம் பண்ண ஆரம்பித்தது என் மனம்.

''இவர்களுக்காகவா அவர் தர்மம் செய்தார்? இவர்கள் துதி அவருக்குத் தேவையில்லை'' என்று நான் அதை மடக்கினேன்.

''அவர் செய்த தர்மத்துக்கெல்லாம் பலன் மறுமையில்தான் என்பீர். அப்படியானால் அதற்கு இம்மையில் ஒரு பலனும் இல்லையா?''

''இல்லாமல் என்ன? அப்படிச் சொன்னரே அவர் ஒருவர்தான் உலகமா? பார், அவருடைய மரணத்தைக் கேள்விப்பட்டு எவ்வளவு பேர்கள் அவர் வீட்டில் கூடியிருக்கிறார்கள்...!''

''போம் ஐயா! உலகம் தெரியாதவராக இருக்கிறீரே! எனக்கென்னவோ இந்தக் கூட்டம் தர்மலிங்கத்தின் தர்மத்தை மதித்துத்தான் கூடியிருப்பதாக நம்ப முடியவில்லை. இதேமனிதர் தர்மம்செய்து செய்து சொத்தையெல்லாம் இழந்து தரித்திரராக இருந்திருந்தால் இப்படிக் கூட்டம் கூடியிருக்குமா? அதனால் கூட்டத்தைப் பார்க்காமல் அதன் போக்கைக் கவனியும்.''

''உன் வக்ரபுத்தியைக் காட்டிக்கொள்ளாமல் சும்மா இரு!''

நான் இப்படி மனத்துடன் போராடிக் கொண்டிருக்கும்போது பந்தலுக்குள் பேச்சுக் குரல் எழுந்தது.

''வேண்டியவங்களுக்குச் சொல்லி விட வேண்டாமா?''

''அந்தப் புண்ணியாத்மாவுக்கு வேண்டியவங்க இந்தத் தேசம் பூராவும் இருக்காங்க. எல்லாருக்கும் செய்தி அனுப்ப முடியுமா?''

''தூரத்தில் இருக்கிறவங்களை விடுங்க. பக்கத்து ஊரிலிருக்கிறவங்களுக்குச் சொல்லி விட வேண்டியதுதான். யாருக்குத் தகவல் அனுப்பினலும் அனுப்பா விட்டாலும் நம்ப கலெக்டர் பையனு'க்குக் கட்டாயம் அனுப்பி வைக்கணும்.''

''ஆமாம், ஆமாம்.''

''தந்தி அடிச்சிடலாம்.''

''எக்ஸ்பிரஸ் தந்தியா அடிங்க.''

தந்தி அடிக்க ஒருவர் ஓடினர்.

அந்தக் கலெக்டர் பையன் இருபது வருஷங்களுக்கு முன்னல் உள்ளூர் கோவில் கட்டிசாதத்தைத் தின்பதும் முன் மண்டபத்தில் உறங்குவதுமாகக் காலம் தள்ளியவன். அன்றொரு நாள் அவன் கட்டியிருந்த சுவாமி பரிவட்டக் கந்தலை அவிழ்த்து



விட்டு, தர்மலிங்கம் வாங்கிக் கொடுத்த நிஜாரையும் சொக்காயையும் மாட்டிக் கொண்டு பள்ளிக்குப் போகத் தொடங்கியது முதல் ஐ. ஏ. எஸ். பரீட்சையில் தேறிக் கலெக்டராகப் பதவி ஏற்கச் செல்லும் வரையில் அவன் வாழ்வு தர்மலிங்கத்தின் நிழலில்தான்.

கலெக்டருக்குத் தந்தி அடித்திருக்கிறது என்றதும், ஊரில் உள்ள பெரிய மனிதர்களுக்கெல்லாம் ஒரு பரபரப்பு. பெரிய மனிதர்கள் என்றால் ஆயிரம் காரியங்கள் இருக்குமே? தர்மலிங்கத்தை அனுப்பி வைக்கும் வேலையை விடக் கலெக்டரை வரவேற்கும் வேலைகளில்தான் சிலர் உற்சாகமாக ஈடுபட்டார்கள்.

''என்ன உமக்கும் கலெக்டரிடம் ஏதாவது ஆக வேண்டியதிருக்கிறதா?'' என்று குரல் எழுப்பியது என் மனம்.

ஸ்வாமி விவேகானந்தரின் பெருமை உலகெங்கிலும் பரவப் பெரிதும் காரணமாக இருந்த தமிழகத்தில் சென்னை திருவல்லிக்கேணியில் அவர் ஆற்றிய ஓர் உரையிலிருந்து நெஞ்சம் உருக்கும் ஒரு பகுதி.

இளைஞர்களே,

பொருளற்றவர்களுக்காகவும் அறிவற்றவர்களுக்காகவும் நான் படும் பாட்டையும், அவர்களிடம் எனக்குள்ள அநுதாபத்தையும் உங்களுக்கு என் சொத்தாக வழங்குகிறேன். அதைப் பெற்றுக் கொண்டு இதோ பார்த்தசாரதிப் பெருமான் ஆலயத்துக்குச் செல்லுங்கள். ஆயர்பாடியில் தனத்தில் ஏழைமையுடனும், குலத்தில் தாழ்மையுடனும் வாழ்ந்த இடையர்க்கு உற்றவனாக வளர்ந்த பார்த்தசாரதியைச் சென்றடையுங்கள். வேட்டுவனை குகனைக்கட்டி அணைக்கத் தயங்காத தாசரதியாக வந்தவன் அவன். புத்தராக அவதரித்த போது, செல்வச் சீமான்களின் அழைப்பைப் புறக்கணித்துத் தாசி ஒருத்தியைத் தேடிச் சென்று அவளை உயர்த்தியவன் அவன். அந்தப் பெருமானின் திருமுன்னர் உடல் முழுதும் தண்டனிட்டு வணங்குங்கள். யாருக்காக அந்தப் பிரபு மீண்டும் மீண்டும் பிறப்பெடுக்கிறானோ, யாரை எல்லோருக்கும் மேலாக நேசிக்கிறானோ அந்த ஏழைகளுக்கும், தாழ்த்தப்பட்டவர்களுக்கும் இன்னல் இழைக்கப்பட்டவர்களுக்கும் உங்கள் வாழ்வு முழுவதையும் தியாகம் செய்யுங்கள்.

''ஏன் அப்படிக் கேட்கிறே?''

''இல்லே, ஒரேயடியாகக் கலெக்டர் சிந்தனையில் மூழ்கி விட்டீரே என்று கேட்டேன். எல்லாம் நம்ம ஊர்க் கலெக்டர்தான். அவர் வந்த பிறகு பார்த்துக் கொள்ளலாம். இப்ப உம்ம பக்கத்தில் புதுசா ஒருவர் தோல் பையும் கையுமாக வந்து உட்கார்ந்திருக்கிறாரே, அவரைக் கவனியும்.''

அவர் ஒரு சங்கக் காரியதரிசி. தர்மலிங்கம் அந்தச் சங்கத்துப் போஷகர்களில் ஒருவர். அவர் பெயரால் அந்தச் சங்கத்தில் எத்தனையோ காரியங்கள் நடந்தன.

''எல்லாரும் மனிதர். அவுகளும் ஒரு மனிதரா? எங்க சங்க வளர்ச்சின்னா அவுகளுக்கு ஒரு தனி அக்கறை! எங்க சங்கத்துக்காகப் புதிதா ஒரு கட்டடம் கட்டித் தர்றதாகச் சொன்னாக. அது ஆண்டவனுக்குச் சம்மதமில்லாமல் போய் விட்டது. தாங்க கொடுத்து வைச்சது அவ்வளவுதான்!'' என்றார் அவர் குரல் கரகரக்க.

''பாத்திரமேவ!'' என்று ஆரம்பித்தது எனக்குள் எதிர்க் கட்சித்தனம் பண்ணிக் கொண்டிருந்த மனச்சாட்சி.

''என்ன?''

''தம்ப காரியதரிசிக்கு எது ரொம்பக் கவலை தெரியுதா? தர்மலிங்கம் முன்னாலே செய்ததை யெல்லாம் விட, கட்டடம் கட்டிக் கொடுக்காமல் போய் விட்டதுதான் ரொம்ப ஆற்றாமை.''

''உனக்கு எப்போதும் இந்த விதண்டாவாதம்தான். எதையும் நேராகப் பார்க்கிற புத்தி கிடையாது.''

''எப்படிப் பார்த்தாலும் நேராகத் தெரிந்தால்தான் ஒரு விஷயத்தை உண்மையிலேயே நேராக இருக்கிறது என்று ஒப்புக் கொள்ள முடியும். அதனாலே பார்க்கிற பார்வையைப் பற்றிக் குறை சொல்லாமல் இருக்கிற விஷயத்தைப் பற்றி யோசனை பண்ணும்.''

என்னால் பதில் சொல்ல முடியவில்லை.

மாலை ஐந்து மணி சுமாருக்குக் கலெக்டர் காரில் வந்து இறங்கினார். உள்ளூர் பட்டாமணியம் முன் நிற்க ஊரே அணிவகுத்து நின்று கலெக்டரை வரவேற்றது. அவர்களுடைய வரவேற்பை ஏற்றுக் கொள்ளுவதாகவும் அதற்குத் தம் பதில் வணக்கத்தைத் தெரிவிப்பதாகவும் உய்த்துணரும்படி தலையை மேலும் கீழுமாக அசைத்து விட்டுத் தம்முடன் வந்த பணியாளிடம் ஏதோ சமிக்ஞை காட்டினார் கலெக்டர். அவன் காரின் பின்புறத்தில் இலையில் பொதிந்து வைத்திருந்த ஒரு ரோஜா மாலையைத் தூக்கிக் கொண்டு அவரைத் தொடர்ந்தான். தர்மலிங்கத்தின் சடலம் இருந்த இடத்தருகே சென்றதும் கலெக்டர் பணியாளிடமிருந்து மலர்மாலையை வாங்கித் தர்மலிங்கத்தின் உடலில் வைத்தார். அவர் கரங்கள் கோட்டுப் பாக்கெட்டிலிருந்து கைக்குட்டையைத் துழாவி எடுத்தன.... பொங்கி வந்த கண்ணீரைத்தான் துடைத்தாரோ, அல்லது கண்ணீர் பொங்கி வராததைத்தான் சாமர்த்தியமாக மறைத்தாரோ தெரியாது; ஆனால் அவர் முகத்தில் இரண்டு நிமிஷங்கள் கைக் குட்டை இருந்தது என்னவோ உண்மை.

ஒருவழியாக, பணியாளின் 'மாலைச்சுமப்பு' உதவியுடன், தர்மலிங்கத்துக்குத் தம் இறுதி மரியாதையைத் தெரிவித்துத் தம் கடமைச் சுமையை இறக்கி விட்டுப் பந்தலுக்குள் வந்தார் கலெக்டர். துக்க வீட்டுக் கூட்டம் முழுவதுமே கலெக்டரைச் சுற்றி நெருக்கியடித்துக் கொண்டு நின்றது.

''தந்தி அடிக்கும்போது எங்களுக்கு யோசனைதான், ஐயாவுக்கு வேலை எப்படியோ, வர முடியுமோ முடியாதோன்னு'' என்றார் ஒருவர் கலெக்டரிடம்.

''வேலை நெருக்கடிதான். இருந்தாலும் இந்தச் சந்தர்ப்பத்தில் வராமல் இருந்தால் நல்லா இருக்குமோ?'' என்றார் கலெக்டர்.

கூடியிருந்தவர்களில் ஒவ்வொருவருக்கும் கலெக்டரிடம் ஒரொரு வார்த்தையாவது பேசி தங்களை அறிமுகப்படுத்திக் கொள்ளவோ, அல்லது பழைய அறிமுகத்தைப் பசுமைப்படுத்திக் கொள்ளவோ வேண்டுமென்ற துடிப்பு. பேச்சு என்று ஆரம்பமானதும் எவ்வளவோ பேச்சுக்கள்! நிலவரியை வஜா பண்ணித் தருவது, தங்கள் குளத்துப் பாசனத்துக்காக அணைத் தண்ணீரைத் திறந்து விடுவது, அறுபது நாற்பது வாரத் தகராறு, இத்யாதி, இத்யாதி..... இடையிடையே சந்தர்ப்பம் பார்த்துக் கலெக்டரின் கனூர் ஆட்சியில் ச,

அனைவரோடும் ஒத்து வாழ். நானே பெரியவன் என்ற அகம்பாவத்தை அறவே ஒழிப்பாய். பயனற்ற வாதப் போர் மகா பாபமாகும். அதில் ஈடுபடாதே.

பாமர மனிதனை விடச் சிறிது பண்புள்ள வார்த்தைகளைப் பேசத் தெரிவதால் நீங்கள் உங்களைப் பெரியவர்களாகக் கருதுகிறீர்கள். பண்பில் பெரியவர் நாம், அறிவில் பெரியவர் நாம் என்ற எண்ணம் என்று உங்களிடம் புகுகின்றதோ அன்றே நீங்கள் அழிந்து விடுவீர்கள். எல்லாத் தீமைகளையும்விடப் பயங்கரமானது அறிவுச் செருக்கேயாகும்.

— ஸ்வாமி விவேகானந்தர்

ளக்கூட நின்று பயப்படுவதாகத் தெரிவித்து அவர் முகத்தில் புன்முறுவலை வரவழைத்து அதன் மூலம் அவருடைய அபிமானத்தைக் கவரும் சூரத்தனமான பேச்சுக்களும் உண்டு. ஆகமொத்தம், அந்தப் பேச்சுக் குவியல்களுக்குள் தர்மலிங்கத்தின் விஷயம் சுத்தமாக அடிபட்டுப் போய் விட்டது.

ஆனால் கடைசியில் புறப்படும் போது, தாம் செய்ய வேண்டியது அவருக்கு நினைவுக்கு வந்து விட்டது. தர்மலிங்கத்தின் பிள்ளையிடம், "என் ஆழ்ந்த வேதனையைத் தெரிவித்துக் கொள்கிறேன்" என்று ஆங்கிலத்தில் சொல்லி விட்டுத்தான் விடைபெற்றார்.

கலெக்டர் துக்கம் விசாரித்து விட்டுச் சென்றதும் கூட்டத்தில் ஒரு பகுதி கலைந்து விட்டது. பந்தலுக்குள் இருந்தவர்களோ வேலை நெருக்கடியின் மத்தியிலும் விசுவாசத்துடன் வந்து போன கலெக்டரின் 'பெருந்தன்மை'யைப் பற்றியும், கலெக்டர் விரைவில் கவனிப்பதாகத் தங்களுக்கு வாக்குறுதியளித்துச் சென்ற விஷயங்களைப் பற்றியும் பேசிக் கொண்டிருந்தார்கள். குறிப்பாக வெகு நாட்களாகத் தண்ணீர் விடப்படாமல் இருந்த ஊர்க் குளத்துக்கு கலெக்டர் அணையிலிருந்து விரைவில் தண்ணீர் விடுவதாகச் சொல்லியிருந்த 'கருணை' மிகுந்த வாக்குறுதி எல்லாருடைய விசேஷப் பாராட்டுக்கும் நன்றிக்கும் உரித்தாகியிருந்தது. ஆனால் அந்தக் குளத்தைத் தம் சொந்தச் செலவில் ஊருக்காகத் தர்மலிங்கம் வெட்டிக் கொடுத்தது பற்றி யாரும் பேசவில்லை. அது ரொம்பப் பழைய விஷயமல்லவா? எல்லாருக்கும் அது மறந்திருக்கலாம்.

மயானத்தில் தர்மலிங்கத்தின் இறுதிக் கிரியைகள் முடியும் போது இருட்டி விட்டது. ஆனால் அந்த இருட்டைப் பற்றி உணர்வில்லாத மன இருட்டு எனக்கு. தர்மம் என்றால் எவ்வளவு பெருமையாகப் பேசப்படுகிறது! அவ்வளவு பெருமையுடனும் புனிதத்துடனும் உலகம் அதை உண்மையில் மதிக்கிறதா?

குழம்பிய மனத்துடன் திரும்பி வந்து கொண்டிருந்த என் காதில் யாரோ தேம்பித் தேம்பி அழும் குரல் கேட்டது. கூர்ந்து பார்த்தேன். மயானத்தை ஒட்டியிருந்த ஒரு மரத்தோடு ஒன்றி நின்று அழுது கொண்டிருந்தான் ஒரு பிச்சைக்காரன்.

திகைப்புடன் அவன் அருகே சென்று, "ஏம்பா, இங்கே நின்று அழுது கொண்டிருக்கிறாய்?" என்று விசாரித்தேன்.

அவன் வெகு சிரமத்துடன் தன் விம்மலை அடக்கிக் கொண்டு, "நான் ஊர் ஊரா அலைறவனுங்க. இந்த ஐயா காலமாகி விட்டாங்க. அதைக் கேள்விப்பட்டு அவங்க முகத்தைக் கடைசித் தடவையாகப் பார்க்கணும்னு ஓடி வந்தேன். பாவி, கொஞ்சம் முந்தி வந்தேனில்லே. நான் வர்றதுக்குள்ளே தீ வைச்சுட்டாங்க" என்றான்.

"தர்மலிங்கத்தை உனக்கு முன்னாலேயே தெரியுமா?"

"ஒரே ஒரு தடவை. அதுவும் ராத்திரி நேரத்திலேதான் பார்த்திருக்கேனுங்க. அது இன்னும் என் நெஞ்சிலே நிற்குதுங்க. அன்னைக்கொரு நாள் எங்கெல்லாமோ சுற்றி விட்டுப் பசியோடு வதங்கிப்போய் இந்த ஊர்க் கோவில் வாசலிலே படுத்திருந்தேன். அப்ப இந்த ஐயா எங்கேயோ வெளியே போயிட்டுத் தற்செயலா கோவில் பக்கம் வந்திருக்காங்க. நான் அங்கே படுத்திருந்ததைக் கவனிச்சிட்டாங்க. உடனே என்னை வீட்டுக்கு அழைச்சிக்கிட்டுப் போய்ச் சாப்பாடு போடச் சொல்லி நான் சாப்பிடும் வரை என் பக்கத்திலேயே இருந்தாங்க. அப்புறம் அவங்க வீட்டிலேயே படுக்கச் சொன்னாங்க. விடியற் காலமே நான் எழுந்து புறப்படும் போது இருபத்தைந்து ரூவாயை எங்கிட்டே கொடுத்து ஏதாச்சும் தொழில் செய்து பிழைக்கச் சொன்னாங்க. என் தரித்திர புத்தி என்னைவிட்டுப் போகுமா? பழையபடியும் அப்படியே அலைஞ்சு திரிஞ்சிக்கிட்டு இன்னிக்குத்தான் பக்கத்தூர்கிட்டே வந்தேன். இந்தச் செய்தி காதிலே விழுந்ததும் ஓடி வந்தேன். அன்னிக்குப் பார்த்த தெய்வ முகத்தை இன்னொருதடவை பார்க்கக் கொடுத்து வைக்காத பாவியாகி விட்டேனே!" என்று கூறிவிட்டு அவன் மீண்டும் விசும்பத் தொடங்கி விட்டான்.

அவன் கண்ணீரைத் துடைக்க எனக்குச் சக்தி இல்லை. ஆனால் அந்தக் கண்ணீர் என் உள்ளக் குழப்பத்தைக் கரைத்து விட்டது. அக்கண்ணீரில் தர்மத்தின் ஒளி ஜாஜ்வல்யமாகப் பிரகாசிப்பதாகத் தோன்றியது.

"பகல் முழுவதும் யார் யாரோ தேடினீரே! ரோஜாப்பூ மாலையுடன் காரில் வந்தவர் கொண்டு வராததை, கண்ணீருடன் கால் கடுக்க ஓடி வந்திருக்கிறானே இவன் கொண்டுவந்திருக்கிறான் பார்த்தீரா! தர்மலிங்கம் இட்ட பிச்சையை எத்தனையோ பாத்திரங்கள் வாங்கின. ஆனால் ஆயிரம் ஆயிரமாக வாங்கிய பாத்திரங்களைவிட, ஒருவேளை அன்னத்தை வாங்கிய இந்தப் பாத்திரம்தான் உண்மையில் தகுதியான பாத்திரமாக இருந்திருக்கிறது. இந்தப் பாத்திரத்துக்கு அவர் இட்டதுதான் அவருடைய தர்மத்தை அர்த்தமுள்ளதாக்கிப் பெருமைப்படுத்தியிருக்கிறது" என்றது என் மனம்.

புதிய ஒளி பெற்ற உத்சாகம் என்னுள் நிறைந்தது.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

# சிறந்த அமிலநாசினியும், மலமிளக்கியும்




## நம்பிக்கை

ஒவ்வொரு துறையிலும சில தயாரிப்புகள்தான்
சிறந்த குணமும், பல வருடங்களாக நம்
பிக்கையானதாகவும் பெயர் பெற்று உயர்ந்த இடம்
பெற்றிருக்கின்றன. இந்தநம்பிக்கையான தன்
மைதான் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா உலகில்
எல்லோராலும் அங்கீகரிக்கப்பட்டும் 75
வருடஙகளுக்கு மேலாக சிபார்சு
செய்யப்பட்ட உலகமறிந்த
தாயரிப்பும் ஆகும்.

அதிகாரம் பெற்ற தயாரிப்பாளர்கள்:

டேஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் ( மான்யுபாக்சரிங் - பிரைவேட் லிமிடெட்

REGISTERED No. M. 4392

Registered as a Newspaper in Ceylon

